# சித்திரக்கவிகள்

(CHITTIRAKKAVIKAL)


பதிப்பாசிரியர்

**வே. இரா. மாதவன்**

**Editor**

**V. R. MADHAVAN**



**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**டி. டி. டி. ஐ. தரமணி**

**சென்னை—600 113**

**International Institute of Tamil Studies**

**T. T. T. I. Taramani**

**MADRAS—600 113**

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | — | Chittirakkavikal |
| Editor | — | V. R. MADHAVAN, B.Sc., M.A., B.Ed., Diploma in Cartooning, Diploma in Manuscriptology, Diploma in Siddha Medicine, Research Assistant International Institute of Tamil Studies. T.T.T.I. Post, Madras-600 113. |
| Publisher | — | International Institute of Tamil Studies, T.T.T.I. Post, Madras-600 113. |
| Publication Number | — | 82 |
| Language | — | Tamil |
| Date of Publication | — | December, 1983 |
| Edition | — | First |
| Paper used | — | 16Kg. D/Demy |
| Size of the book | — | 21×14 Cms. |
| Printing types used | — | 10, 12, 18 Points |
| Number of Copies | — | 1200 |
| Number of Pages | — | 434+xx= 454 |
| Price | — | Rs. 25/— (Rupees Twenty Five) |
| Printers | — | Novel Art Printers, Madras-600 014 Phone : 82731 |
| Binding | — | Cardboard |
| Artists | — | Amudone & V. R. Madhavan |
| Subject | — | A Study on Chittirakkavi - a variety of metrical Composition fitted into fanciful figures, one of Nal-Kavi in Tamil. |

டாக்டர் ச.வே. சுப்பிரமணியன்
இயக்குநர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# முன்னுரை

உலக மொழிகளுள் அழகும் இனிமையும் தொன்மைச்சிறப்பும் ஒருங்கே அமையப் பெற்ற தமிழ் மொழியின் வளமை அளப்பரியது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகப் பல நூல்களைஆக்கித்தந்து, அவற்றை வழி வழி பாதுகாத்துப் பழகி வந்தபெருமை தமிழருக்கு உண்டு. ஆயினும், காலத்தால் அழிந்த நூல்கள் பல. நமது கவன மின்மையால் கழிந்த நூல்கள் பல. இவ்வாறு தமிழரின் பெரு மையை முழுமையாக அளவிடமுடியாது அரைகுறையாய் மறைந்த நூல்கள் பலவற்றுள் சிந்தனைக்கு விருந்தளிக்கும் சித்திரக் கவிகள் பல இன்று கிடைக்கவில்லை. இந்நிலையில் இக்கவிகளை முறை யாகத் தொகுத்துக் காணும் முகமாக இந்நூல் அமைகிறது. இது ஒரு புதிய முயற்சி.

சித்திரக்கவிகள் என்னும் இந்நூல் இதுவரை வெளிவராத ஒரு தனி நூலாக அமைகிறது. சுமார் 85 ஆண்டுகளுக்கு முன்பு திரு வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள் சித்திரக்கவி விளக்கம் என்ற பெயரில் ஒரு நூல் வெளியிட்டுள்ளார். அதில் 22 வகைகளே விளக்கப்பட்டுள்ளன. அதன் பிறகு இதுபற்றி ஆய்வுக்குப் பயன்படும் வகையில் நூல்கள் வெளிவந்ததாகத் தெரியவில்லை. இப்பொழுது வெளியிடப்படும் இந்நூலில் 80 வகை களுக்கு மேற்பட்ட சித்திரக்கவிகள் விளக்கப்பட்டுள்ளன. 50க்கும் மேற்பட்ட சித்திர வடிவங்கள் அமைத்துக் காட்டப்பட்டுள்ளன.

இலக்கண நூல்கள் கூறும் சித்திரக்கவி வகைகள், இலக்கியங் களால் அறியப்படும் புதிய வகைகள், பல வகைகள் ஒன்று சேர்ந்து அமையும் இணைந்த வடிவங்கள் என முப்பெரும் பிரிவுகள் இந் நூலில் உள்ளன. சித்திரக்கவிகளைப் பற்றிய ஓர் ஆய்வு முன்னுரையை முதற்பகுதியில் அமைத்திருப்பது ஆய்வாளர்களுக்கு மிகவும் பயன்படும்.

சித்திரக்கவி இயற்றுவது மிக அருமை. நல்ல மொழிப் புலமை யும் கலைநோக்கும் கொண்டவர்களே இவற்றைப் படைக்க முடியும். இவை இலக்கணப் பிழையில்லாமலும், பொருள் பொதிந்தவையாகவும், சிறப்பாகவும் அமையும் வியத்தகு கவிகளா கும். இக்கவிகளை அவற்றிற்கேயுரிய சித்திரங்களுடன் சேர்த்துப் படிக்கும்போது மிகவும் வியப்புண்டாகிறது. தமிழ்ப் புலமைக்கு இது ஒரு மணி முடியாகவே திகழ்கிறது எனலாம்.

சித்திரத்தில் அமையும் கவிகளேயல்லாமல், குறிப்பிட்ட ஒரு யாப்பில் அமையும் ஒரே பாடலைப் பல்வேறு சந்தங்களுடன் பல் வகை யாப்புகளில் அமைத்துக் காட்டுவதும் சித்திரக்கவிகளென அறியப்படுகிறது. அத்தகைய பாடல் ஒன்று இதில் இணைக்கப் பட்டுள்ளது. இப்பாடல் ஒன்றையே 125 வெவ்வேறு பாடல் களாக அமைத்துள்ளதும், அவற்றிற்கான எதுகை மோனை போன்றவை மாறாது காணப்படுவதும் மிகவும் அரிய செயலாகும். இத்தகு கவிகள் பல இந்நூலுள் உள்ளன. இவை யாவும் தமிழுல கிற்கு மிகவும் பயன்படுமென நம்புகிறேன்.

நிறுவனம் நடத்திவரும் தமிழ் இலக்கியக் கொள்கைக் கருத்தரங்கில் (96ஆவது கருத்தரங்கு) படிக்கப்பட்ட சித்திரக்கவிகள் என்னும் தலைப்பில் அமைந்த ஒரு கட்டுரை இப்பொழுது தனி நூலாக உருப்பெற்று வெளிவருவதில் நிறுவனம் பெருமை கொள்கிறது.

திரு வே. இரா. மாதவன் அவர்கள் மிகவும் அரிதின் முயன்று இந்நூலினைத் தொகுத்துள்ளார். நூலினை அறிமுகம் செய்யும் வகையில், இதுவரை அறியப்படாத 'அன்னபந்தம்' என்னும் புதியதொரு சித்திரக்கவியையும் அவரே எழுதிச் சேர்த்துள்ளார். இதுபோன்ற சித்திரக்கவிகளை அழகாகவும் எளிமையாகவும் இன்றும் செய்தளிக்கமுடியும் என்பதற்கு இது ஒரு சான்றாகும். சித்திரக்கவிகளை முறையாக இந்நூலுள் வகைப்படுத்தியிருப்ப துடன் அங்கங்கே குறிப்புரை, கருத்துரை, விளக்கவுரை போன்ற வற்றையும் எழுதிச் சேர்த்திருப்பது சிறப்பாகும். திரு. மாதவன் ஓவியக்கலையிலும் ஈடுபாடு மிக்கவர், ஆதலால் இக்கவிகளுக்கான சித்திரங்களையும் அவரே வரைந்து அமைத்துள்ளார்.

நன்முயற்சியும், ஊக்கமும், ஆற்றலுமுடைய இந்நூலாசிரியர் திரு வே.இரா. மாதவன் அவர்களைப் போற்றிப் பாராட்டுகிறேன். இது போன்ற பல நல்ல நூல்களை அவர் தமிழுக்குத் தரவேண்டு மென வேண்டுகிறேன்.

எல்லா நிலைகளிலும் இந்நிறுவனத்தின் செயல்கள் அனைத் துக்கும் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற கல்வி அமைச்சர் மாண்புமிகு செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றியும் வணக்கமும்.

இந்நூலினை உரிய காலத்தில் முறையாகவும் சிறப்பாகவும் அச்சிட்டுத் தந்த நாவல் ஆர்ட் அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு எங்கள் நன்றியுரியது.

சென்னை-113 அன்புள்ள
டிசம்பர்-1983 ச.வே. சுப்பிரமணியன்

# என்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடர்ந்து நடத்தி வரும் கருத்தரங்குகள் தமிழ் மொழித்துறையில் ஓர் உலகசாதனை என்றே கூறவேண்டும். மாதந்தோறும் நடைபெறும் தமிழ் இலக்கியக் கொள்கைக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட, நூற்றுக்கு மேற்பட்ட கட்டுரைகள் இதுவரை எட்டுத் தொகுதிகளாக வெளிவந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது. அவற்றுள் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்திரண்டாமாண்டு செப்டம்பர் மாதம் முப்பதாம் நாள் (30-9-1982) நடைபெற்ற தொண்ணூற்றாறாவது தமிழ் இலக்கியக் கொள்கைக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட 'சித்திரக்கவிகள்' என்னும் கட்டுரை இப்பொழுது தனி நூலாக உருப்பெற்றுள்ளமைக்காக மகிழ்கிறேன். அத்துடன், இக்கட்டுரையும் நூலும் உருவான வரலாற்றையும் நினைத்துப் பார்க்கிறேன்.

சித்திரம் வரைவது எனது பொழுதுபோக்கு. கவிதையைப் பயில்வதும் பயிற்றுவிப்பதும் என் பணி. காஞ்சி காமகோடிபீடம் சங்கராச்சாரிய சுவாமிகள், இந்தியக் குடியரசுத் தலைவர் திரு வி.வி. கிரி அவர்கள், பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் போன்ற பல பெரியவர்களைச் சித்திரமாக வரைந்து அவர்களிடமே பாராட்டும் பெற்றுள்ளேன். வண்ண ஓவியங்களையும் வனப்புமிகு கைவினைப் பொருள்களையும் செய்து மகிழ்வதை என் கலைப் பணியாகக் கருதுகிறேன். தற்பொழுது நிறுவனம் நடத்திவரும் சுவடியியல் வகுப்பில் பயிலும் மாணவர்களுக்குச் செய்யுளியல் நடத்தும் பணியின் பயனாகக் கவிதை மரபுகள் சிலவற்றை அறியும் வாய்ப்பினையும் பெற்றேன். சித்திரம் மற்றும் கவிதைக்கும் எனக்கும் உள்ள தொடர்பு இவ்வளவே. மற்றவர்களைப் போலவே, சித்திரக்கவி என ஒரு கவி உண்டென அறிவேனாயினும் அதனை நுணுகி ஆய்ந்ததில்லை.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநரும், என் ஆய்வு நெறியாளரும், வாழ்வு வழிகாட்டியுமாகிய மதிப்பிற்குரிய பேராசிரியர் டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் எம்.ஏ., பிஎச்.டி.அவர்கள் 'சித்திரக்கவிகள்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை அளிக்க வேண்டுமெனச்சுமார் ஓராண்டுக்கு முன்பு என்னைப் பணித்தனர். தமிழறிஞர் பலரும் படிப்பதற்கே அஞ்சும் அருங்கவிகள் பற்றி ஓர்

ஆய்வு நிகழ்த்துவதற்கு முதலில் அஞ்சினேன். மதிப்பிற்குரிய ஐயா அவர்களின் வழிகாட்டுதலும் ஊக்கமும் பெற்றுக் கட்டுரையை உருவாக்கினேன். இதுவரை வெளிவந்த இலக்கியக் கொள்கை கட்டுரைகள் இல்லாத அளவிற்குப் பெரிய கட்டுரையாகவே இது அமைந்தது. பல புதிய செய்திகளும் கிடைத்தன.

வடமொழியிலும், தெலுங்கு போன்ற திராவிட மொழிகளிலும் சித்திரக் கவிகள் உள்ளமையை நோக்கும்போது தொன்மைச் சிறப்புடைய தமிழ் மொழியில் இக்கவிகளின் நிலை என்ன என்பது ஆய்வுக்குரியதே. தமிழில் நாற்கவிகளுள் ஒன்றான இச்சித்திரக் கவிகள் தனித்த இலக்கிய வகையாகுமா? அவற்றில் பொருள் உண்டா? இவற்றுக்கு யாப்புத் தேவையா? இவை யாவும் மரபாகுமா? இவை மக்களைப் புகழ்ந்து பாடும் பாடல்களா? வெறும் படத்தை வரைந்து அதனுள் ஒரு பாடலை அடக்கிவிடுவதுதான் சித்திரக் கவியா? இவை வழக்கில் இல்லாது மறைந்ததற்கான காரணம் என்ன? இக்காலத்தில் இக்கவி இயற்றுவோர் உண்டா? என இவ்வாறு பலவினாக்கள் எழுந்ததன் விளைவாய் இவற்றைத் தொகுத்துக் காணவேண்டும் என்னும் ஆவலும் மிகுதியாயிற்று.

கட்டுரையில் கிடைத்த பல செய்திகளை ஆய்ந்த பொழுது, இதையே ஒரு தனிநூலாக உருவாக்கினால் பலருக்கும் பயன்படுமென்றும், அதன்வழி தமிழின் பெருமை சிறக்குமென்றும் விழைவு கொண்ட இயக்குநர் அவர்கள் தமிழில் கிடைக்கக் கூடிய சித்திரக் கவிகளைத் தொகுத்து ஒரு தனிநூலாக்கும்படி என்னைப் பணித்தனர். அவ்வகையில் ஒரு சிலவற்றை இந்நூலில் தொகுத்துத்தர முயன்றுள்ளேன்.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறுவதே மரபு. தண்டியலங்காரம், மாறனலங்காரம் போன்ற அணியிலக்கண நூல்களே இச்சித்திரக்கவிகளைக் கூறுகின்றன. எனினும், அவற்றிற்கும் முன்பாகவே இவை வழக்கில் இருந்தன என்பது மிகத் தெளிவு. ஆயின், இவை பற்றிய நூல்கள் பல இன்று கிடைக்கவில்லை. அண்மையில் தோன்றிய கவிகள் கூட இன்று கிடைப்பது அரிதாகவுள்ளது. பலரின் ஆர்வமின்மையால் பல கவிகள் அழிந்தன. மறைந்த தமிழ் நூல்களுள் இவையும் அடங்கும் எனலாம். ஆயின், இன்று கிடைக்கும் வகைகளுள் ஒருசிலவற்றையாவது ஒன்றுதிரட்டித் தொகுக்க வேண்டுமென்னும் நோக்குடனேயே இந்நூல் அமைக்கப்பெற்றது.

கலையுணர்வும், கற்பனைத்திறனும், கவிப் புலமையும் ஒருங்கே பெற்று அமைப்பது சித்திரக்கவி. கட்டுக்கோப்பான

எண்ணமும், கவர்ச்சியும், கருத்துப் புலப்பாடும் தோன்றச் செய்வதே இவற்றின் தனிச்சிறப்பு. இத்தகு அடிப்படைக் கருத்துகளைக் கொண்டே இவை ஆராயப்பட வேண்டும். இந்நூலின் முதற்பகுதி 'சித்திரக்கவி-ஓர் ஆய்வு' என்ற தலைப்பில் சித்திரக் கவிகள் பற்றிய பொதுவான எண்ணங்களை ஆய்வுக் கண்ணோட்டத்துடன் எடுத்துரைக்கிறது. அடுத்துள்ள பகுதியில் இலக்கண நூல்கள் கூறும் சித்திரக்கவி வகைகளை வரிசையாகக் காணலாம். அதனையடுத்து இலக்கியங்களில் புதிதாகக் கிடைக்கும் வகைகளும், இறுதியில் ஒன்றும் பலவும் இணைந்த சில வகைகளும் சேர்த்தளிக்கப்பட்டுள்ளன.

சித்திரக் கவிகளுள் பல வெவ்வேறு கால கட்டங்களில் எழுந்தவை. எனவே, அவ்வக்கால நிலைக்கேற்ப மொழி நடையிலும் மாறுபாடு காணலாம். சில பாடல்கள் மிகவும் கடுமையான நடையிலும் உள. ஆயின், பொருள் புலப்பாடு இன்றியமையாதது என்பதால் இயன்றவரை பாடல்களுக்கான பொருள்களைத் தேவைக்கேற்ப விரிவாகவும் சுருக்கமாகவும் அங்கங்கே எடுத்துக் காட்டியுள்ளேன். சில மிக எளிமையாக உள்ளதாலும், சிலவற்றுக்கு அந்தந்த ஆசிரியரின் உரை கிடைக்கவில்லை என்பதாலும் உரை கொடுக்கப்படவில்லை.

பார்ப்போரைப் பரவசமடையச் செய்து பாராட்டும் படியாக அமைப்பதே ஓவியப் பாடல்கள். இத்தகு பாடல்களை இயற்றுவது அருமை. அதற்கான படவடிவுகளைச் சேர்த்தமைப்பது அருமையிலும் அருமை. சித்திரக்கவி எனில் பெரும்பாலும் அனைவரும் எதிர்நோக்குவது ஓவியங்களில் பந்திக்கப்பட்ட கவிகளே. எனவே, இத்தகு கவிகளுக்கான ஓவியங்களையும் இயன்றவரை வகைக்கு ஒன்றாக எழுதிச் சேர்த்திருக்கிறேன். இப்படவடிவுகளை உருவாக்கும்பொழுது இவற்றின் அருமைப்பாடுகளும் விளங்கின. பார்ப்பதற்கு எளிதாக இருப்பினும் அவற்றுள் எழுத்துகளைப் பொருத்தி வரையும்பொழுது ஏற்படும் இடர்ப்பாடுகளைக் கவிகளே அறிவர். ஆயினும், மொழிப் புலமையும் கற்பனைக் கண்ணோட்டமும் கொண்டவர்கள் முயற்சி செய்யின் இவற்றை எளிதாக அமைக்க இயலும். தமிழ்ப்புலமை மிக்கவர் பலர் இன்றும் இவை போன்ற கவிகளை இயற்றி வருகின்றனர்.

தமிழில் பல ஆய்வு நூல்களும் தொகுப்பு நூல்களும் வெளிவர வேண்டுமென்ற ஆர்வத்துடன், மிக உறுதியுடன், தளராது தமிழ்ப் பணி ஆற்றிவரும் பேராசிரியர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்,

அவர்களின் பெருமுயற்சியின் பயனாய் விளைந்த நூல்கள் பல. அவற்றுள் ஒன்றாக இச்சித்திரக்கவிகள் நூலையும் அமைத்த பெருமை அனைத்தும் அவரையே சாரும். இத்தகு நற்பணிக்காக அன்னாருக்கு என் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் உருவாக்கத்திற்குத் துணை நின்ற நூலாசிரியர்களுக்கும் பதிப்பாசிரியர்களுக்கும் மிகவும் நன்றிகூறும் கடப்பாடுடையேன். பல பழந்தமிழ் நூல்களைப் பார்வையிடவும் படியெடுக்கவும் இசைவு நல்கிய மறைமலையடிகள் நூலகத்தார்க்கும் நூலகருக்கும் பெரிதும் நன்றி உடையேன்.

இந்நூலினைத் தொகுப்பதிலும் செப்பம் செய்வதிலும் துணை நின்றதுடன், இந்நூலுக்கு ஆசி (வாழ்த்து) வழங்கும் வகையில் விசித்திரக் கவியும் வழங்கி என்னை வாழ்த்தவும் செய்துள்ள பேராசிரியர் திரு ஆ. சிவலிங்கனார் அவர்களுக்கு மிகவும் நன்றி உடையேன். புதிய குத்துவிளக்குப்பந்தமுடன் வாழ்த்துப்பா நல்கிய கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் மிக்க நன்றி. நூல் உருவாக்கத்தின்போது உடனிருந்து உதவிய செல்வி இரா. பத்மினி, எம். ஏ., செல்வி தி. லலிதா, எம்.ஏ. ஆகியோருக்கும் என் நன்றி உரித்தாகும்.

நூலினை அழகாகவும் சிறப்பாகவும் அச்சிட்டளித்த நாவல் ஆர்ட் அச்சகத்தாருக்கும், கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் மிகவும் நன்றியுடையேன்.

இந்நூலாக்கத்தின்போது துணைநின்ற அனைத்து ஆய்வாளர்களுக்கும் என் நன்றி.

**வே. இரா. மாதவன்**

# வாழ்த்து

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்,
தொல்காப்பிய உரைவளத் திட்டப்பணி,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை—600 113.

**விசித்திர அகவல்**

செந்தமிழ் மொழிக்குச் சிறந்த வளர்ச்சி
தந்தபல் துறைகளுள் தகைபெறு சித்திரத்
துறையும் ஒன்றத் துறைவரு செய்தி
நிறையும் கவிகள் நேர்சுழி குளமர
வப்பந் தம்மிர தப்பந் தம்சீர்க்
கொப்புறு முரசம் கோமூத் திரிக
ளாரைச் சக்கரம் மாலைமாற் றுக்கவி
ஆரைச் சூடும் இலிங்க பந்த
மாதி பல்கவி மாண்புற எங்குந்
தேடிக் கொணர்ந்து தெளிவுறத் தொகுத்த
தொருநூல் உலகத் தமிழா ராய்ச்சிமா
நிறுவன மூலம் நிலவிடத் தந்த
கண்மருத் துவநூல் கண்ட மாதவ
உண்மையும் உழைப்பும் உடையவ உயர்வா
நன்மைகள் பெற்று நாளும் வாழி

1—12—1983 ஆ. சிவலிங்கனார்

# குத்துவிளக்குப் பந்தம்



# வாழ்த்து

கவிஞர் நாரா நாச்சியப்பன்
பாலவாக்கம், சென்னை-600 041

## குத்துவிளக்குப்பந்தம்

நிலைமண்டில ஆசிரியப்பா

சித்ர வேலைகள் செய்துயர் தமிழில்
அழிவிலாக் கவிவான் அழகு துவள
நந்தமிழ் மாமுகில் நாமகள் நீவ
வெல்லத் தேன்மழை வீழ்ந்து தீம்புனல்
பாயச் செய்த பாசச் செல்வன்
மாதவச் செம்மல்நீ மகிழ்ந்துவா ழியவே

1—12—1983 நாரா நாச்சியப்பன்

# குத்துவிளக்குப் பந்தம்



# ஆசிரியர் வணக்கம்

## குத்துவிளக்குப்பந்தம்

### நிலைமண்டில ஆசிரியப்பா

சீர்மிகு முருக வேளைச் சிரந்தாழ
வணங்கிநல் நேய மாகி, அவன்தன்
இணங்குறு மெழில்கழல் துணையினை நினைவில்
வாங்கி,எந் நாளும் பாடும் புலவர்
நீடு வாழவே நின்றாய்; தூயநல்
தோணி யாயென்று மகலா திருந்து
அவரவர் பணிகளை ஆதரிப் பாய்;பின்
தமிழையிவ் வுலக முவப்பப் பேசவே
சுப்பிர மணியன் நீடுவா ழியவே

1—12—1983 வே. இரா. மாதவன்

# நூலறிமுகம்

## அன்னபந்தம்

நேரிசை வெண்பா

செந்தமிழின் சீர்மையைச் செம்புலவர் செம்மாந்து
சந்தநறுஞ் சொற்கவியால் சாற்றியதில்—பந்தமுறு
சித்திரப் பாக்களைவி சித்திரமாய்த் தந்திடுமிச்
சித்திர நூலெனவே செப்பு.

வே. இரா. மாதவன்

---

குறிப்பு :—

செய்யுளில் உள்ள எழுத்துக்கள் 79
சித்திரத்தில் உள்ள எழுத்துக்கள் 69

இதில், 1/77 ஆம் எழுத்து செ; 12/18 ஆம் எழுத்து செ; 13/19 ஆம் எழுத்து ம்; 21/24 ஆம் எழுத்து ந்; 34/40 ஆம் எழுத்து ல்; 46/56 ஆம் எழுத்து சி; 47/57 ஆம் எழுத்து த்; 48/58 ஆம் எழுத்து தி; 49/59 ஆம் எழுத்து ர; 32/55 ஆம் எழுத்து வி ஆகியவை தம்முள் ஒத்து அமைந்துள்ளன.

## உள்ளே

## பகுதி-2 புதிய வகைகள் 251—301

## இந்நூலுள் இடம் பெற்றுள்ள சித்திரங்கள்

# சித்திரக் கவிகள்—ஓர் ஆய்வு

உலகில் மனிதன் தோன்றிய நாள் முதலாக நல்வாழ்க்கை முறைகளை அமைத்துக் கொள்ளவே பாடுபட்டு வருகின்றான். நாகரிகமாக வாழும் மனிதன் உணவு, உடை, உறையுள் இவற்றினால் மட்டும் மன அமைதி அடைவதில்லை. அவற்றுக்கு மேலான சில இன்பத்தையும் அவன் அடைய விழைகின்றான். மனிதன் நல்வாழ்விற்கும் அதன் விரிவான நாகரிகத்திற்கும் அவன் கற்ற தொழில்களே துணை நிற்கின்றன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கலைகளாக மலர்ந்து மணமூட்டுவன. மனிதன் தன் அறிவினாலும் கற்பனையினாலும் கலைகளை அமைத்து அவற்றின் வழி அழகைக் கண்டு இன்பம் பெறுகின்றான்.

## கலையும் அழகும்

மக்களது நல்லுணர்வுக்கு விளக்கமாக அமைந்து அழகுத் தன்மையால் கண்டோரது உள்ளத்தைக் கவர வல்லது கலை. உயர்திணை மாந்தரின் மனப் பயிற்சியாகிய கல்வி, பிறராற் கண்ணினும் செவியினும் நுண்ணிதின் உணரும் நன்னயம் வாய்ந்து வெளிப்படுந் திறங்களே கலைகள் எனப் போற்றத் தகுவன. கலைஞன் தன்னியல்பாய்க் கொள்ளும் உள்ளுணர்வின் திறத்தாலும் உள்ளக் கிளர்ச்சியாலும் உலகப் பொருள்களிடையே காணப்படும் வண்ணம், வடிவு, அளவு, சுவை முதலியவற்றின் அமைப்பினைக் கூர்ந்துணரும் மதிநுட்பத்தாலும் மக்களுள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சிறந்த கலைகளை உருவாக்குகின்றான். இவ்வகையில் ஓவியம், சிற்பம், இசை, நாடகம், காவியம் ஆகிய கலைகள் மக்களது வாழ்க்கைக்குப் பயன்தரும் முறையில் உருவாக்கப் பெறுகின்றன.

கலைகளுக்கு உயிரெனத் திகழ்வது அழகு. அழகு பொறி கட்குப் புலனாகுந் தன்மையது. அழகினைப் பற்றிய உணர்ச்சி அகத்தே தோன்றி எழுவது. அவ்வுணர்ச்சியை ஓர் ஒழுங்குட் படுத்தி அழகான பொருள்களிடம் தெளிவான நிலையில் வைத்து உணரும் போதுதான் அழகின் தோற்றம் நன்கு அமைகின்றது. அழகு என்பது உலகப் பொருள்களிடையே காணப்படும் ஒத்த தன்மை, இணக்க அமைப்பு, முரண், ஒழுங்கு, அருமை, தோய்வு, மோனம் என்பவற்றால் ஏற்படுவதாய், உயிரால் உணரப்படும் சிறந்த தெய்வீகப் பொருளாகும் என்பர் அறிஞர்.[1]

## கலையும் நுண்மையும்

அழகுக் கலைகள் என்பன ஐந்து. அவை, கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, காவியக் கலை என்பன. இவற்றுள் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை இவை மூன்றும் கண்ணால் காணக்கூடியவை. இசைக்கலை செவியால் கேட்டு இன்புறத் தக்கது. காவியக்கலை எல்லாவற்றினும் நுண்மையானது; இதைத் துய்க்க மனவுணர்வு மிகவும் தேவை.

## முத்தமிழின் அடிப்படை

முதல் எழுத்தும் சார்பெழுத்துமென எழுத்துக்களைத் தொழிற்படுத்துதலினாலே இயற்றமிழானது. ஏழ்பெரும் பாலை களை வகுத்து, அவை நிலைக்களனாக 103 பண்களைப் பிறப் பித்து, அவை தமது விரிவாக 1091 என்னுந் தொகையினவாகிய ஆதி இசைகளை அமைத்து இசைத் தமிழானது. நகை, அழுகை போன்ற மெய்ப்பாடுகளை நிலைக்களனாகக் கொண்டு, உள்ளத் துணர்வினாலும், உடலுறுப்பினாலும், மொழித் திறத்தினாலும், நடையுடையினாலும் அவை தம்மைத் தொழிற்படுத்தி நாடகத் தமிழ் ஆனது. இவ்வாறு முத்தமிழும் அமைகின்றது.

இவ்வாறே, நேர்க்கோடு, வட்டம், முக்கோணம் ஆகிய மூன்று மூல வடிவங்களினின்று தோன்றிய உருக்கள் பல. எல்லா வகை யான வண்ணங்களுக்கும் அடிப்படை நிறங்கள் மஞ்சள், சிவப்பு, நீலம் என்ற மூன்றுமே யாம்.

---

1. க. வெள்ளைவாரணனார். அணிந்துரை. அழகுக்கலைத் திறன்.

இவற்றை ஆராயுமிடத்துக் கண்ணினாலும், செவியினாலும், உள்ளத்தினாலும் உணர்ந்து இன்புறற் பாலவாய அழகுக் கலையுருக்களெல்லாம் ஒரு சில மூலவுருக்கள் காரணமாகத் தோன்றி நின்றனவென்பது தெளிவாகின்றது.

உருக்களை ஆக்கிக் கொள்ளும் முறையினைக் கூறும் நூல்கள் பொதுவியல்புகளை வகுத்துக் காட்டுவன. புலவன், இசையோன், கூத்தன், ஓவியன் என்று இன்னோர் தமது சொந்த ஆற்றலினாலே நுண்ணிய விகற்பங்களைத் தோற்றுவித்துச் செம்மை நலஞ் சான்ற உருக்களைப் பெருக்குதலினாலே அழகுக் கலைகள் பெருகுகின்றன.

இவ்வாறு நோக்குமிடத்துப் புத்தம் புதிய உருவங்களைப் படைத்துத் தருதலே கவிஞர் முதலிய அழகுக் கலையோர் இயற்றுதற்குரிய அருந்தொழில் என்பது புலனாகின்றது. மரபு பட்டு வந்த உருவங்களிற் பயின்றோர், நுண்ணுணர்வுடையராயின், புதிய உருவங்களை எளிதில் அமைப்பர். முன்னின்று இறந்துபட்ட உருவங்களை ஆராய்ந்து கண்டறிதற்கும் அத்தகைய பயிற்சியும், நுண்ணுணர்வும் வேண்டப் படுபவேயாம் என்பர் அறிஞர்[1]

## அறுபத்து நான்கு கலைகள்

கலைகள் அறுபத்து நான்கு என்பது பொது வழக்கு. இக்கணக்கில் வாராத கலைகளும் பல உள. ஆயினும். பெரும்பாலான நூல்கள் கலைகள் அறுபத்து நான்கு என்றே விளக்குகின்றன. எடுத்துக்காட்டாக, காம சூத்திரத்தில் ஆடல், பாடல் போன்ற 64 கலைகளின் பெயர்கள் கூறப்படுகின்றன.[2] இவற்றுள் சில இவண் குறிப்பிடத்தக்கன.

1. ஓவியம்
2. கவிதை
3. யாப்பு
4. அணிஇலக்கணம்
5. செய்யுளின் ஓரடியைக் கொண்டு மற்ற அடிகளைநிரப்பிப் புதிய செய்யுள் செய்தல்

---

1. விபுலானந்த அடிகளார். யாழ் நூல். பக். 361-362
2. டாக்டர் ஆறு. அழகப்பன் (பதிப்) தமிழ்ப் பேழை. தமிழ்ச் சுரங்கம், 49, தெற்கு ஆவணி மூல வீதி. மதுரை—1 1981 பக். 259-263.

6. போட்டியில் ஒருவர் சொல்லும் செய்யுளின் இறுதி எழுத்தில் தொடங்கும் வேறொரு செய்யுளைச் சொல்லுதல்

7. புதிர் போல் அமைந்த பாக்களைச் செய்தல்

8. எளிதில் ஒலிக்க முடியாத கடினமான பாக்களைப் படித்தல்,

9. மறை பொருளாகச் செய்யுளில் பொருள்களை அமைக்கும் புதிர் வகை.

10. பிறரை ஏமாற்றுவதற்கான செய்யுள் செய்தல்.

11. மனத்தில் ஒரு செய்யுளை வைத்துக் கொண்டு சில குறிப்புகளை மட்டும் ஒருவர் தர, மற்றவர் அச்செய்யுளைச் சொல்லுதல்.

என இவ்வாறு பல சுட்டப்படுகின்றன. இவற்றுள், ஒன்றும் பலவும் கலந்த நிலையில் 'சித்திரக்கவிகள்' என்னும் கவிதை மரபாகத் தமிழில் வழங்கப்படுவது இவண் ஆராயத்தக்கது.

## சித்திரம்

சித்திரம் என்னும் சொல் அதிசயம், அற்பம், ஆகாயம், ஆமணக்கு, ஒருகவி, கொடுவேலி, சித்திரப்பாவை, சித்திரிக்கப் பட்டது, சிறப்பு, சிறு குறிஞ்சா, சிற்பநூல் முப்பத்திரண்டி னொன்று, நூதனம், நொடிக்கதை, பேரழகு, மார்க்கசடப் பிரமாணத்தொன்று—அது இரண்டு மாத்திரை ஒரு கலையாகக் கொண்டது, மெய்போற் பொய்கூறல், புகழ், இரகசியம் எனப் பல பொருளிலும் வழங்கப்படுகின்றது.[1]

இச்சொல் ஆங்கிலத்தில் picture, painting, excellence, beauty, decoration, surprise, forest, tiger, hole, ignominy, void, unreality, secret discord, போன்ற பொருள்களில் வழங்கப் படுகிறது.[2]

தமிழில் 'ஓவியம்' என்னும் சொல்லும் சித்திரம், பிரதிமை, சித்திரத் தொழில்,அழகு போன்ற பொருள்களையே தருகின்றது.[3]

தமிழ் எழுத்துகளில் பதினோராவது எழுத்தாகிய 'ஓ' என்னும் ஓரசையும் எழுத்தும் வியப்புக் குறிப்புப் பொருள் உணர்த்துவதாகும். இவ் எழுத்தின் அடியாகப் பிறந்த 'ஓவம்'

---

1. மதுரைத் தமிழ்ப் பேரகராதி
2. தமிழ் ஆங்கில அகராதி
3. மதுரைத் தமிழ்ப் பேரகராதி

'ஓவு', 'ஓவியம்' என்னும் சொற்கள் 'சித்திரம்' என்ற பொருளையே தருவன. 'ஓவன்' என்னும் சொல் சித்திரக்காரன், ஓவிய மெழுது கின்றவன் எனக் குறிக்கின்றது.[1]

எனவே, 'சித்திரம்', 'ஓவியம்' என்னும் இரு சொற்களும் அழகு, சிறப்பு, வியப்பு. என்னும் பொருள்களில் ஒன்று பட்டு வழங்கக் காணலாம். தமிழ் இலக்கியங்களிலும் இத்தகைய வழக்கினைக் காணலாம்.

## சான்று

1. ''சங்கர ரங்கணர் கோடீச் சுரமன்ன தாழ்குழலாய்
   உங்கள் புனத்தி லுலாவுங் கிளிகளு மொண்மயிலும்
   எங்க ணகர்ப்பளிங் கார்சுவர்த் தோன்றலை யென்றுமதிற்
   றங்குறுஞ் சித்திர சித்திர மீதெனச் சாற்றுவரே.''[2]

இப்பாடலில் நம்முடைய ஊர்கள் ஒன்றற்கொன்று அணிமைக் கண் உள்ளன என்பதைத் தலைவன் தலைவிக்குக் கூறுகிறான். இதில் சித்திர சித்திரம்' என்னும் தொடர் 'அழகுடைய ஓவியம்' எனப் பொருள் தரும்.

தோன்றலை-தோன்றும் நிழலை. நிழல் தோன்றக் கூடிய அண்ணிய இடத்திலுள்ளது என்பதன் முகமாக இருவர் ஊரும் தம்முள் அணியனவென்பதைக் குறிப்பித்தான்.

2. ' சித்திர பானு சுபானு மதியெனுஞ் சீர்நயனர்
   சித்திர மாநகர்க் கோடீச் சுரவெற்பிற் றேர்ந்தயன்செய்
   சித்திர மேயோர் சுகங்காண் கிலனாந் திகழொருவன்
   சித்திர மாந்தழை கைவாட வாடித் திரிந்திடுமே''[3]

இப்பாடல், பாங்கி தலைவிக்கு, அவன் (தலைவன்) குறை உணர்த்தலாகப் பாடியது. இங்கு, சித்திர பானு-அக்கினி, சுபானு-நல்ல சூரியன், மதி-சந்திரன், நயனர்-கண்களையுடையவர், சித்திர மாநகர்-அழகு பொருந்திய நகர், அயன் தேர்ந்து செய்த சித்திரம் போல்வாய்-பேரழகைக் குறிக்கும் சுகம்-கிளி, இன்பம்; இது சிலேடை. சித்திரமாந் தழை சிறப்புப் பொருந்திய தழை கைவாட வாடி, ஒருவன் அதிசயமாகத் திரிந்திடுவான் , என்பது பொருள்.

---

1. மதுரைத் தமிழ்ப் பேரகராதி
2. கோடீச்சுரக் கோவை-30.
3. „ „ -126

3\. ''நெய்யார் மழுவரன் கோடீச் சுரமன்ன நேரிழையாள்
ஐயா நெருநற் கனவிடை நீவந் ததுவுமவள்
கையா மலரைப் பிடித்தது மீது கலந்திடருள்
செய்யா தகன்றதுஞ் சொல்லிநைந் தாளிதென் சித்திரமே''[1]

இப்பாடல், 'கனவு நலிவுரைத்தலாக' வந்தது, 'ஐயா, கலந்திடுதலாகிய கருணையை நீ செய்யாமலிருப்பது-இது என் சித்திரம் இஃது என்ன வியப்பு' என்பது இதன் பொருள்.

ஓவியமானது நோக்குபவர்களுடைய வியப்பிற்குக் காரணமாக அமைவதால் 'சித்திரம்' (வியப்பு) எனப்பட்டது எனலாம்.

இவ்வாறு அழகு, சிறப்பு, வியப்பு போன்ற பொருள்களில் அமைந்த 'சித்திரம்' என்ற சொல்லின் அடியாகப் பல பெயர்கள் புராணக்கதைகளிலும், இலக்கியம், வரலாறு போன்றவற்றிலும் வழங்கக் காணலாம்.[2]

## ஆடவர் பெயர்கள்

அக்கால மன்னர் பெயர்களுள் பல 'சித்திரம்' என்னும் சொல்லின் அடியாகப் பிறந்துள்ளன. பாரதக் கதையில் வரும் திருதராட்டிரன் குமாரர்களில் 24 பெயர்கள் இவ்வாறு அமைந்துள்ளன. அவை, சித்திரகன், சித்திரகாண்டன், சித்திரகீர்த்தி, சித்திர சாருசன், சித்திர நேசன், சித்திரச் சரன், சித்திர தரன் சித்திரத்துவசன், சித்திர தேவன், சித்திர பாகு, சித்திர பாணன், சித்திர பானு, சித்திரயோதி, சித்திர ரதன். சித்திர வன்மதரன், சித்திர வன்மா, சித்திரவாகு, சித்திர விசித்திரன், சித்திரவுத்தமன் சித்திரன், சித்திராக்கன், சித்திராங்கதன், சித்திராசுவன், சித்திராயுதன் என்பன.

விருஷ்ணி வம்சத்துப் பிறந்த யாதவன் ஒருவன் சித்திரகன் எனப்படுகிறான்.

விட்கம்பம் என்னும் குசபுரத்துவணிகன் குமரன் சித்திர குத்தன் எனப்படுகிறான். சிரவணத்தால் ஆத்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களையுணர்ந்து யமனுக்கு அறிக்கையிடுவோனையும் இப்பெயரால் அழைப்பர்.

---

1\. கோடீச்சுரக் கோவை-255
2\. இப்பெயர்கள் யாவும் அபிதான சிந்தாமணியில் உள்ளவாறு இவண் தொகுக்கப்பட்டுள்ளன.

பாரத வீரருள் ஒருவன். துருபதன் மகன்; வசிட்டருக்கு ஊர் சையிடம் உதித்த குமரன், தேவ பாகனுக்கு முசையிடம் பிறந்த குமரன்; சூரசேன தேசத்து அரசனாகிய வித்யாதரன், சவ்வீர தேசத்து அரசன் என்னும் இவர்கள் ஒவ்வொருவரும் சித்திர கேது எனப் பெயர் பெறுகின்றனர்.

பாஞ்சராத்ர ஆகமத்தை மேருமலையிலிருந்து செய்த ஏழு முனிவர்கள் சித்திர கண்டிகள் எனப்படுவர். இவர்கள் விசித்திர மான மயிற்றோகை யுடையவர்கள். மரீசி, அத்ரி, அங்கிரஸ் புலத்தியர், புலசர், கிரது, வசிட்டர் என்பன இவரது பெயர்கள்.

ஒரு மகரிசி சித்திர கெண்டி எனவும், வியாழன் சித்திர கெண்டிசன் எனவும் பெயர் பெறுவர்.

வசுதேவன் தம்பி தேவபாகன் சித்திரகேதன் என அழைக்கப் படுகின்றான்.

கனக விசயனுக்குத் துணையாகயிருந்த ஓர் அரசன் சித்திரன் என்றே அழைக்கப்படுகின்றான்.

திராவிட தேசத்தரசரில் ஒருவன் சித்திரசேசன் ஆவான். இதே பெயரில் வேறு சிலரும் காணப்படுகின்றனர். அவர்கள், சராசந்தனுக்கு மந்திரி. இந்திரலோகத்திலுள்ள ஒரு தூதுவன், அருச்சுனன் நிவாத கவசருடன் போரிடச் சென்ற காலத்துத் தூதாக இருந்தவன். தேவசாவர்ணி மனுப்புத்திரன், நரிஷ்யந்தன் குமரன், சண்முக சேநா வீரருள் ஒருவன், வபுத்திரத்தன் குமரன், கர்ணன் குமரன், ஒரு கந்தருவன், தெய்வீக அரசனுக்குச் சேரன் குமரியாகிய பத்மாவதியிடம் பிறந்தவன். (இவன் வழியில் மலையமான் வமிசம் உண்டாயிற்று.)

சித்திரதரன் என்ற பெயரில் சோபனபுரத்து அரசன், போதன புரத்திலிருந்த சிற்பி, ஸ்ரீநிலை ராச குமாரன் போன்றோர் விளங்குகின்றனர்.

வசிட்டருக்குப் பிறந்த வைசியன் சித்திரமுகன் என அழைக்கப்படுகின்றான்.

தர்மரதன் குமரன், ஸ்ரீநிலை ராசகுமாரன், திரிசங்கு குமரன், தீவிரதன் குமரன், ஒரு கந்தருவன், சுபார்சுவகன் குமரன், கீகட தேசத்தரசன் காதம்பரியின் தந்தை போன்றோர் சித்திரரதன் என்ற பெயரில் காணப்படுகின்றனர். பிரகலாதனின் முற்பிறப்புப் பெயரும் இதுவே.

சித்திர வர்மன் என்ற பெயரில் பாரத வீரன் ஒருவனும், திருவாரூரில் ஆடகேசுரலிங்கம் தாபித்துப் பூசித்த முனிவன் ஒருவனும் அழைக்கப்படுகின்றனர்.

சகுனிக்குக் குமரன் சித்திரவீரன் என அழைக்கப்படுவான்.

சந்தனுவின் குமரன் சித்திர வீரியன் விசித்திர வீரியன் ஆவான்.

கனக விசயர்க்குத் துணையான அரசன் ஒருவன் 'சித்திரன் என்றே அழைக்கப்படுகின்றான்.

சித்திராங்கதன் என்னும் பெயருடைய ஒரு காந்தருவன், சந்தனு புத்திரனாகிய சித்திராங்கதனைத் தன்பெயர் கொண்டிருக்கிறான் எனக் கொன்றவன். இதே பெயரில் வேறு இருவரும் கூறப்படுவர். அவர்கள் எலிச்செவி அரசனுடைய தம்பியும் தருசகனுக்குப் பகைவனுமானவன். இவன் மகத நாட்டில் நடந்த போரில் உதயணனால் சிறைவைக்கப்பட்டவன். மற்றொருவன் தசார்ணவதேசத்தரசன். இவன் அசுவமேதக் குதிரைக்குப் பின் சென்ற அருச்சுனனை எதிர்த்தவன்.

கேகயன் குமரன், உகதன் குமரன், பிரியவிரதன் பேரன், குரோத கீர்த்தி குமரன் போன்றோர் சித்திரரதன் என அழைக்கப் படுவர்.

சித்திராத்தரிசன் என்னும் பெயரில் குரோத கீர்த்தியின் குமரன் விளங்குகின்றான்.

அருச்சுனனால் கொல்லப்பட்ட சிங்கபுரத்து அரசனும் ஒரு கந்தருவனும் சித்திராயுதன் என்ற பெயரில் அழைக்கப்படுவர்.

பாண்டிய மன்னர்களில் பலர்இவ்வாறு பெயர் பெறுகின்றனர். எடுத்துக்காட்டாக,

சித்திரநேச பாண்டியன்-சித்திரவர்ம பாண்டியனுக்குக் குமரன். இவன் குமரன் சித்திரவிக்கிரமன். சித்திரத்துவச பாண்டியன் சித்திர பூஷண பாண்டியன் குமரன். இவன் குமரன் சித்திர வருமன் சித்திர பூடண பாண்டியன்-இவன சித்திரவிரத பாண்டியனுக்குக் குமரன். இவன் குமரன் சித்திரத்துவசன். சுகுண பாண்டியனுக்குக் குமரன் சித்திர விரத பாண்டியன், இவன் குமரன் சித்திர பூடணன் சித்திராங்கதையின் தந்தை சித்திராங்கதனும் ஒரு பாண்டி நாட்டரசனே. மலையத்துவசப் பாண்டியனுக்கு சித்திரவாகன் என்றும் வேறு பெயர் உண்டு.

சோழ அரசர்களுள் சித்திரரதன் குறிப்பிடத்தக்கவனாவான்.

## மகளிர் பெயர்கள்

குபேரன் மனைவி, வாணாசுரன் மனைவியாகிய வந்தன் மகள் போன்றோர் சித்திரரேகை என்ற பெயர் பெறுகின்றனர். சித்திரத்தில் வல்லவளான. உஷாதேவிக்குத் தோழியும் இப் பெயருடையவளே. இவருள், குபேரன் மனைவி சித்திராதேவி என்றும் அழைக்கப்படுகின்றாள்.

அக்குரூரன் தேவி சித்திரரதை எனப் பெயர் பெறுகின்றாள்.

சித்திரலேகை என்பவள் கபந்தன் பெண். பாணாசுரன் பெண்ணாகிய உஷையின் உயிர்ப்பாங்கி. உஷை கனாக் கண்டு கனவில் கண்ட புருஷனைத் தோழிக்குத் தெரிவிக்க அவன் அனிருத்தன் என்று அறிந்து அவன் உறங்குகையில் அவனைக் கட்டிலுடன் உஷையிடங் கொண்டுவந்து காட்டிய அதிமாயாவி, சிவமகாபுராணத்தில் கூறப்படும் கும்பாண்டன் குமரியும் இப் பெயருடையவளே. இவர் தன் வன்மையால் பார்வதி கோலங் கொண்டு சிவபெருமானிடஞ் சென்று பின்பு உண்மை உருவங் கொண்டவள்.

பாண்டி நாட்டு அரசனாகிய சித்திராங்கதன் குமரி சித்திராங்கதை ஆவாள். இவள் வில்வித்தையில் வல்லவளாய்ப் பெண்ணரசு புரிந்திருக்கையில் தீர்த்த யாத்திரை பொருட்டு வந்த அருச்சுனன் இவளை மணந்தனன். இவளே அல்லி அரசி

சித்திராங்கனை என்னும் பெயரில் விப்பிரவாகுவின் குமரி சௌமியன் என்னும் புட்கரதேசத்தரசன் மகன், வியூதன் மனைவி போன்றோர் அழைக்கப்படுகின்றனர்.

இராஜராஜ நரேந்திரன் காமினி சித்திராங்கி ஆவாள். இவள் கொடியவள். ஆகையால் வழக்கத்தில் சித்திராங்கி என்பர். காம லீலையில் இவளைவென்றவர் இல்லை என்பர்.

யாதவிக்கு நற்றாய் 'சித்திராபதி' என்னும் பெயருடைய வளாவாள்,

## தாவரங்கள், விலங்குகள்

ஆமணக்கு, ஒருபூடு, புலி, கொடுவேலி போன்றவற்றிற்குச் சித்திரகம் என்று பெயர்

புலியைச் சித்திரகாயம் என்றும் கூறுவர். ஒரு நச்சுப்பல்லிக்கு சித்திரகோலம் என்னும் பெயரும். ஒரு பெரும்பாம்புக்குச் சித்திர சருப்பம் என்ற பெயரும் அறியத்தக்கன.

ஒருவகை நெல்லுக்குச் சித்திரக்காலி என்ற பெயரும், பருத்திக்குத் சித்திர தண்டகம் என்ற பெயரும் அறியத்தக்கன.

மயில் சித்திரபுச்சகம் என்றும் சித்திர மேகலை என்றும் பெயர் பெறும்.

பூடு வகைகளில் ஒன்று சித்திரப் பாலாடை என்றும், அம்மான் பச்சரிசி சித்திரப் பாலாவி என்றும் பெயர் பெறுகின்றன. கொடிவேலிக்குச் சித்திர மூலம் என்றும் பெயர் உண்டு.

அழகிய மான் சித்திர மிருகம் என்றே அழைக்கப் பெறும்.

அரச மரத்திற்குச் சித்திர ரேகை என்று வேறு பெயரும் உண்டு.

பல வர்ணக் கழுத்துடைய புறவு சித்திரக் கிரீவன் என்று அழைக்கப் பெறும்.

கண்டங்கத்திரி சித்திர வாரத்தி என்றும், துத்தி சித்திர விநழ் என்றும், முத்துக் கொட்டை சித்திர விதை என்றும் அழைக்கப் பெறும்.

அன்ன வகைகளுள் சித்திரான்னம் குறிப்பிடத்தக்கது. இவை, அன்னத்தில் வாய்க்கினிய பொருள்களைப் புணர்த்திச் செய்வன. பாற்பொங்கல், பருப்புப் பொங்கல், சருக்கரைப் பொங்கல், மிளகோரை, புளியோரை, கடுகோரை, எள்ளோரை, உழுந்தோரை, ததியோதனம், வெங்கிபாத், பல வகைக் காய்கள் சேர்ந்த சோறு, கிச்சடி, பழரசம் சேர்ந்த அன்னம் முதலியன.

சில இடப்பெயர்களும் 'சித்திரம்' என்னும் அடிச்சொல்லுடன் வழங்கப்படுகின்றன.

சிதம்பரத்திலுள்ள பெருமாள் எழுந்தருளியிருக்கும் திருப்பதியை வைணவர்கள் சித்திர கூடம் என்னும் பெயரிட்டு அழைப்பர்.

சித்திர கூடம் என்பது ஒரு மலை. இதில் வால்மீக முனிவர் ஆசிரமம் இருந்தது. இராமர் ஆரண்யவாசத்தில் சில நாள் இங்கு வசித்தனர். இது இப்போது பாண்டில்காட் எனப்படும். இது சிருங்கிபேரபுரத்திற்குத் தென்மேற்கிலுள்ளது. பிரயாகை தலத்திற்கு அருகிலுள்ள ஒரு மலைக்கும் இப்பெயருண்டு இங்கு மந்தாகினி நதி பெருகுகிறது.

ஒட்டர தேசத்தில் (ஒரிசா) உள்ள ஒரு நதி ஐந்திர பலை என்று அழைக்கப்படுகின்றது.

இவ்வாறு 'ஐந்திரம்' என்ற சொல் தமிழர் வாழ்க்கையோடு இயைந்த பல பொருள்களிலும் வழங்கக் காணலாம்.

## கவி

'கவி' என்னும் சொல் ஆசு மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளைப் பாடுவோன், இசுவாகு தம்பி, இருசயன் மகன், கவி யென்னேவல், குரங்கு, சுக்கிரன், சுக்கிரன் தந்தை, சூரியன், பாடல், பாடுவோன், பிரமா, புலவன், பூனைக்காலி, வான்மீகி, ஞானி, நான்கென்னும் எண்ணைக் குறிக்கும் சங்கேதம், குதிரைக் கடிவாளம், கந்தகம், பா போன்ற பல பொருள்களிலும் வழங்கப்படுகிறது.[1]

இச்சொல் பாடலையும், பாடுவோனையும் குறிக்கப் பயன்படுவது குறிப்பிடத்தக்கது. தமிழ்ப் புலவர்களின் பெயர்கள் பல 'கவி' என்னும் அடையுடனே அமைந்திருக்கின்றன. எடுத்துக்காட்டாக கவிக்களஞ்சியம் என்பவர் ஒரு தமிழ்க்கவி. இவர் புதுப்பாகை ஊரினனாகிய கறுப்பன் புதல்வர். வேதாளக் கதையினை 864 விருத்தங்களில் பாடினவர்.

திருவள்ளுவ மாலை பாடிய, கடைச் சங்கத்துப் புலவர்களில் ஒருவர் கவிசாகரப் பெருந்தேவனார் குறிப்பிடத்தக்கவர்.

திருக்குறளுக்கு உரையிட்ட ஆசிரியர்கள் பதின்மரில் கவிப்பெருமாள் ஒருவர்.

மாறனலங்காரத்திற்கு உரையாசிரியரும் திருக்குறளுக்கு நுண்பொருண்மாலை இயற்றியவரும் கவிராசகேசரி திருமேனி ரத்தின கவிராயர் எனப்படுவர்.

கவிராஜ பண்டிதர் என்னும் தமிழ்ப் புலவர் சௌந்தரியலகரி, ஆனந்தலகரி என்னும் கிரந்தங்களைத் தமிழில் விருத்தச் செய்யுளாக மொழிபெயர்த்துள்ளார்.

தமிழில் ராமாயணம் இயற்றிய கம்பரைக் கவிச்சக்கரவர்த்தி என்றே அழைப்பர்.

---

1. மதுரைத் தமிழ்ப் பேரகராதி.

## சித்திரக்கவி

சித்திரம் + கவி = சித்திரக்கவி ஆகும்.

சித்திரக்கவி என்பது நாற்கவிகளில் ஒன்று. அது மாலைமாற்று முதலாகக் கூறப்படும் மிறைக்கவி, வண்ணப்பா, வண்ணக்கவி என அகராதிகள் கூறுகின்றன [1]

சித்திரக்கவி என்பதை 'A variety of metrical Composition fitted into fanciful figures' எனத் தமிழ்-ஆங்கில அகராதி விளக்குகிறது.[2]

நால்வகைக் கவிகளுள் சித்திரத்தில் அமைத்தற்கேற்பப்பாடும் அருங்கவிகள் சித்திரக் கவிகள் எனலாம்.

இச்சொல், 'சித்திர கவி'[3] என ஒற்றுமிகாமலும், 'சித்திரக் கவி'[4] என ஒற்றுமிக்கும் சில இலக்கண நூல்களில் கூறப்படுகின்றன. இவை இரண்டும் ஒரு பொருளிலேயே வழங்கப்படுகின்றன. தமிழ் மொழியின் புணர்ச்சி விதி அடிப்படையில் 'சித்திரக்கவி' என்பதே பொருந்திய சொல்லாக அமைகின்றது.

## தமிழரின் ஓவிய உணர்வு

தமிழர் ஓவியக் கலையில் சிறந்திருந்தனர் என்பதற்குச் சங்க நூல்களே சான்றாக அமைகின்றன. ஓவியம், படம், சித்திரம், கிளவி, எழுத்து என்னும் தொடர்புடைய சொற்கள் சங்க நூல் களில் வழங்கக் காணலாம்.

பாண்டியன் நன்மாறன் என்பவன் சிறந்த சித்திர மாடத்தில் தங்கியிருந்த போது அங்கே உயிர் நீத்தான். எனவே, அவன் 'பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறன்' என்றே கூறப் படுகின்றான்.[5]

---

1. மதுரைத் தமிழ்ப்பேரகராதி.
2. தமிழ்-ஆங்கில அகராதி.
3. தண்டி. சொல்லணியியல்-98
4. மாறன். ,, 270.
5. புறம். 59

மதுரைக் காஞ்சியில் மாங்குடி மருதனாரும்,[1] நெடுநல் வாடையில் நக்கீரரும்[2] பாண்டிய மன்னர்களின் சித்திர மாடங்களை விளக்குகின்றனர்.

மதுரைக்கருகில் உள்ள திருப்பரங் குன்றத்து மலையில் முருகப் பெருமான் கோயிலைச் சார்ந்து ஒரு 'சித்திரமாடம்' இருந்ததைப் பரிபாடல் காட்டுகின்றது.[3]

திருச்சியிலுள்ள திருவெறும்பூர் கோயிலைச் சார்ந்து 'சித்திர கூடம்' என்னும் மண்டபம் பண்டைக் காலத்தில் இருந்த செய்தியைச் சாசனங்கள் தெரிவிக்கின்றன.[4]

கி. பி. 600 முதல் 630 வரையில் அரசாண்ட பல்லவ மன்னன் மகேந்திர வர்மன் சித்திரக்கலையில் வல்லவன் என்றும், இதனாலேயே இவன் 'சித்திரக் காரப்புலி' என்னும் பெயரைக் கொண்டிருந்தான். என்றும், இவன் 'தட்சிண சித்திரம்' என்னும் தென் இந்திய ஓவிய நூலுக்கு உரைஎழுதினான் என்றும், காஞ்சிபுரத்துக் கடுத்த மாமண்டூரில் அமைந்த குகைக் கோயில் சாசனம் கூறுகின்றது.[5]

## ஓவியக் கலைஞர்

சித்திரம் எழுதுவோர் தாம் எழுதியவற்றை-தம் தொழிலை நோக்கினார் கண்ணிடத்தே நிறுத்துதலின் 'கண்ணுள் வினைஞர்' என அழைக்கப்பட்டனர்.

"எவ்வகைச் செய்தியும் உவமம் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞரும் பிறருங் கூடி"[6]

என மதுரைக்காஞ்சி விளக்குகின்றது.

ஓவியர் தம் கலையில் நிறைந்த வல்லமை (வித்தகம்) படைத்திருந்தமையால் வித்தக வினைஞர்' எனப்பட்டனர்.

---

1. மதுரை காஞ்சி-484-485.
2. நெடுநல்வாடை—110-114.
3. பரிபாடல்-19 48-53.
4. தெ. இ. க. 8, 138, 139, 162.
5. மயிலை. சீனி. வேங்கடசாமி. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள. பக். 66. 206.
6. மதுரைக் காஞ்சி-516-518.

'வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படம்போர்த் ததுவே
யொப்பத் தோன்றிய உவவனம்'[1]

என்னும் மணிமேகலை அடிகள் இதனைச் சுட்டும்.

ஓவியனைக் 'கிளவிவல்லோன்' என்று சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன.

''நல்லேம் என்னும் கிளவி வல்லோன்
எழுதியன்ன காண்டகு வனப்பின்
ஐயள் மாயோள்''[2]

என்பது நற்றிணை.

## சித்திரமாடம்–எழுத்து நிலை

எழுத்து தோன்றுவதற்கு முன்பு சித்திரமே எழுத்தாக அமைந்தது என அறிய முடிகிறது. உலகின் பலவிடங்களிலும் மக்கள் தம் கருத்தைக் கூற முதலில் உருவ எழுத்தை'(Pictograph) எழுதியுள்ளனர். பின்னர் 'கருத்தெழுத்தை'ப் (Ideograph) பயன் படுத்தத் தொடங்கினர் எனலாம். எழுதியது-எழுத்து என்னும் நிலையில் இச்சொல் தமிழ் இலக்கியங்களில் பயிலப்பட்டுள்ளமை நன்கு விளங்கும்.

ஓவிய வல்லோர் எழுதுதலால் மாட்சி கொண்ட ஓவியம் 'எழுத்து நிலை' என்றும், இத்தகைய சித்திர மாடங்கள் 'எழுத்து நிலை மண்டபம்' என்றும், 'எழுதெழில் அம்பலம்' என்றும் கூறப் படுகின்றன.

சான்று

'இரதி காமன் இவள்இவன் எனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை இவளக லிகைஇவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல வெழுத்துநிலை மண்டபம்''[3]

என்றும்,

---

1. மணிமேகலை. மலர்வனம் புக்ககாதை. 167-169.
2. நற்றிணை. 146.
3. பரிபாடல். 19. 48-53

"நின் குன்றத்து
எழுதெழில் அம்பலங் காமவேள் அம்பின்
தொழில் விற்றிருந்த நகர்"[1]

என்றும் வரும் பரிபாடல் அடிகள் இதை விளக்குகின்றன.

இவ்வாறே, 'எழுதணி', 'எழுதுவினை' போன்ற தொடர் புடைய சொற்களும் பழந்தமிழ் நூல்களில் கிடைக்கக் காணலாம்.

'எழுதணி கடவுள் போகலின் புல்லென்று
ஒழுகு பலிமறந்த மெழுகாப் புன்திணை'[2]
'எழுது வினைக் கம்மமொடு முழுது முதலளைஅ'[3]

என்னும் பாடலடிகள் இதற்குச் சான்றாகும்.

இவற்றுடன், 'எழுது எழில்' என்பது ஓவியர் பார்த்து எழுது தற்கு ஏதுவாகிய 'அழகு' எனப்படும். பண்டைக் காலத்திலேயே அழகுப் பொலிவிற்காகச் சித்திரிக்கின்ற ஓவிய வனப்பு இருந்ததை இதனால் அறிய முடிகிறது. சான்றாக,

'தேம்மெய் தீம்பால் வெளவலின் கொடிச்சி
எழுதெழில் சிதைய அழுத கண்ணே'[4]
'என்ன கடத்தளோ மற்றே தன் முகத்து
எழுதெழில் சிதைய அழுதனள் ஏங்கி'[5]

போன்ற பாடலடிகளைச் சுட்டலாம்.

சித்திரம் வரைதலானது 'எழுதுதல்' என்ற சொல்லாலும் குறிக்கப் படுகின்றது.

'சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போல'[6]

என்பதில் இதை அறியலாம்.

தமிழில் 'எழுத்து' என்பதை விளக்குமிடத்து 'எழுதப் படுதலா லெழுத்தெனப் பெயர் பெறும்'[7] எனப் பேரகத்தியம் குறிப்பதும் இவண் எண்ணத் தக்கது.

1. பரிபாடல் 18. 27-29
2. அகம். 167
3. பெருங்கதை. உஞ்சைக் காண்டம்.
4. நற்றிணை. 379
5. அகம். 176
6. நற்றிணை. 58
7. பேரகத்தியத் திரட்டு. எழுத்துப்படலம்.

ஓவியம் எழுதுவதில் சீவகன் மிகவும் சிறந்தவன் என்பதைச் சீவக சிந்தாமணி கூறுகிறது.[1] மேலும், இந்நூலாசிரியர் தம் நூலில், பெண்களுக்கு உவமை கூறுமிடத்து ஓவியர் எழுதிய சித்தி ரத்தையே ஒப்புமைப் படுத்துகின்றார்.

சான்று :-

'உரைகிழித் துணரும் ஒப்பின்
ஓவியப் பாவை ஒத்தார்'[2]
'உயிர்பெற எழுதப் பட்ட
ஓவியப் பாவை யொப்பாள்'[3]
'வடுப்பிள வனைய கண்ணாள்
வல்லவன் எழுதப்பட்ட
படத்திடைப் பாவை போன்றதோர்
நோக்கின ளாகி நிற்ப'[4]

போன்ற பாடலடிகளால் இதை உணரலாம்.

## ஓவிய மகளிர்

இத்தகைய ஓவிய மகளிர் 'சித்திரக்' கலையிலும் சிறப்புற்றி ருந்தனர் என இலக்கியங்கள் காட்டுகின்றன.

விசையை என்னும் அரசி, தனக்குச் சுடுகாட்டிலே உதவி செய்த ஒரு பெண் தெய்வத்தின் உருவத்தையும், தான் ஏறிச் சென்ற மயிற்பொறி விமானத்தின் உருவத்தையும் அரண்மனைச் சுவரிலே ஓவியமாக எழுதுவித்த செய்தியைத் திருத்தக்க தேவர் பின்வருமாறு கூறுகின்றார்.

'தனியே துயருழந்து தாழ்ந்து
வீழ்ந்த சுடுகாட்டுள்
இனியாள் இடர்நீக்கி ஏமஞ்
சேர்த்தி உயக்கொண்ட

---

1. சீவக சிந்தாமணி. குணமாலையார். 155.
2. ,, ,, காந்தருவதத்தை. 210.
3. ,, ,, சுரமஞ்சரி. 55.
4. ,, ,, கனகமாலை. 17.

கனியாள் மொழியாட்கும் மயிற்கும்
காமர் பதிநல்கி
முனியாது தான்காண மொய்கொள்
மாடத் தெழுதுவித்தாள்'[1]

இவ்வாறே, பல கலைகளிலும் வல்லவளான மாதவி ஓவியக் கலையையும் கற்றவளென மணிமேகலை கூறுகிறது.

'ஓவியச் செந்நூல் உரை நூற் கிடக்கையும்
கற்றுத்துறை போகிய பொற்றொடி நங்கை'[2]

என்னும் பாடலடிகளால் 'ஓவியச் செந்நூல்' ஒன்றிருந்ததாக அறிய முடிகின்றது.

## மறைந்த ஓவிய நூல்

அடியார்க்கு நல்லார் காலத்திலும் 'ஓவிய நூல்' பல இருந்ததாகத் தெரிகின்றது. இவர் ஓவிய நூலைக் குறிப்பிடுவதுடன், அந் நூலிலிருந்து ஒரு சூத்திரத்தையும் பின்வருமாறு கூறுகின்றார்.

'பதுமுக முற்கட் டிதமே யொப்படி
யிருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகந்
தனிப்புட மண்டில மேக பாத
முளப்பட வொன்பது மாகுந்
திரிதர வில்லா விருக்கை என்ப'[3]

ஓவிய நூலுள், நிற்றல், இருத்தல், கிடத்தல், இயங்குதல் என்னும் இவற்றின் விகற்பங்கள் பலவற்றுள் இருத்தல் என்பதில் திரிதரவில்லா இருக்கைகளாக இவ்வொன்பதும் கூறப்படுகின்றன இத்தகைய ஓவிய நூல் நுட்பங்களை வடமொழி மரபுச் சொற்களுடனேயே காண வேண்டியுள்ளோம். என்றாலும், அதனைத் தமிழ்ப் புலவர்கள் நன்கு அறிந்திருந்தனர் எனலாம். (இதில் கூறப்படும் ஏகபாதம், கூற்றிருக்கை போன்ற சொற்களின் தொடர்பாகச் சித்திரக் கவிகளில் வரும் ஏகபாதம், கூற்றிருக்கை போன்ற

1. சீவக சிந்தாமணி. முத்தி இலம்பகம். 5.
2. மணிமேகலை. ஊர் அலர். 31-32.
3. சிலம்பு. வேனிற் காதை. 23-26, உரை.

வகைகள் அமைந்திருக்கலாமென எண்ணவும் இடமேற்படுகின்றது). ஆயினும், தமிழர்தம் 'மறைந்த ஓவிய நூல்'[1] கிடைக்காததால் இது பற்றிய தெளிவு பெற முடியவில்லை.

## புனையா ஓவியம் (Outline Drawing)

வண்ணம் தீட்டாமல் வரைந்த ஓவியத்துக்குப் 'புனையா ஓவியம்' எனத் தமிழில் பெயர் கூறப்படுவதை இலக்கியங்களில் காணலாம்.

> 'புனையா ஓவியம் போல நிற்றலும்'[2]
> புனையா ஓவியம் புறம்போந் தென்ன'[3]

என மணிமேகலை இதை உணர்த்துகிறது.

'புனையா ஓவியம் கடுப்ப'[4] என்பதற்கு 'வண்ணங்களைக் கொண்டெழுதாத வடிவைக் கோட்டின சித்திரத்தை யொப்ப' என நச்சினார்க்கினியர் உரை கூறுவர்.

> 'படம்புனைந் தெழுதிய வடிவில் பங்கயத்
> தடம்பல தழீஇயது தக்க நாடு'[5]

என்ற அடிகளில, புனைந்தெழுதிய வடிவத்தைச் சீவக சிந்தாமணி காட்டுகின்றது.

## புறநானூறு தரும் செய்தி

> 'ஓவத் தன்ன இடனுரை வரைப்பிற்
> பாவை அன்ன குறுந்தொடி மகளிர்'[6]

என்னும் பாடலடிகளில் 'ஓவியம் போன்ற அழகிய வீடு' என்னும் பொருள் படும் 'ஓவத்தன்ன இடனுரை வனப்பு' என்னும் தொடர் அறியத் தக்கது. ஓவியம் வீட்டைப் போலவே இருக்கிறது என்று சொல்லக் கூடிய காலங் கழித்து, வீடு ஓவியத்தைப் போல இருக்கிறது என்று சொல்லக் கூடிய காலம் ஏற்படுதற்கு நீண்ட இடையீடு வேண்டும். சித்திரத்திற் பழகிப் பழகி,

---

1. மயிலை சீனி. வேங்கடசாமி. மறைந்து போன தமிழ் நூல்கள். ப. 147.
2. மணிமேகலை. ஆதிரை. 130-131.
3. ,, சிறைக்கோட்டம். 88.
4. நெடுநல்வாடை-147.
5. சீவக சிந்தாமணி. கேமசரியார். 28.
6. புறம். 251.

அதலனச் சுவைக்கும் பக்குவம் அடைந்த பின்னரே சித்திரத்தைப் போல வீடு இருக்கிறது என்று சொல்ல இயலும். இதனால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழர் ஓவியக் கலையில் மிக்க தேர்ச்சி பெற்றிருந்தனர் என அறியலாம் என்பர்.[1]

மேலும், இயற்கை நிகழ்ச்சிகளைச் சித்திரம் போன்று அழகு படத் தம் செய்யுளில் காட்டியதால் சங்க காலப் புலவர் ஒருவர் 'பெருஞ்சித்திரனார்' என்றே பெயர் பெற்றதை அறிகின்றோம். இவ்வகையில், பண்டு தொட்டே கலை மாட்சியும் பண்பாட்டுப் பெருமையும் கொண்ட தமிழர்களுக்கு 'அழகுணர்வு' இயல்பாகவே மலர்ந்து வளர்ந்து வந்துள்ளது எனலாம். அழகுணர்வு காரண மாக உண்டான நுண்கலைகளுள் ஒன்றான ஓவியக் கலையானது இன்பம் சுரக்கும் ஊற்றுக் களனாகத் தமிழ்நாட்டிற்குப் பொலி வூட்டியது. அஃது ஆடல், சிற்பம் முதலிய ஏனைய நுண்கலை களுக்கும் அடிப்படைக் காரணமாக அமைந்தது.

உடலையும் உயிரையும் துன்புறுத்துவதைச் சித்திரத்தையே சிதைத்து வதை புரிவதாக உணர்ந்த தமிழர்கள், அதனைச் சித்திரவதை என்ற சொல்லால் சுட்டினமை அறியத் தக்கது.

இறைவனைச் சித்திரசபை சித்திரநதிச் சூழலிலே கண்டு வழி பாடியற்றுவதைத் திருக்குற்றாலக் குறவஞ்சி போன்ற பின்வந்த நூல்களும் விளக்குகின்றன.

தமிழர்கள் உயிரென மதிக்கும் மொழியிலும் சித்திரக்கலை சிறப்பிடம் பெற்றுள்ளது. நாற்கவிகளுள் ஒன்றான சித்திரக் கவியே இதற்குச் சான்றாகும்.

## கலைப் புலவன்

சிற்பக் கலைஞனும் ஓவியக் கலைஞனும் இயற்கை யுருவங் களையும் கற்பனை உருவங்களையும் தமது சிற்பக் கலையிலும், ஓவியக் கலையிலும் அமைத்துக் காட்ட முடியுமாயினும், இலக் கியப் புலவனைப் போல, பல கருத்துக்களை ஒருங்கே யமைத்துக் காட்ட அவர்களால் இயலாது. பல கருத்துக்களை ஒருமிக்க அமைத்துக் கூறும் வல்லமை இலக்கியக் கலைஞனுக்கே உண்டு. இது இலக்கியக் கலையின் இயல்பு. சொல்லோவியனாகிய இலக் கியக் கலைஞன், சிற்பக் கலையிலும் ஓவியக் கலையிலும் காட்ட

1. செ. வைத்திய லிங்கன், அழகுக் கலைத்திறன், ப. 80.

முடியாத நுட்பங்களையெல்லாம் தன்னுடைய சொல்லோவியத்தில் அமைத்துக் காட்ட வல்லவனாயிருக்கிறான். இலக்கியக் கலைஞன் தன் கவிச் சிறப்பை அவன் உள்ளத்தளவும் நாம் உணர முடியும். இதுவே காவியக் கலைஞனின் தனிச் சிறப்பாகும்.

காவியக் கலைஞனின் இச்சிறப்பு கருதியே பாரதியாரும் தம்மை ஒரு 'கலைப்புலவ'னாக அமைக்க வேண்டுகின்றார்.

'ஆங்கொரு கல்லை வாயிலிற் படிஎன்
றமைத்தனன் சிற்பிமற் றொன்றை
ஓங்கிய பெருமைக் கடவுளின் வடிவென்
றுயர்த்தினான் உலகினோர் தாய்நீ
யாங்கணே எவரை எங்ஙனம் சமைத்தற்
கெண்ணமோ அங்ஙனம் சமைப்பாய்
ஈங்குனைச் சரணென் றெய்தினேன் என்னை
இருங்கலைப் புலவனாக் குதியே.[1]

என்னும் பாட்டடிகள் இதை விளக்குகின்றன.

## ஓவியப் புலவர்

தமிழ்ப் புலமையுடன் ஓவியத் திறமையும் ஒருங்கே பெற்ற புலவர்கள் பலர் அண்மைக் காலத்திலும் வாழ்ந்திருந்தனர். எடுத்துக் காட்டாக, புதுக்கோட்டை தொண்டைமான் முத்தையா (1879-1936)[2] மற்றும் சிவ. முருகேச செட்டியார் (1896-1959)[3] போன்ற தமிழ்ப் புலவர்கள் முறையாக ஓவியப் பயிற்சி பெற்று, சிறந்த ஓவியராகவும் திகழ்ந்தனர். மகாகவி சுப்பிரமணிய பாரதியாரால் 'ஓவியப் புலவர்' என்றே அழைக்கப்பட்ட நாமக்கல் கவிஞர் வே. இராமலிங்கம் பிள்ளையவர்களும்[4] இவண் குறிப்பிடத் தக்கவராவர்.

இயற்கையிலேயே கலையுள்ளம் கொண்ட காவியப் புலவனே ஓவியக் கலைஞனுமாய் இருப்பின் தன் உள்ள வெளிப்பாட்டை எண்ணக் குவியல்களைப் பொருத்தமான ஓவியங்களில் அமைத்து விடுகிறான், அவையே சித்திரக் கவிகளாக அணி பெறுகின்றன எனலாம்.

---

1. பாரதியார். பாஞ்சாலி சபதம் 205.
2. தமிழ்ப் புலவர் வரிசை. 20.
3. ,, ,, . 24.
4. ,, ,, . 30.

## அருங்கவி தரும் அணிநலம்

கவி பாடுவது என்பது சிலருக்கு இயற்கையிலேயே அமைந்து விடுவது உண்டு. காரிகை கற்றும் கவி பாடலாம். ஆனால், கவியிலே அழகும் இனிமையும் அமையப் பாடுவது அரிது. அரிய பெரிய காவியங்களை அமைக்கலாம். ஆனால், எண்சுவையும் பொருந்த அமைப்பது அரிது. இவை யாவும் ஒருங்கே பொருந்த அமைவதே சிறந்த இலக்கியக் கலையாகும். அத்துடன், சித்திரக் கவிகள் போன்றவற்றையும் அருமையாகச் சேர்த்து அணிநலம் பெறச் செய்யுமிடத்து, 'இலக்கியம் ஒரு நுண்கலை' என்னும் கூற்று மேலும் பொலிவடைகின்றது.

## கவிதையின் பொது இலக்கணம்

தொல்காப்பியர், மாத்திரை முதலாக முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளை முதன் முதலாக விளக்குகின்றார்.[1] பின் வந்த நன்னூலார்,

'பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடல்போற்பல
சொல்லால் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்'[2]

எனக் கவிதையின் பொது இலக்கணத்தைக் கூறுவர். இங்கு 'அணி' என்பது அழகையே குறிக்கும்.

## தமிழில் அணி இலக்கணம்

தமிழில் எழுத்து, சொல், பொருள் என்னும் மூவிலக்கணமாகிய முழுநிலையிலிருந்து பிரிந்து யாப்பே முதலில் தனியிலக்கண நூலில் அமைந்தமையை இலக்கண வரலாறு புலப்படுத்துகின்றது. இதனோடு ஒட்டிய ஒரு காலத்திலேயே அணியும் பிரிந்து தனி இலக்கணமாக வளர்ந்திருக்க வேண்டும். வடமொழிச் சார்புடன் அமைந்த தண்டியலங்காரத்திற்கும் முன்பே தமிழில் தனி அணியிலக்கணநூல் வழங்கியமையை யாப்பருங்கல விருத்தி சுட்டும் 'அணியியல்' புலப்படுத்துகின்றது என்பர் அறிஞர்.[3]

மேலும், மறைந்து போன தமிழ் நூல்களுள் பல அணி நூல்களும் அடங்கும் என்று கூறுவர்.[4]

---

1. தொல். பொருள். செய்யுளியல். 1.
2. நன்னூல். 268.
3. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், அணியிலக்கணம், தமிழ் இலக்கியக் கொள்கை-5. 1980.
4. மயிலை சீனி. வேங்கடசாமி, மறைந்து போன தமிழ் நூல்கள்.

## அணி-விளக்கம்

மிக எளிய சொற்களால் பல அரிய பொருள்களை உணர்த்தி இனிய நயங்களைத் தருபவன் புலவன். சொற்கள் அவ்வாற்றல் களைப் பெறுவதற்கும் புலவன் அதனை உணர்த்துவதற்கும் பெரிதும் பயன்படுபவற்றுள் 'முதலிடம் பெறுவது அணி என்பர்.[1]

அணி என்பதன் விளக்கத்தை மாறனலங்காரம் என்னும் இலக்கண நூலே முதன் முதலில் தருகின்றது.

'பொருளினும் சொல்லினும் புனையுறு செய்யுட்கு
அணியுறப் புணர்த்தலின் அணிஎனும் பெயர்த்தே'[2]

என்பது நூற்பா.

செய்யுளை அழகுறச் செய்வதால் அணி என்பது அந்நூலார் கருத்து.

மேலும், எழுத்துக்கு அழகு சொல் என்றும், சொல்லுக்கு அழகு பொருள் என்றும், அப்பொருளுக்கு அழகு யாப்பு என்றும், அவ் யாப்பிற்கு அழகு அணி என்றும் கூறுவர்.

''எழுத்துக்கு அணிசொல்லே இன்சொற்கு அணிதான்
வழுத்தும் பொருளின் வளமே—அழுத்தம்
பொருளுக்கு அணியாப்பே போதம் உயர்யாப்பிற்கு
அருளும் அணியே அணி''[3]

என்னும் பாடலடிகள் இதை உணர்த்துகின்றது.

'மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும் போல'[4]

என நன்னூலார் கூறுவது போல அழகுக்கு அழகு சேர்ப்பது அணி என்பது மிகவும் பொருத்தமுடையது.

## அணியின் வகைகள்

சொல்லணி, பொருளணி என அணி இருவகைப்படும். இவற்றுள் சொல்லணி சொற்களின் அமைப்புக்கு முதலிடம்

---

1. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், குவலயானந்தம். சந்திராலோகம் ப. 1.
2. மாறன். 8[illegible].
3. அணியறுபது. 48.
4. நன்னூல். சிறப்புப்பாயிரம். 55.

கொடுத்து, ஓசை நயத்திற்கும் சொல் நயத்திற்கும் சிறப்பிடம் தருவதாகும். உவமை, உருவகம், உயர்வு நவிற்சி போன்ற பொருளழகு பற்றி வருவது பொருளணி எனப்படும். இவ்விரண்டின் வேறுபாட்டைத் தொன்னூல் விளக்கம் அழகாகக் காட்டுகிறது. இதில், சொல்மாற அணி கெடுவது சொல்லணி எனவும், அவ்வாறு மாறினாலும் நிலைக்கும் அணி பொருளணி எனவும் தெளிவாக்கப்படுவது குறிப்பிடத் தக்கதாகும்.[1]

இதன்வழி, கவிஞனின் வெளியீட்டு முறையினை இலக்கண நூலார் இருநிலைகளாகப் பிரித்துள்ளதை அறியலாம். கவிஞன் பொருட்செறிவுக்கு முக்கியத்துவம் அளித்தால் அவற்றைப் பொருளணி ஆகவும், சொற்களுக்கும் எழுத்துகளுக்கும் முதன்மை அளித்துப் பொருள் சிறப்பினை இரண்டாவதாக்கின் சொல்லணி ஆகவும் கொண்டனர் என்பர்.[2]

## சொல்லணி வகை

பொருளணிகள் போன்றே சொல்லணிகளும் இலக்கண நூலாரின் புலமைக்கேற்பப் பலவகை மாற்றங்களுடன் அமைந்துள்ளன.

பொதுவாக, எழுத்து மடக்கு, சொல் மடக்கு, அடி மடக்கு என மடக்கணியும் இவற்றின் அடியாகப் பிறந்த சித்திரக்கவிகளும் சொல்லணியின் பாற்படும்.

'சொல்லணி என்பது சொல்லுங் காலை
மடக்கும் அதன்வழிப் படூஉம் சித்திரமுமென
நடக்கும் என்மனார் நயன் உணர்ந்தோரே'[3]

என்பது இலக்கண விளக்கம்.

## மடக்கு

கவிதைக்கு இன்னோசையும் ஓரளவு பொருளின்பமும் அளிக்கும் மடக்கு, சொல்லணியியலின் முதல் பகுதியாக அமைந்துள்ளது.

பெரும்பான்மையான இலக்கண நூல்கள் மடக்கிற்குத் தரும் விளக்கம் ஒப்புமையுடையன.

1. தொன்னூல் விளக்கம். 302.
2. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன். குவலயானந்தம், சந்திராலோகம் பக். 33.
3. இலக்கண விளக்கம், 684

'குறித்துரை எழுத்தின் கூட்ட முதன்மொழி
மறித்துமோர் பொருள்தர மடக்குதல் மடக்கே'[1]

என மாறனலங்காரமும்,

'எழுத்தின் கூட்டம் இடைப்பிறி தின்றியும்
பெயர்த்தும் வேறு பொருள்தரின் மடக்கெனும்
பெயுர்த்தே'[2]

எனத் தண்டியலங்காரமும்,

'எழுத்தடி மொழியிடை யிட்டு மிடாமலும்
மாறி மற்றொரு பொருள்வந்து விளைவது
மடக்கா மெனப்பெயர் வைக்கப் படுமே'

என முத்து வீரியமும் விளக்குகின்றன. பிற இலக்கண நூல்களில் மடக்கிற்கு விளக்கம் தரும் சூத்திரம் கிடைக்கவில்லை.

எழுத்துக்களது தொகுதி பிற எழுத்தானும் சொல்லானும் இடையிடாதும் இடையிட்டும் வந்து பெயர்த்தும் வேறுபொருளை விளைப்பது மடக்கெனும் அணியாகும். எழுத்து மடக்கு, சொல் மடக்கு, அடிமடக்கு என்னும் மூவகை மடக்கிற்கும் சான்றுகள் பல இலக்கியங்களில் அமையக் காணலாம்.

## சொல்லணிகளின் தன்மை

சொல்லணிகள் பாடலின் பொருள்வளத்தைப் பொருளணி களைப் போலச் சிறப்பிக்காவிட்டாலும் பொருளுணர்ச்சிக்குச் சொல்லமைப்பு மாற்றம் துணை செய்கின்றது. இவை பெரும் பாலும் சொற்களை எழுத்தெழுத்தாகப் பிரித்தும் கூட்டியும் படித்துப் பொருள் கொள்ளும் நிலையில் முன்பின் மாறி நிற்கும் சொல்லமைப்புகளேயாகும்; ஒரு வகையில் இவ்வணிகளைச் சொற்பிரித்துக் கூட்டும் விளையாட்டுகள் எனவும், குறுக்கெழுத்துப் போட்டி போல அமைக்கப்பட்ட ஒரு சொல் விளையாட்டு எனவும் விளக்குவர்.[4]

---

1. மாறன். 252
2. தண்டி. 92
3 முத்துவீ. 5
4. டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, "திருக்குறள் அணிநலம்" பக். 199-201

பொதுநிலையில் பொருளணி, மடக்கு, சித்திரக்கவி இவை மூன்றும் மூவகை இன்ப உணர்ச்சியைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளன.

கவிதையிலே ஊறித் திளைத்தபின் சிந்தைக்குக் குளிர்ச்சி தருவது பொருளணி; இன்னோசையால் செவியினைப் பிணித்துக் கேட்போரை ஆட்கொள்வது மடக்கு; காணுந்தோறும் கண்ணுள் வீற்றிருந்து காட்சி இன்பத்தையும் கருத்தையும் வளர்ப்பது சித்திரக் கவியாகும்.

## நால்வகைப் புலமை நால்வகைக் கவிதை

நால்வகைப் புலமை மற்றும் நால்வகைக் கவிதைகளைப் பற்றிச் 'சித்திர இயல்' என்னும் பகுதியில் குவலயானந்தம் நன்கு விளக்குகிறது.[1]

## புலமைத் திறம்

கவி, கமகன், வாதி, வாக்கி எனப் புலமைத் திறம் நான்கு வகைப்படும்.

'கவியே கமகன் வாதி வாக்கியென்
றிவையொரு நான்கும் புலமைக் கியல்பே''[2]

என்பது முத்து வீரியம்.

இவருள் கவி என்பவன் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என வரும் நால்வகைப் பாக்களைப் பாடுவோனாவான். ஞாபகம் செம்பொருள் நடையின் எப்பொருளும் காசின்றி உரைப்போன் கமகன் ஆவான். ஏதும் மேற்கோள் எடுத்துக் காட்டிப் பேதின் அளவும் செய்து தன் சொல் நிறுவி வாதில் பிறன் சொல் மறுப்பவன் வாதி ஆவான். அறம், பொருள், இன்பம், வீடு எனும் திறங்கள் கேட்க இனிது எனக் கூறும் ஆற்றல் உடையோன் வாக்கி ஆவான்.

## கவிதைத் திறம்

'ஆசு மதுரஞ் சித்திரம் வித்தார
மாகு நாற்கவி யறையுங் காலே'[3]

---

1. குவலயானந்தம், சித்திரஇயல் 3-8
2. முத்துவீ. 60
3. ,, 55

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனக் கவிதைத் திறம் நான்காகும். இந்நால்வகைப் பகுப்பால் இவற்றை இயற்றும் கவிஞரும் நால்வகையினர் ஆவர்.

## ஆசுகவி

'பொருளடி பாவணி முதலிய கொடுத்துப்
பாடெனப் பாடுவோனே யாசு கவியே'[1]

பொருள், அடி, பா, அணி முதலியன கொடுத்துப் பாடுக என்றதும் உடன்பாடுவது ஆசு கவி.

## மதுர கவி

'தொடையுந் தொடையின் விகற்பமுஞ் செறியச்
சொற்சுவை பொருட்சுவை தோன்ற வுருவக
மாதிய வணிகளோ டணிபெறப் பாடுவோன்
மதுர கவியென வழுத்தப் படுமே'[2]

பொருட் செல்வம், சொற் செல்வம், தொடைவிகற்பம், செறிய உருவகம் முதலிய அலங்காரத்தோடு, உய்த்துணர்வோரது உள்ளங்கட்கு மாகடல் அமுதம்போல் பாடுவது மதுரகவி.

## சித்திரக்கவி

'ஏக பாத மெழுகூற் றிருக்கை
காதை கரப்புங் கரந்துறைச் செய்யுள்
கூட சதுக்கங் கோமூத் திரிமுத
றெரிந்து பாடுவோன் சித்திரக் கவியே'[3]

மாலை மாற்று முதலான அருங்கவிகளைப் படவடிவில் அமைத்துப் பாடுவது சித்திரக்கவி.

## வித்தாரக் கவி

'மறங்கலி வெண்பா மடலூர்த லியலிசை
பாசண்டத் துறை பண்மணி மாலை
தசாங்க மும்மணிக் கோவை கிரீடை
யிவைமுத லியவிரித் திசைத்துப் பாடுவோன்
வித்தாரக் கவியாம் விளம்பிடினே.'[4]

---

1. முத்து வீ. 56
2. ,, . 57
3. ,, . 58
4. ,, . 59

மும்மணிக் கோவை, நான் மணிமாலை என்னும் வகையில் விரித்துப் பாடுவது வித்தாரக் கவி ஆகும்.

## சித்திரக் கவிகளின் தனித் தன்மை

ஆசுகவி—கடுங்கவி என்றும், மதுரகவி—இன்கவி என்றும், வித்தார கவி—பெருங்கவி என்றும் கூறுமிடத்து, சித்திரக்கவி—அருங்கவி[1] என அழைக்கப்படுவதிலிருந்து அதன் தனித் தன்மையை உணரலாம்.

ஆசுகவி என்பது பாடுவோனாலும் பாடும் சூழலாலும் பெயர் பெறுவது. இது 'ஆசு கவி' என்ற குறிப்புத் தரப்படாவிடின் ஒரு கவிதையை 'ஆசு' என உட்கூறுகளை மட்டும் வைத்துக்கொண்டு காண இயலாது.

மதுரகவி என்பது பாடுவோனுடைய இனிமையாகப் பாடும் வன்மையாலும், பாடப்பட்ட நூலின் இனிமைத் தன்மையாலும் பெயர் பெறும் இனிமைப் பண்புக்குச் சொல், பொருள், தொடை, உவமை, உருவகம் ஓசை நயங்கள் காரணமாகப் பொருந்து கின்றன. ஆசு, சித்திரம் மற்றும் வித்தாரக் கவிகளிலும் இத்தகு பாடல்கள் உள்ளன. எனவே இதனையும் ஒரு தனிவகை எனப் பிரித்துக் கூறவியலாது.

வித்தார கவி என்பது விரித்துப்பாடுவது என்பதால் பெறும் பெயராகும். பொதுவாகப் பிரபந்தங்கள் வித்தாரக் கவியிலேயே பாடப்பெறும் மற்றபடி இதற்கெனத் தனிப் பண்புகள் இல்லை எனலாம்.

சித்திரக்கவி என்பது ஆசு, மதுர, வித்தாரகவி போல் அல் லாது ஒரு தனி வகையாகவே அடங்கும். இம்மூவகைப் பாடல் களிலுமுள்ள கூறுகளைத் தன்னகத்தே கொண்டிருப்பதுடன் சித்திரத்தில் அமையுமாறும் கண்டோர்வியக்கும் வகையிலும் சித்திரக்கவி அமைகின்றது. மேலும், யாப்பு, பாட்டியல், அணி யியல்கள் ஒருங்குணர்த்தும் ஒரு இலக்கிய வகையாக இது சிறப் பிடம் பெறுகிறது.

இலக்கண நூல்களின் வாயிலாக அறியலாகும் சித்திரக்கவி களைப் பின்வருமாறு தொகுத்துக் காணலாம்.

---

1. யாப்பருங்கலவிருத்தி உரை ப. 551-552

## நிகண்டுகள்

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டினது என்று கருதப்படும் திவாகர நிகண்டே தமிழ் நிகண்டுகளுள் பழமையானது ஆகும். இதன் இறுதிப் பகுதியாகிய 'பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி'யில் நால்வகைக் கவிகளின் இயல்புகளை விளக்குமிடத்து இருபது வகையான சித்திரக் கவிகள் கூறப்படுகின்றன. அவை,

> ''மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்
> ஏக பாதம் எழுகூற் றிருக்கை
> காதை கரப்பே கரந்துறைப் பாட்டே
> பாத மயக்கே பாவின் புணர்ப்பே
> கூட சதுக்கம் கோமூத் திரியே
> ஓரின தெழுத்தால் உய்த்த பாட்டே
> ஒற்றுப் பெயர்த்தல் ஒருபொருட் பாட்டே
> சித்திரப் பாவே, விசித்திரப் பாவே
> விகற்ப நடையே வினாவுத் தரமே
> சருப்பதோ பத்திரம் சார்ந்த வெழுத்து
> வருக்கமும் மற்றும் வடநூற் கடலுள்
> ஒருக்குடன் வைத்த உதாரண நோக்கி
> விரித்து மறைத்தும் மிறைக்கவிப் பாட்டுத்
> தெரித்துப் பாடுவது சித்திரக் கவியே''[1]

இவ்வாறு கூறப்படும் இருபது சித்திரக் கவிகளையே நாம் முதலில் நிகண்டுகளின் வாயிலாக அறிகின்றோம்.

## யாப்பருங்கலம்

கி.பி. பத்தாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் யாப்பருங் கலம் தமிழ் யாப்பிலக்கணம் கூறும் பழமையான நூலாகும். இதன் இறுதிப் பகுதியாகிய ஒழிபியலின் இறுதி நூற்பா சித்திரக் கவி வகைகளைக் கூறுகின்றது 'சித்திரக்கவி மாலை' என்னும் தலைப் பில் இந்நூல் கூறுவன இருபத்திரண்டு வகைகளாகும். அவை,

---

1. சேந்தன் திவாகரம்.

### சித்திரக்கவி மாலை

"மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்
ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறைப் பாட்டே
தூசங் கொளலே வாவ னாற்றி
கூட சதுர்த்தம் கோமூத் திரியே
ஓரெழுத் தினத்தால் உயர்ந்த பாட்டே
பாத மயக்கே பாவின் புணர்ப்பே
ஒற்றுப் பெயர்த்தல் ஒருபொருட் பாட்டே
சித்திரப் பாவே விசித்திரப் பாவே
விகற்ப நடையே வினாவுத் தரமே
சருப்பதோ பத்திரம் சார்ந்த எழுத்து
வருத்தனம் மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே"[1]

இவற்றுள் தூசங்கொளல், வாவனாற்றி என்னும் இரண்டைத் தவிர மற்ற இருபது வகைகளும் திவாகர நிகண்டு கூறுவனவேயாம்.

## உரையாசிரியர் கூறுவன

மேற்கண்ட யாப்பருங்கலம் ஒழிபியல் நூற்பாவிற்கு விளக்க மளிக்கும் இந்நூல் உரையில் உரையாசிரியர் கூறுவனவாக பதினொரு சித்திரக்கவி வகைகள் கிடைக்கின்றன. அவை, அக்கரச் சுதகம், மாத்திரைச் சுதகம், பிந்துமதி, நிரோட்டி, அலகிருக்கை வெண்பா, முண்டப்பாட்டு, தேர்கை, திரிபாகி, கண்டகட்டு, கல்லவல் என்பன.

## வீரசோழியம்

கி.பி. பதினொன்றாம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் வீரசோழியம் பத்துச் சித்திரக் கவிகளைக் கூறுகிறது. அவை,

---

1. யாப்பருங்கலம், ஒழிபியல். ५6.

சித்திரக் கவி

"ஏறிய மாலைமாற் றேசக் கரமினத் தாலெழுத்தாற்
கூறிய பாட்டு வினாவுத் தரமேக பாதமன்றித்
தேறிய காதை கரப்புச் சுழிகுளஞ் சித்திரப்பா
வீறியல் கோமூத் திரியும் பிறவும் விரித்துரையே"[1]

என்பது நூற்பா.

யாப்பருங்கலம் கூறுவனவற்றுள் பத்து வகைகளை மட்டுமே வீரசோழியம் குறிப்பிடுகிறது. 'பிறவும் விரித்துரையே' என நூற்பா விளக்குவதால் யாப்பருங்கலச் செய்திகளை இந் நூலாசிரியரும் அறிந்துள்ளார் எனலாம்.

## தண்டியலங்காரம்

தமிழில் அணியிலக்கணம் கூறும் தண்டியலங்காரம் கி. பி பன்னிரண்டாம் நூற்றாண்டினதாகக் கருதப்படுகிறது. இந் நூலின் சொல்லணியியலில் 'சித்திர கவி' என்னும் தலைப்பில் பன்னிரண்டு வகையான சித்திரக் கவிகள் கூறப்படுகின்றன.

சித்திர கவி

"கோமூத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே யெழுத்து வருத்தனம்
நாக பந்தம் வினாவுத் தரமே
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரஞ் சுழிகுளஞ் சருப்பதோ பத்திரம்
அக்கர சுதகமு மவற்றின் பால"[2]

என்பது நூற்பா. இவற்றுள் பத்து வகைகள் யாப்பருங்கலம் கூறுவன. நாகபந்தம், அக்கரச் சுதகம் என்னும் இரண்டு வகைகள் புதியனவாகக் கூறப்படுகின்றன. யாப்பருங்கலம் கூறும் ஏகபாதம், எழுகூற்றிருக்கை, தூசங்கொளல், வாவனாற்றி, ஓரினப்பாட்டு, ஓரெழுத்துப் பாட்டு, பாதமயக்கு. பாவின் புணர்ப்பு, ஒற்றுப் பெயர்த்தல், ஒருபொருட்பாட்டு. சித்திரப்பா, விசித்திரப்பா என்பவை தண்டியலங்காரத்தில் கூறப்படவில்லை.

---

1. வீரசோழியம். அலங்காரப் படலம். 17).
1. தண்டி.சொல்லணியியல் 98

### உரையாசிரியர் கூறுவன

தண்டியலங்கார உரையாசிரியர் விளக்கும் சித்திரக்கவி வகைகள் ஏழாகும். அவை, நிரோட்டம், மாத்திரை சுருக்கம், மாத்திரை வருத்தனை, முரசபந்தம், திரிபாகி, திரிபங்கி, பிறிது படுபாட்டு என்பன.

### மாறனலங்காரம்

கி.பி. பதினாறாம் நூற்றாண்டில் தோன்றிய மாறனலங் காரம் அணியியலை மிகவும் விரிவாக விளக்குகிறது. இந்நூலின் சொல்லணியியலில் 'சித்திர கவி' என்னும் தலைப்பில் இருபத்தாறு வகையான சித்திரக் கவிகள் கூறப்படுகின்றன.

சித்திர கவி

''வல்லின மெல்லின மிடையினப் பாட்டே
நிரோட்டிய மோட்டிய மோட்டிய நிரோட்டிய
மக்கரச் சுதக மதன்வருத் தனையே
வக்கர வுத்தி வினாவுத் தரமே
சக்கர பெந்தம் பதும பெந்த
மிரத பெந்த மாலை மாற்றே
கரந்துறை செய்யுட் காதை கரப்பே
பிரிந்தெதிர் செய்யுட் பிறிதுபடு பாட்டே
சருப்பதோ பத்திரங் கூட சதுக்கங்
கோமூத் திரிசுழி குளந்திரி பங்கி
யெழுகூற் றிருக்கை யொடிருபா னாறும்
பழிதீர் மடக்குடைச் சித்திரப் பாவே''[1]

என்பது நூற்பா.

இவற்றுள், யாப்பருங்கலம் கூறும் பதினொரு வகைகளுடன் புதியனவாக, நாகபந்தம், அக்கரச் சுதகம், வல்லினப்பாட்டு, மெல்லினப்பாட்டு, இடையினப் பாட்டு, நிரோட்டியம், ஓட்டியம், ஓட்டிய நிரோட்டியம், வக்கரவுத்தி, பதுமபந்தம், முரசபந்தம், இரத பந்தம், பிரிந்தெதிர் செய்யுள், பிறிதுபடுபாட்டு, திரிபங்கி என்னும் பதினைந்து வகைகள் கூறப்படுகின்றன. இவற்றுள் நாக பந்தம், அக்கரச்சுதகம் என்னும் இரண்டும் தண்டியலங்காரத்துள் கூறப்படுவனவேயாம்.

1. மாறன். சொல்லணியியல்-270.

## உரையாசிரியர் கூறுவன

மாறனலங்கார உரையாசிரியர் ஏழு சித்திரக்கவி வகைகளைக் கூறுகிறார். அவை. மாத்திரைச் சுருக்கம், மாத்திரைப் பெருக்கம், ஒற்றுப் பெயர்ந்தல். திரிபதாதி, அக்கரச் சுதகத்திலோர் பேதம், சதுரங்கபெந்தம், கடக பெந்தம் என்பன.

## இலக்கண விளக்கம்

கி. பி. பதினேழாம் நூற்றாண்டில் தோன்றிய இலக்கண விளக்கம் என்னும் நூலின் அணியியலில் 'மிறைக்கவி' என்னும் தலைப்பில் இருபது வகையான சித்திரக்கவிகள் கூறப்படுகின்றன.

மிறைக்கவி

''கோமூத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே மாத்திரைச் சுருக்கம்
மாத்திரை வருத்தனம் எழுத்து வருத்தனம்
ஒற்றுப் பெயர்த்தல் வினாவுத் தரமே
நாக பந்தம் முரச பந்தம்
திரிபாகி திரிபங்கி பிறிதுபடு பாட்டு
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரம் சுழிகுளம் சருப்பதோ பத்திரம்
அக்கரச் சுதகம் நிரோட்டம் என்ன
முறைபெற வகுத்த மிறைக்கவி இருபதும்
அறிவுறக் கிளந்த அவற்றின் பால''[1]

என்பது நூற்பா.

இவ் இருபது வகைகளும் முந்தைய நூல்கள் கூறுவனவேயாம்

## முத்து வீரியம்

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூல் பன்னிரண்டு வகையான சித்திரக்கவிகளைக் கூறுகின்றது. அவை, காதை கரப்பு, கரந்துறைப்பாட்டு. வினாவுத்தரம், எழுத்து வருத்தனம் எழுத்தழிவு, மாலை மாற்று, நிரோட்டகம், மாத்திரைச் சுருக்கம் மாத்திரை வருத்தனம், திரிபங்கி, திரிபாகி, ஒற்றுப் பெயர்த்தல் என்பன.

இவை யாவும் முன் நூல்களில் கூறப்பட்டவையேயாம்.

---

1. இலக்கண விளக்கம், அணியியல் 6[illegible]0

## சுவாமி நாதம்

கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய சுவாமி நாதம் அணியதிகாரம் இருபத்து மூன்று வகையான சித்திரக் கவி களைக் குறிப்பிடுகிறது.

"வருங்கோமூத் திரிசருப்ப தோபத்திரம் மாலை
மாற்று எழுத்துச் சுதஞ்சதுரங் கக்கவி சக்கரமே
கரந்துறையுஞ் செய்யுள் சுழி குளங்கூடச் சதுக்கம்
காதைகரப்பு எழுத்துவருத் தனம்ஒற்றுப் பெயர்த்தல்
விரிந்ததிரி பங்கிதிரி பதாதிநிரோட் டிவினா
விடைமுரசு பெந்தம்மாத் திரையின்வருத் தனமே
பிரிந்தமாத் திரைச்சுருக்கம் பிறிதுகவி கடக
பெந்தம் தேர்க்கவிநாக பெந்தமுஞ்சேர்க் குவரே"[1]

என்பது நூற்பா.

இவை யாவும் முன் நூல்களில் கூறப்பட்டவையேயாம். தண்டி யலங்கார நூலுள் பன்னிரண்டு வகையும் உரையிலுள்ள எட்டும் புதிதாகச் சதுரங்கம், கடகபந்தம், தேர்க்கவி ஆகிய மூன்றும் சேர்த்து 23 என்று சாமிகவி ராயர் கூறுகிறார்.

## குவலயானந்தம்

கி. பி. இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய குவலயானந்தம் என்னும் நூல் சித்திர இயல் என்னும் ஒரு இயலைக் கொண்டுள்ளது அதில் 'சித்திரம்' என்னும் தலைப்பில் பதினேழு சித்திரக்கவிகள் கூறப்படுகின்றன.

சித்திரம்

''மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்
ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறைப் பாட்டே
பாத மயக்கே பாவினம் புணர்ப்பே
கூட சதுக்கம் கோமூத் திரிகை
ஓர் எழுத்து இனத்தால் உயர்ந்த பாட்டே

1. சுவாமிநாதம். அணியதிகாரம்-2.

சித்திரப் பாவே விகற்ப நடையே
வினாவுத் தரமே சருப்பதோ பத்திரம்
சார்ந்த எழுத்தே வருக்கம் ஆறும்
வடநூற் கடலுள் ஒருக்குடன் வைத்த
உதாரணம் நோக்கி விருத்தம் நிறைத்த
மிறைக் கவிப் பாட்டும்
தெரியப் பாடுவது சித்திரக் கவியே''[1]

என்பது நூற்பா. இவை யாவும் யாப்பருங்கலம் கூறும் வகைகளே யாம்.

## வெண்பாப் பாட்டியல்

பாட்டியல் நூல்களுள் வெண்பாப் பாட்டியல், நவநீதப் பாட்டியல் போன்றன சித்திரக்கவி பற்றி விளக்குகின்றன.

சித்திரக்கவி எவ்வாறு அமையவேண்டும் என வெண்பாப் பாட்டியல் விளக்குவது அறியத்தக்கது.

சித்திர கவி

''யாப்புடைய மாலைமாற் றாதியா வேனையவும்
வாய்ப்புடைய சொல்லின் வகுத்தமைத்து-நீப்பிலா
வண்ணமுந் தொன்னூன் மரபு வழுவாமற்
பன்னுவது சித்திரத்தின் பா''[2]

(இ-ள்) மாலைமாற்று முதலான பல விகற்பத்தாற் செய்யப் பட்டு ஓசை கெடாமல், எழுத்துக் குற்றம், சொற்குற்றம், பொருட் குற்றம், யாப்புக் குற்றம், அலங்காரக் குற்றம் என்னுங் குற்றங்கள் படாமல், பாடப்படுங் கவி சித்திரக்கவியாம்.

இப்பாடலின் கீழே உரையாசிரியர் முப்பதுக்கும் மேற்பட்ட சித்திரக்கவி வகைகளைக் கூறுகின்றார். அவை, மாலை மாற்று, சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதை கரப்பு, கரந்துறைப்பாட்டு, தூசங் கொளல், வாவனாற்றி, கூடசதுக்கம், கோமூத்திரி, ஒரெழுத்துப்பா. வல்லினப்பாட்டு, மெல்லினப் பாட்டு, இடையினப்பாட்டு, சித்திரக்கா, விசித்திரக்கா, வித்தா ரக்கா, விகற்பநடை வினாவுத்தரம், சருப்பதோபத்திரம், எழுத்து

---

1. குவலய. சித்திர இயல். 11
2. வெண்பாப் பாட்டியல். 2. செய்யுளியல். 4.

வருத்தனை, நாகபந்தம் முரச பந்தம், நிரோட்டகம், சித்து, ஒரு பொருட்பாட்டு, பலபொருட்பாட்டு, மாத்திரைப் பெருக்கம், மாத்திரைச் சுருக்கம், எழுத்துச் சுருக்கம் என்பன.

இவற்றுள் வித்தாரக்கா, சித்து, பல பொருட்பாட்டு என்பன புதியன. இவை பற்றிய விளக்கங்கள் கிடைக்கவில்லை.

## நவநீதப் பாட்டியல்

இந்நூலில் சக்கரம் முதலான சித்திரக்கவிகள் என்று மட்டுமே கூறப்படுகின்றன.

சித்திரச் செய்யுளுக்கு ஆவதோர் நெறி

"சக்கர மேமுதற் சித்திரச் செய்யுள் தசாங்கங்களை
அக்கரக் கூறு படுப்பினு மானந்தம் அல்லவற்றின்
இக்குண மில்லாமை யானவை சொன்ன இவை
யுமன்றி
மிக்குள யாவு மிமையோர்க் கிலக்கு விலக்கிலவே"[1]

என்பது பாடல்

இப்பாடலின் உரையில் இருபதுக்கும் மேற்பட்ட சித்திரக் கவிகள் கூறப்படுகின்றன. அவை சக்கரம், சுழிகுளம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, காதை கரப்பு, கரந்துறைப்பாட்டு, தூசங் கொளல், வாவல் நாற்றி, கூடசதுக்கம், கோமூத்திரி, ஒற்றுப் பெயர்த்தல், ஒரு பொருட் பாட்டு, சித்திரக்காதை, விசித்திரப்பா, விகற்ப நடையும் வினாவுத்தரமும், சருப்பதோபத்திரம், எழுத்து வருத்தனம், நாகபந்தம், முரசபந்தம், விதான வருக்கம், முந்திரி யார் வஞ்சினம் என்பன.

இவற்றுள், விதான வருக்கம், முந்திரியார் வஞ்சினம் என் பவை புதியன. இவற்றிற்கான விளக்கங்களும் கிடைக்கவில்லை.

## இலக்கண நூல்கள்—சில வேறுபாடுகள்

சில பாடல்களுக்குரிய இடத்தை அளிப்பதில் இலக்கண நூல் களுக்குள்ளே பல மாறுபாடுகள் தெரிகின்றன.

---

1. நவநீதப் பாட்டியல். 2. செய்யுண் மொழியியல் பா. 67 உ. வே. சா. நூல்நிலைய வெளியீடு. 2. 1961.

இனத்தால், எழுத்தால் வரும் பாட்டை, தண்டி, இலக்கண விளக்கம், முத்து வீரியம் என்னும் நூல்கள் மடக்கணியில் கூறு கின்றன. மாறனலங்காரம், வீரசோழியம், யாப்பருங்கலம் என்பவை இவற்றைச் சித்திரக்கவியில் கூறுகின்றன.

முத்து வீரியம் கூறும் செய்திகள் சில ஆய்வுக் குரியன. எடுத்துக் காட்டாக, ஏகபாதம், கரந்துறைப் பாட்டு, காதை கரப்பு, கோமூத்திரி, கூடசதுக்கம், எழுகூற்றிருக்கை என்னும் ஆறும் சித்திரக்கவியின் பாற்படுமென முத்துவீரியம் யாப்பதிகாரத் தில் கூறுகிறது. அணியியலுள் சித்திரக்கவி என்ற குறிப்பே இல்லை. சொல்லணி என்ற தலைப்பில் நிரோட்டகம், எழுத் தழிவு, எழுத்து வருத்தனம், மாலை மாற்று, கரந்துறைச் செய்யுள், காதை கரப்பு, பிறிது படுபாட்டு, திரிபங்கி, மாத்திரைச் சுருக்கம், மாத்திரைப் பெருக்கம், ஒற்றுப் பெயர்தல், திரிபாகி என்பன கூறப்பட்டுள்ளன. ஏகபாதம், கோமூத்திரி, கூடசதுக்கம், எழுகூற்றிருக்கை என்பவை பற்றிய விளக்கம் இல்லை. சொல் லணியின் கீழ்க் கூறப்பட்டுள்ளவை அனைத்தையும் மடக்கு எனக் கொள்வதும் பொருந்தவில்லை.

மாறனலங்காரம், வல்லினப்பாட்டு, மெல்லினப்பாட்டு இடையினப்பாட்டு என்பவற்றைச் சித்திரக்கவியில் கூறுகின்றது. தண்டியில் இவை எழுத்து மடக்கெனக் கூறப்படுகின்றன. நிரோட்டியத்தை இருநூல்களும் சித்திரக்கவியாகவே கூறு கின்றன.

எழுத்து மடக்கில் கூறப்படுவனவற்றிற்கும் சித்திரக்கவியில் கூறப்படுவனவற்றிற்கும் மிகுந்த வேறுபாடில்லை எனலாம். ககரவர்க்கப்பாட்டு, தகரவர்க்கப்பாட்டு இரண்டையும் வல்லினப் பாட்டு எனலாம். ககரவர்க்கத்தை வல்லினப் பாட்டு எனக் கொண்டால் அதனைச் சித்திரக் கவியாகக் கூறலாம். ககர வர்க்க எழுத்து மடக்கி வந்ததாகக் கொண்டால் எழுத்து மடக்கில் கூற நேரிடும்.

இதைப் போன்றே வல்லினப் பாட்டை வல்லெழுத்துகள் மடக்கி வந்ததாயும், மெல்லினப் பாட்டை மெல்லெழுத்துகள் மடக்கி வந்ததாயும், இடையினப் பாட்டை இடையெழுத்துகள் மடக்கி வந்ததாயும், ஒட்டியம், நிரோட்டியம் இவற்றில் அவற் றிற்குரிய எழுத்துகள் மடக்கி வந்ததாகவும் கொண்டு இவை அனைத்தையும் எழுத்து மடக்காகக் கொள்ளவும் இடமுண்டு.

ஏகபாதத்தை யாப்பருங்கலம், வீரசோழியம், முத்து வீரியம் என்பவை சித்திரக் கவியாகக் கூறுகின்றன. ஒரு அடியே நான்கு முறை மடக்கி வருதல் ஏகபாதமாகும். எனவே இதை மடக்கிலும் கூறலாம்.

கரந்துறைச் செய்யுள், காதை கரப்பு, கூடசதுக்கம் என்பவை மடக்கிலும் சித்திரக்கவியிலும் சேர்க்க இயலாத நிலையிலுள்ளன.

தண்டியலங்காரம், இலக்கண விளக்கம், முத்து வீரியம் என்ற மூன்று நூல்களும் கூறும் காதை கரப்பை மாறனலங்காரம், வீரசோழியம், யாப்பருங்கலம் என்பவை கரந்துறைப்பாட்டு எனவும், முற்கூறிய மூன்று நூல்களும் காதைக் கரப்பு என்பதைப் பிற்கூறிய மூன்று நூல்களும் கரந்துறைப் பாட்டு எனவும் கூறு கின்றன.

இவ்வாறு இப்பாடல்களை முறைப்படுத்துவதில் இலக்கண நூல்களினிடையே சில வேறுபாடுகளை அறியலாம்.

## சில அடிப்படைகள்

பொது நிலையில், சித்திரக்கவி எனின் சித்திரத்தில் அமைந்த கவிகள் என்றே புலப்படும். ஆயினும், இலக்கண இலக் கியங்களில் வழங்கப் பெறும் இக்கவிகளை நுணுகி ஆராயுமிடத்து இவை சித்திரத்தில் பொருந்தும் வகையினோடல்லாது வேறு சில அடிப்படைகளிலும் அமையக் காணலாம்.

### 1. மாத்திரை அடிப்படை

மாத்திரைச் சுருக்கம், மாத்திரை வருத்தனம் போன்றன எழுத்துக்களின் ஒலி அளவு அல்லது மாத்திரை அடிப்படையில் அமைகின்றன.

### 2. எழுத்து அடிப்படை

அக்கரச் சுதகம், இடையினப் பாட்டு, எழுத்து வருத்தனம், ஒற்றுப் பெயர்த்தல், ஓட்டிய நிரோட்டியம், ஓட்டியம், ஓரினப் பாட்டு, ஒரெழுத்துப் பாட்டு, கரந்துறைப் பாட்டு, காதை கரப்பு, திரிபாகி, நிரோட்டியம், பிந்துமதி, மெல்லினப் பாட்டு, வல்லினப் பாட்டு போன்ற வகைகள் எழுத்து அடிப்படையில் அமைகின்றன.

### 3. சொல்–எண் அடிப்படை

எழுகூற்றிருக்கை, கூட சதுர்த்தம், சித்திரப்பா, விசித்திரப்பா போன்றன சொல் மற்றும் எண் அடிப்படையில் அமைந்தவை.

4. சீர், அடி அடிப்படை

ஏகபாதம், திரிபங்கி, பிறிதுபடுபாட்டு போன்ற வகைகள் சீர் மற்றும் அடி அடிப்படையைக் கொண்டுள்ளன.

5. விடுகவி, வினாவிடை அடிப்படை

பிரேளிகை என்பது விடுகவி போலவும், வினாவுத்தரம் வினாவொடு விடையும் சேர்ந்து வருவதாகவும் அமைகின்றன.

6. திறனறி அடிப்படை

சித்திரக்கவிகள் யாவும் கவிஞனின் தனித்திறமையால் அமைபவையே. இவற்றுள் பல கவிஞன் தானாகவே இயற்றுபவை, இவற்றுள் சில கவிஞனின் திறனறிய மற்றவர்கள் கேட்க அவன் படைப்பனவாகவும் அமைகின்றன. எடுத்துக்காட்டாக, ஒரு பொருட்பாட்டு, தூசங்கொளல், பாத மயக்கு, பாவின் புணர்ப்பு பிரிந்தெதிர் செய்யுள், வாவனாற்றி போன்றவை குறிப்பிடத் தக்கன.

7. குறிப்பு-வெளிப்படை அடிப்படை

சொற்களை வெளிப்படையாக அல்லாமல் குறிப்பாகவும், ஒரு சில வழக்குச் சொற்களால் மறைத்தும் விரித்தும் சொல்லும் அடிப்படையில் சில அமைகின்றன. கண்டகட்டு, கல்லவல், தேர்கை, வக்கிரவுத்தி போன்றனவற்றை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

8. ஓவிய வடிவில் பொருந்த அமைவன

இரத பந்தம், கடக பந்தம், கோமூத்திரி, சக்கரம், சதுரங்கம், சருப்பதோபத்திரம், சுழிகுளம், தேர்க்கவி, நாகபந்தம், பதும பந்தம், மாலை மாற்று, முரச பந்தம் போன்ற வகைகள் ஓவிய வடிவங்களுள் பொருந்தும் வகையில் பாடப்படுவனவாம்.

பொதுவாக நோக்குமிடத்து, இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு அடிப்படையை மட்டுமே கொண்டது எனக் கூறவும் இயலாது. சில வகைகள் வேறு சிலவற்றின் அடிப்படைக் கூறுகளையும் தன்னுள் கொண்டுள்ளன. எடுத்துக் காட்டாக, எழுகூற்றிருக்கை, சித்திரப்பா போன்றவை எண்-சொல் அடிப்படையில் அமைந்திருந்தாலும் இவற்றைச் சில வடிவ அமைப்புகளிலும் பொருத்த முடியும். இவை ஒவ்வொன்றையும் நுணுகி ஆராய இவ் உண்மை புலனாகும்.

சித்திரக்கவிகள் பல்வேறு அடிப்படையினவாயினும் 'சித்திரக் கவி' 'சித்திரக்கவிப் பாட்டு' 'சித்திரக் கவிமாலை' 'சித்திரம்' 'மிறைக்கவி' (அருங்கவி) என்னும் தலைப்புகளிலேயே இவை இலக்கண நூல்களில் விளக்கப்படுகின்றன.

பொது நிலையில், 'சித்திரம்' என்பதற்கு ஓவியம் எனப் பொருள் கொண்டு இரத பந்தம், கமலபந்தம் போன்று ஒரு குறிப் பிட்ட வடிவ வரையறைக்குள் அமைக்கும் வகையில் இக் கவி களைச் சுட்டலாம்.

தனி நிலையில், 'சித்திரம்' என்பது அழகு, சிறப்பு, வியப்பு என்னும் பொருளிலும் இவை அமைகின்றன.

## பண்டைய இலக்கியக் கூறுகள்

அழகும் சிறப்பும் பொருந்திக் காண்போருக்குப் பெரு வியப் பைத் தர வல்ல இச் சித்திரங்களின் கூறுகள் பண்டைய தமிழ் இலக்கியங்களிலும் பரவி இருக்கக் காணலாம்.

தொல்காப்பியர் இருபது வண்ணங்களைக் குறிப்பிடுகின்றார். இவர் சித்திர வண்ணம்' பற்றிக் கூறுமிடத்து, 'நெடியவும் குறியவும் நேர்ந்துடன் வருமே'[1] என விளக்குவர். தமிழ் எழுத்துக்களில் குறிலும் நெடிலும் மாத்திரை அளவு வேறுபாடுடையன. இவை விரவி வரும் பாடல் அழகாகவும் சிறப்பாகவும் அமையும் என்னும் நோக்கிலேயே இவ் வண்ணத்திற்குச் 'சித்திர வண்ணம்' என அவர் வழங்கியிருத்தல் வேண்டும்.

மேலும், எழுத்து அடிப்படையில் அமைந்த வண்ணங்களே ஓசைக்கு அடிப்படையாய்ப் பிற்காலத்தில் சிறப்புற்றன என்னும் கூற்றும் இவண் ஆராயத் தக்கது.[2]

சிலப்பதிகாரத்தில் கூறப்படும் குழலோனுக்கான இசை நுணுக் கங்களில் 'சித்திரப் புணர்ப்பு' என்னும் வகை எழுத்து ம்ற்றும் ஓசை அடிப்படையில் அமைவதை உரையாசிரியர் சுட்டுவர்.[3]

சித்திரக்கவிகளில் பல எழுத்து, சொல், எண் போன்றவற்றின் அடிப்படையில் அமைவதை நோக்குமிடத்து, பண்டைய இலக் கியக் கூறுகள் அடங்கிய ஒரு சிறந்த இலக்கிய வகையாகவே அவற்றை உணரலாம்.

---

1. தொல்காப்பியம். பொருள். 214.
2. டாக்டர் தமிழண்ணல். சங்க இலக்கிய ஒப்பீடு 1. ப. 80.
3. சிலம்பு. அரங்கேற்றுக் காதை 56. உரை.

## இதழகல் பாட்டு

உ,ஊ,ஒ,ஓ,ஔ,ப,ம,வ ஆகிய எழுத்துக்கள் இதழ் குவிந் தொலிக்கப் பிறப்பன வாதலின் இவை வாராது பாடுவது நிரோட்டகம் என்னும் சித்திரக்கவியாகும்.

"எய்தற் கரிய தியைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்"[1]

என்னும் குறட்பா இதழும் இதழும் கூடாது ஒலிப்பதைக் காண லாம். எனவே, திருக்குறள் காலத்திற்கும் முன்பே இவ்வகைப் பாடல்களை இயற்றும் பழக்கமிருந்தது எனலாம்.

## மடக்கு

சொற்கள் மீண்டும் மீண்டும் மடக்கி வந்து பொருள்தரும் அமைப்பைச் சங்க இலக்கியங்களிலேயே காண முடிகிறது. எடுத்துக் காட்டாக,

"மண் திணிந்த நிலனும்
நிலனேந்தியவிசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித் தலைஇய தீயும்
தீ முரணிய நீரும்
என்றாங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போல"[2]

என்னும் பாடலில் சொற்கள் மடக்கி அமையக் காணலாம். இவ்வாறே,

"உள்ளினென் அல்லெனோ யானே உள்ளி
நினைந்தனென் அல்லெனோ பெரிதே நினைந்து
மருண்டனென் அல்லெனோ உலகத்துப் பண்பே"[3]

போன்ற பாடல்களையும் சுட்டலாம்.

பெருங் கவிஞர்களுக்குச் சொற்கள் அவர்தம் கருத்துக்குத் தக வந்து முந்துமாதலால் இஃது இயல்பாகப் பாடப்படும் பாட்டுப் போல அமைந்து விடுகிறது[4] என்னும் கூற்றும் இவண் குறிப்பிடத் தக்கது.

---

1. குறள். 489
2. புறம். 2
3. குறுந். 99
4. டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, திருக்குறள் அணிநலம் ப.224

## இலக்கியமும் இலக்கணமும்

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புவதே மரபு. இலக்கண நூல்களில் கூறப்பெறும் சித்திரக் கவிகளை நோக்கு மிடத்து அதற்கும் முன்பே இத்தகைய இலக்கியங்கள் வழக்கி லிருந்தன என அறியலாம். இலக்கணங்களில் கூறப்பட்டுள்ளவை களின் அடிப்படையைக் கொண்டு பின்னாளில் மேலும் பல புதிய சித்திரக் கவிகள் இலக்கியமாக வளர்ச்சிபெற்றுள்ளன. பின்வந்த இலக்கியங்கள் பலவற்றிலும் புதிய அமைப்புகளைக் காணலாம். எடுத்துக்காட்டாக ஓவியத்தில் அமைக்கப்படும் சித்திரக் கவி களைக் கூறலாம்.

அசுவ பாத பந்தனம், அறுமீன் பந்தனம், ஆனையடிச் சதுரங்க பந்தனம், உருத்திராக்க கண்டிகா பந்தம், கச பந்தம், சங்க பந்தம், சடாக்கர பந்தம், சதுரங்க அசுவகதி பந்தம், சதுர நாக பந்தம், சஸ்திர பந்தம், சிவலிங்க பந்தம், சொக்கட்டான் பந்தம், தமருக பந்தம், திருக்கைப் பந்தம், திருவடிப்பந்தம், மத்தள பந்தம், மயில் பந்தம், மலைப்பந்தம், மாணிக்க மாலைப் பந்தம், மும்மீன் பந்தம், விருச்சிக பந்தம், வில்வதள பந்தம், விளக்கு பந்தம், வேலாயுத பந்தம் போன்றவை குறிப்பிடத் தக்கன.

இலக்கண நூல்கள் விளக்கும் சித்திரக் கவிகளின் அடிப்படை யிலும் ஒருசில மாற்றங்களுடன் வளர்ச்சியையும் காட்டுவன வாகவே இப்புதிய வகைகள் அமைகின்றன. எடுத்துக்காட்டாக,

மலைப்பந்தம் என்பது இரத பந்தத்தின் மேல் பகுதி அமைப் பினைக் கொண்டது.

சிவலிங்க பந்தம், விளக்கு பந்தம் என்பவை இரத பந்தத்தின் மேல் கீழ் இரு பகுதிகளையும் மாற்றி அமைத்த வடிவில் உருப் பெறுகின்றன.

அறுமீன் பந்தனம், மும்மீன் பந்தனம் என்பவை பதும பந்தம் போன்றவற்றின் அடிப்படையின.

மாணிக்க மாலைப் பந்தம் கடக பந்தத்தினை ஓரளவு ஒத் துள்ளது.

இவ்வாறு வேறு பல வகைகளும் சில இலக்கண வரையறை களை உள்ளடக்கியதாகவே காணப்படுகின்றன.

மேலும், எழுகூற்றிருக்கை அடிப்படையில் எண்கூற்றிருக்கை, ஒருபது கூற்றிருக்கை, நாற்கூற்றிருக்கை போன்றனவும் தோன்றி யுள்ளன.

திரிபங்கி என்பது போலவே சத்தபங்கி,சோடசபங்கி, நவபங்கி, பஞ்சபங்கி என்பனவும் அமைகின்றன.

திரிபாகி என்பதையே நடுவெழுத்தலங்காரம் எனப் பின்னா ளில் பலரும் பாடியுள்ளனர்.

## தனி இலக்கிய வகை

பொருள் நிலையில் இல்லாது வடிவ நிலையிலும் சிற்றிலக் கியங்கள் வகைப்படுத்தப்படுகின்றன. பாவகை-பாடல் எண் வகை -தொடைவகை-சந்தவகை-பிற வகை எனக் கொள்ளலாம். அவற்றுள் இச் சித்திரக்கவி வகையும் ஒன்றாகக் கொள்ளலாம் என்பர்.[1] இவ்வகையில் சித்திரக்கவிகள் ஒவ்வொன்றும் ஒரு இலக்கிய வகையாகவே அமைகின்றன. எடுத்துக்காட்டாக எழு கூற்றிருக்கை, நாகபந்தம் போன்றவை குறிப்பிடத்தக்கன.

## இணைந்த வகைகள்

சித்திரக்கவிகளைத் தனித்தனியே பாடுவதும் பொருள்கொள் வதும் அரிய செயல். அதிலும்,தனித்தனியான வகைகள் இரண்டும் பலவும் கூடிய நிலையில் பாடலை அமைப்பதும் அவற்றிற்குப் பொருள் கொள்வதும் அரிதினும் அரிதாகும். எடுத்துக்காட்டாக,

கமல பந்தம், திரிபங்கி இவை இருவகைகளும் ஒரே செய்யுளில் வருமாறு அமைத்து 'கமல பந்தம் திரிபங்கி' என்றும்,

ஏகபாதம், மாலை மாற்று இவையிரண்டும் ஒரே செய்யுளில் அமைந்து 'ஏகபாத மாலை மாற்று' என்றும்,

பிறிதுபடு பாட்டு, திரிபங்கி இவை இணைந்து 'பிறிதுபடு திரி பங்கி' என்றும் வழங்கக் காணலாம்.

இத்தகைய இணைந்த வகைகள் பலவற்றிற்கும் புதிய பட வடிவுகளையும் இலக்கியங்கள் தருகின்றன. ஏகபாதம், மாலை மாற்று, திரிபங்கி என இவ்வாறு ஒரே செய்யுளில் அமைத்து அவற்றை நாகபந்தத்திலும் அமைப்பர். இந்நாக வடிவங்கள் பல வளைவுகளைக் கொண்டும், சில மிக எளிமையாகவும் அமை கின்றன.

---

1. டாக்டர் ந.வீ. செயராமன். சிற்றிலக்கியத் திறனாய்வு ப. 99

இதுபோன்ற அமைப்புகள் திருவலங்கற்றிரட்டு, வைணவி சந்நிதி முறை பத்துப் பிரபந்தம், தண்டபாணி சுவாமிகள் தனிப் பாடல் திரட்டு போன்ற பல நூல்களினிடையே அமையக் காண லாம்.

## தனி நூல்களின் உள்ளடக்கம்

சித்திரக்கவிகள் தனித்தனியாகவும், பல கவிகள் சேர்ந்த தொகுதியாகவும் நூல் வடிவில் உருவாக்கப்பட்டுள்ளன. 'சித்திர கவி மாலை'[1] போன்ற தனி நூல்களின் உள்ளடக்கம் அவற்றின். பிரபந்த இலக்கிய அமைப்புக்கள் சிலவற்றையும் காட்டுகின்றன இத்தகைய நூல்களில், முதலில் கடவுள் வணக்கம், அவையடக்கம் காப்பு போன்றவை அமைந்து, பின்னர் நூல் தொடங்கக் காண லாம்.

இந்நூலமைப்பில் ஒவ்வொரு பாடலும் பாட்டுடைத் தலை வன் மீது அமைந்து, அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையாக வும், சித்திரத்தில் பொருந்தும் படியாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு முப்பது அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையிலும் பாடல்கள் அமைகின்றன.

நூலிறுதியில் 'புறநடை' 'வாழ்த்து' போன்ற பகுதிகள் அமைந்து நூல் நிறைவு செய்யப்படுகின்றன. இவ்வமைப்பையே பல நூல்களும் பின்பற்றக் காணலாம்.

## இலக்கியங்களினிடையே

சிறு பிரபந்தமாகவே அமையும் இச்சித்திரக் கவிகள் சில, பிரபந்தங்களின் ஓர் அங்கமாகவும் அமைகின்றன. 'புராணங்கள்' பாடிய சிலரும் 'கலம்பகம்' 'அந்தாதி' போன்ற சிற்றிலக்கியங்கள் பாடிய சிலரும் தம் நூலின் இடையிடையே இக்கவிகளை அமைத் திருக்கக் காணலாம். எடுத்துக் காட்டாக, சா. செ. துரைசாமிப் பிள்ளை எழுதிய அற்புத அலங்காரத் தசரத்ன சிந்தாமணி, சிவஞான முனிவரின் காஞ்சிப் புராணம் (சுரகரீவப் படலம்), தேவி காமாட்சிதாசனின் காமாட்சி அம்மன் அந்தாதி, காமாட்சி அம்மன் அலங்காரப் பஞ்சகம், தி சு. ஆறுமுகம் எழுதிய குறுக்குத்

1. பி.வி. அப்துல்கபூர் சாகிப். சித்திரகவி மாலை
ஆர்.என். கல்யாணசுந்தரகவுண்டர். கந்தன் சித்திர பந்தன மாலை.

துறைக் கலம்பகம், பல புலவர்கள் இயற்றிய தனிப்பாடற்றிரட்டு, மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் திரு அம்பர்ப்புராணம் (நைமிசாரணியப் படலம்), திருஞானசம்பந்தர் தேவாரம், பாம்பன் சுவாமிகளின் திருவலங்கற்றிரட்டு, பல புலவர்கள் பாடிய தோத்திரப் பாடற்றிரட்டு, குலாம் காதிறு புலவரின் நாகூர்ப்புராணம் (மலடு தீர்த்த படலம்), சதாவதானம் சுப்பிரமணிய ஐயரின் பல பாடற்றிரட்டு, பல புலவர்கள் இயற்றிய பலர் செய்கவிகள், சாதுராம் சுவாமிகளின்வைஷ்ணவிசந்நிதிமுறை போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கன.

## தமிழ் விடுதூது

இந்நூலில் அரசனுக்குரிய அங்கங்களாக சித்திரக் கவிகளின் பெயர்கள் சில சுட்டப்படுகின்றன. அவை வருமாறு,

'அக்கர வர்த்தியென லாமென்பார் பூலோக
சக்கர வர்த்தியுநீ தானன்றோ-சக்கரமுன்
பேந்தி நெடுந்தேர்மே லேறிச் சுழிகுளம்
நீந்தியோர் கூடநிறை சதுக்கம்—போந்து
மதுரங் கமழ்மாலை மாற்றணிந்து சூழும்
சதுரங்க சேனை தயங்கச்—சதுரமாய்
முரசங் கறங்க முடிவேந்தர் சூழ
வரசங்க மீதிருந்து வாழ்ந்தே...'[1]

இதில், அக்கரவர்த்தி (பூமி), சக்கரம் (படை), தேர் (ஊர்தி) சுழிகுளம் (சுழித்த குளம்), கூடசதுக்கம் (கூடங்கள் நிறைந்த நாற்றெருக்கள் கூடுமிடம்), மாலைமாற்று (வேறுபட்ட பூமாலைகள்), சதுரங்கம் (இரதகசதுரகபதாதிகள்), முரசம் (பேரிகை) என எட்டு வகையான சித்திரக் கவிகள் குறிப்பிடப்படுகின்றன.

இதுபோன்ற பாடல்களால் இவ்வகைகளை அறிவதுடன் உவமை, உள்ளுறை, சிலேடை போன்ற இலக்கிய நயங்களையும் சுவைக்க முடிகின்றது.

## பாடுவோர்

சித்திரக் கவிகளைப் பாடுவோர் மிகவும் புலமை உடையவராகவும் வல்லவராகவுமே காணப்படுகின்றனர். இவர்களது

1. தமிழ் விடுதூது. 46-49

சிறப்பைக் கருதி இவர்களுக்கெனச் சில 'பட்டப்பெயர்'களையும் வழங்கி இருத்தலைக் காணலாம் எடுத்துக் காட்டாக,

'சிங்கப்பூர்ச் சித்திரகவி நாவலர்' சி. வே. நாராயணசாமி நாயகர்,

'சித்திரகவி' சுப்பையா நாயுடு,

'சித்திர கவி' சையது இமாம்பாவல்,

'சித்திர கவிச் சரபம்' பி.வி. அப்துல் கபூர் சாகிப்,

'சித்திரக் கவி நாவலர்' சா.செ. துரைசாமிப்பிள்ளை,

'சித்திர கவிப் புலவர்' திருமலை சக்கையா கவுடர்,

போன்றோர் குறிப்பிடத்தக்கவராவர்.

## பாடுபொருள்

சித்திரக் கவிகள் பெரும்பான்மை புறப்பொருளிலும், சிறு பான்மை அகப்பொருளிலும் அமைகின்றன. வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரின் கலாவதி நாடகத்தில் சில அகப் பொருட் பாடல்கள் கிடைக்கின்றன.

## பாடப்படுவோர்

அருகன், அம்பிகை, சூரியன், சிவன், திருமால், முருகன், விநாயகர் போன்ற கடவுளர் மீதும், ஆசிரியர், குல குரு இவர்கள் மீதும், பெருநிலக்கிழார், செல்வந்தர் போன்றோர்மீதும் சித்திரக் கவிகள் பாடப்பட்டுள்ளன.

சித்திரக் கவி நூலுக்குச் சிறப்புப் பாயிரமாகவும், சாத்து கவி களாகவும் இவை வழங்கப்படுகின்றன. அப்பொழுது பாடலாசிரியர் பற்றியும் அவர் திறன் குறித்தும் சித்திரக் கவிகள் அமைகின்றன. எடுத்துக் காட்டாகச் சிலவற்றைக் காணலாம்.

### கடவுளர்

அருகக் கடவுளின்மீது அமிதசாகரரும்; அம்பிகை, சூரியமூர்த்தி, திருமால், விநாயகர், சிவபெருமான், முருகன்மீது தண்டபாணி சுவாமிகளும்; காமாட்சி அம்மன்மீது தேவி காமாட்சிதாசனும், திருமால்மீது திருமங்கையாழ்வாரும்; முருகக் கடவுள்மீது பாம்பன் சுவாமிகள், அருணகிரிநாதர், காஞ்சிபுரம் கு. கந்தசாமிப் பிள்ளை, ஆர். என். கல்யாண சுந்தர கவுண்டர் போன்றோரும்; சிவபெருமான்மீது ஞானசம்பந்தர், நக்கீரர் போன்றோரும் பாடியுள்ளனர்.

### மடாதிபதிகள்

காளையார் கோவில் வேதாந்த மடத்தின் குரு செல்லப்ப ஞான தேசிகர் மீது இளையான் குடி வேதாந்த மடத்தின் குரு சிவானந்த சுவாமிகள் பாடிய பாடல்கள் போன்றவை குறிப்பிடத் தக்கன.

### செல்வந்தர், பெருநிலக்கிழார்

மலையாண்டி அப்பையநாயக்கர்மீது சங்கரமூர்த்திக் கவி ராயரும்; பெரியசாமி உடையார்மீது எம்.எஸ். துரைசாமிப் பிள்ளையும்; நல்ல தம்பிச் சர்க்கரை மன்றாடியார்மீது இலட்சுமண பாரதியாரும்; டி. கே. சண்முகம்மீதும், டி.என். இராமச்சந்திரன் மீதும் அப்துல்கபூர் சாகிப்பும் பல பாடல்களைப் பாடியுள்ளனர்.

### சிறப்புப் பாயிரம், சாத்து கவிகள்

முருகர் சித்திர வெண்பா என்னும் நூலுக்குச் சிறப்புப் பாயிரமாகப் பூவை. கலியாணசுந்தர முதலியார் பாடியதும், கந்தன் சித்திரபந்தன மாலைக்குச் சாத்து கவிகளாக இரகுநாதையர் கந்தசாமி சுவாமிகள் போன்றோர் பாடினவும் இவண் குறிப்பிடத் தக்கன.

## படவடிவுகள்

சித்திரக் கவிகளுக்கான படவடிவுகளைத் தேர்ந்தெடுக்குமிடத்துப், பெரும்பாலும் பாடப்படுவோருக்கேற்ப, அவர்களின் வாகனங்கள், படைக்கலங்கள் (மயில், வேல், முரசு, தேர், தாமரை, பாம்பு, சக்கரம், யானை, சங்கு, மலை, மாலை) போன்ற பயன்படு பொருள்களே அமைகின்றன. பாடுவோர் அல்லது பாடப் படுவோருக்கேற்ப இவை மாறுபடக் கூடும்.

## யாப்பு

சித்திரக் கவிகளுக்கு யாப்பமைதி மிகவும் குறிப்பிடத்தக்க தாகும். ஒவ்வொரு கவியும் ஒரு குறிப்பிட்ட யாப்பிலேயே அமையும். வெண்பா, ஆசிரியம். கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால் வகைப்பாக்களும் அவற்றின் இனங்களும் புலவனின் திறமைக்கேற்ப இச்சித்திரக் கவிகளில் அமையக் காணலாம்.

சில நூல்களின் இறுதியில் நூலாசிரியர் தாம் பாடியுள்ள யாப்பு வகைகளைக் கணக்கிட்டுக் காட்டியிருப்பது அறியத்தக்கது எடுத்துக் காட்டாக,

"கந்தன் சித்திர பந்தனக் கவியிற்
தந்த புறநடை சாற்றக் கேண்மோ
ஆசிரியப்பா வானதிரண்டு
தேசத்தோர்புகழ் திருவெண் பாக்கள்
இருபானைந்தோ டியல்கொச்சகமும்
திரிபு யமகந் திகழ் மடக்கேகங்
கலித்துறை மூன்று கவிச்சந்தமொன்று
கலிக்கவியாறு காண்குறளிரண்டு
வஞ்சித்துறையும் வஞ்சிவிருத்தமும்
அஞ்சும் நான்கும் நிரைநிரையாகப்
பாவகையைந்து பத்துங்குகனாந்
தேவனைத்தொழுது செய்ததுவாமே"[1]

என்னும் இப்புறநடைப் பாடல் சித்திரக் கவிகளுக்கான யாப்பு அடிப்படையைத் தெளிவுறுத்தக் காணலாம்.

## சித்திரக்கவிகளுக்கான உரை

சித்திரக்கவிகளை அமைப்பது மிகவும் அருமை. அவற்றைப் புரிந்து கொள்வது அதனினும் அருமையாகும். பெரும்பான்மை யான பாடல்களை உரை இல்லாமல் புரிந்து கொள்ள இயலாது. நூலாசிரியரின் புலமைத் திறத்தினை ஒத்தவரே அவற்றை நன்கு புரிந்து கொள்ள முடியும். முதலில் இக்கவிகளுக்கான உரைகள் நூலாசிரியரால் எழுதப்படவில்லை என்றே தெரிகிறது.

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த கண்ணுடைய வள்ளல் என்பவர் திருஞான சம்பந்தரின் சித்திரக் கவிகளுக்கு உரை எழுதி யுள்ளதாகவும், பின்னர் சென்ற நூற்றாண்டில் சுயம்பிரகாச யோகியார் என்பவர் உரை எழுதியுள்ளதாகவும் கூறுவர்[2]

படிப்போர் பயனுற வேண்டும் என்னும் நோக்கில் பிற்காலத்தில் தோன்றிய சித்திரக்கவிகளுக்கு அந்தந்த நூலாசிரியர்களே உரையும் எழுதியுள்ளதைக் காணலாம். சான்றாக, 'கந்தன் சித்திர பந்தன மாலை' நூலாசிரியர் பின்வருமாறு விளக்கக் காணலாம்.

---

1. ஆர்.என். கல்யாணசுந்தர கவுண்டர், கந்தன் சித்திர பந்தனமாலை, புறநடை.
2. மு. அருணாசலம். தமிழ் இலக்கிய வரலாறு. 15ம் நூ. பக். 203-205

'ஒப்பற்ற இரும்புகழுற்ற முத்தமிழில் நாற்கவியில் ஐந்திலக் கணத்தில் ஒருங்கு மிறைக்கவி யென்னுஞ் சித்திரக்கவி இக்காலத் தில் மிக்காரிடையன்றி அருகி வருவதால் பார்த்தோர் யாவரும் பயனுறும் வண்ணம் அததற்குள்ள அரும்பதக் குறிப்பும், பதவுரை யும், துறுவக் குறிப்புஞ் சேர்த்துப் பதிப்பான் துணிந்தனன்.'[1]

இவ்வாறு சில நூலாசிரியரின் முன்னுரைகள் இச்சித்திரக்கவி களின் அருமையை உணர்த்துவதுடன் இவற்றிற்கான உரையின் தேவையையும் குறிப்பிடக்காணலாம்.

நூலாசிரியர் எழுதிய சித்திரக்கவிகளுக்குப் பின்வந்தோர் உரை எழுதியிருப்பினும் விரிந்த அளவில் எவரும் எழுதியதாகத் தெரிய வில்லை. இவ்வாறு பிறரால் உரை எழுதியமைக்கப்பட்ட நூல் களில் அதற்கான சான்றுகளும் கிடைக்கின்றன. எடுத்துக் காட்டாக, குலாம் காதிறு நாவலர் இயற்றிய நாகூர்ப்புராணத்தில் அமைந்த சித்திரக்கவிகளுக்குப் பிச்சையிபுறாகீம் என்பவர் உரை செய்ததாகப் பின்வரும் வெண்பா விளக்குகின்றது.

"நாவலனார் செய்ததிரு நாகூர்ப் புராணத்தின்
பாவலனார் சித்திரகவிப் பாக்கட்கு—மாவலனார்
பிச்சையிபு றாகீம் பெரும்புலவன் செய்திட்டா
னுச்சிமேல் வைக்கு முரை"[2]

இவ்வாறு உரை எழுதியிருப்பினும், "இச் சித்திரக் கவிகட்குக் குறிப்பாய்ப் பொருள் விளங்குமாறு சுருக்கி எழுதினோமன்றி, விரித்தெழுதிலம், விரிவாதி விசேடங்களைக் கற்றோருய்த்துணர்க என்ற குறிப்பும் இந்நூலில் காணப்படுகிறது. எனவே, நூலாசிரி யரின் உரையே சிறந்தது என்றும், அவரைத் தவிர வேறு எவரும் அப்பாடலுக்கேற்ற வகையில் முழுமையான அளவில் உரை அமைக்க இயலாது என்றும் புலனாகின்றது.

இச்சிக்கல் கருதியே பின்வந்த பாம்பன் சுவாமிகள், தண்ட பாணி சுவாமிகள் போன்றோர் தாம் இயற்றிய சித்திரக்கவி களுக்குத் தாமே உரையும் எழுதி வெளியிட்டுள்ளனர் என்பது அறியத்தக்கது.

---

1. ஆர். என். கல்யாணி சுந்தர கவுண்டர், கந்தன் சித்திர பந்தன மாலை. முன்னுரை.
2. நாகூர்ப்புராணம்-17 மலடு தீர்த்த படலம்.

## சில கட்டுப்பாடுகள்

சித்திரக்கவி இயற்றுவோருக்குக் கடுமையான நெறிமுறைகள் வகுக்கப்பட்டதாகவும் தெரிகிறது. கவி இயற்றுவோர் தாம் விரும்பியபடி இவற்றை அமைக்க இயலாதபடி சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்ததாகவும் அறிகிறோம். இடைக்காலத்தில் இவ் வகைக்கவிகள் குறைந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகலாம்.

''சக்கரமும் சுழிகுளமும்.....முந்திரியார் வஞ்சினமும் முதலாம் சித்திரச் செய்யுள் செய்யுங்கால் தலைவனது, தசாங்கங்களின் எழுத்துகளைப் பிரித்து நிறுத்திப் புணர்ப்பானாகில் ஆனந்தமாம் அந்நெறியல்லன மானிடவரைப் புணர்த்தலாகா. அல்ல நெறி யும் இமையோர் க்காகின் ஆம்.''

"இவ்வகைப்பட்ட செய்யுளெல்லாம் பாடுமிடத்துத் தேவர் களுக்கும் முனிவர்களுக்கும் முடிபுனைந்த மன்னர்க்கும் பாடலாம், அல்லாதவர்களுக்குப் பாடலாகாது. பாடில் பாடுவித்துக் கொண்ட தலைமகனுக்கு அர்த்த நாசமும் புத்திர நாசமும் பிராண நாசமும் வரும். பாடிய புலவனுக்குச் சொல்லானந்தத்தினாலே அடாத வியாதியடுத்து அவன் குட்ட நோய் கொண்டு காலும் கையுங் குறைந்து மரிப்பான். மறுமைக்கு நரகத்து அழுந்துவான். அதனால் சாதிக்குத் தக்க செய்யுளறிந்து பாடவும், 'அடாது பாடிற் படாது படும்' என்றாராகலின்'''[1] என்னும் இத்தகைய உரைகளை நோக்குமிடத்து, இக்கவி இயற்றுவோருக்கு இடைக்காலத்தில் இருந்த கட்டுப்பாடுகள் நன்கு புலனாகும்.

## பதிப்பில் சித்திரக்கவிகள்

சித்திரக்கவிகள் ஒவ்வொன்றுக்குமான படம், விளக்கம் இவை இல்லையெனில் இப்பாடல்களைப் புரிந்து கொள்வது கடினம். இவ்வாறு விளக்கப்படங்களோடு கூடிய சித்திரக்கவிகளை பின் வந்த இலக்கண நூற் பதிப்புகளே தருகின்றன. புதிதாக எழுந்த சில தனி இலக்கியங்களும் இவ்வாறு விளக்கத்தோடு பதிப்பிக்கப் பட்டுள்ளன. ஆயினும், பல கால கட்டங்களிலும் பலரால் பாடப் பெற்ற சித்திரக்கவிகள் பலவும் பதிப்பிக்கப்படாமலே போயின. இன்றும் சில சுவடிகள் இக்கவிகளுடன் கிடைக்கின்றன. எடுத்துக்

---

1. நவநீதப் பாட்டியல். 2. செய்யுண் மொழியியல் 67. உரை], II.

காட்டாக தஞ்சை இராம. வைத்தியநாத சர்மா என்பவர் அவ்வக் காலங்களில் பாடிய ஓவியப்பாக்கள் இன்னும் அச்சாகாமல் பாது காக்கப்பட்டுள்ளன எனக் கூறுவதை நோக்கலாம்.[1]

சித்திரக்கவிகளின் திறமறிந்து பதிப்பிப்பது மிகவும் கடினம். பதிப்பில் தோன்றும் சில சிக்கல்களாலும் இவை மிகுதியாகப் பதிப் பிக்கப்படவில்லை எனலாம்.

(எ.டு.) வீரசோழியம் அலங்காரப்படலத்தில் உரையாசிரியர் ஒரு சக்கர பந்தக் கவிக்கு உதாரணம் தருமிடத்து எட்டாரைச் சக்கரத்தில் அமையும்படியான ஒரு செய்யுள் கொடுக்கப் பட்டுள்ளது. இதிலுள்ள எழுத்துகளை எவ்வாறு சக்கரத்தில் அமைப்பது என்று விளக்கும் பாடல் ஒன்றும் பின்னே தரப்பட் டுள்ளது. ஆயினும், இவ் உதாரணச் செய்யுளில் காணப்படும் எழுத்துக்கள் மாறுபடு வகையில் பல பிரதிகளில் காணப்படுவதை உரையாசிரியர் பின்வருமாறு சுட்டுகிறார்.

'இக்கவியும், இதன்கீழ் உரைத்த சித்திரத் தொகுதியும் பெரும் பான்மையும் பிரதிகளிவில்லை. உள்ள பிரதிகளிலுங் காலாந்தரத் திற் கரலிகித வழுக்களான் மிக மாறுபட்டுக்கிடக்கின்றன. கவியின் பிரத்தார இலக்கணத்தால் அஃதொரு பேரருஞ்செய்யுள் என்று தோன்றுவதாலும், ஏதாவதொரு வகையால் நாம் அதனைத் திருத்தி அச்சிடுவது தகுதியன்று ஆதலாலும் அதன் நிச்சய ரூபங் கண்டு சக்கரத்தமைத்துக் காட்டவல்ல சித்திரக் கவிகள் எவ்விடத் தாயினும் இருத்தல் கூடும் ஆதலாலும், சித்திரக்கவிகளுள் தனக் கிணையில்லாத பேராற்றலுடையதொரு நூதனக்கவியை இறந்து போக விட மனம் ஒவ்வாமையாலும், தென்னாட்டிலும் யாழ்ப் பாணத்திலும் சென்னையிலும் தமிழில் மிகப்பிரபல வித்துவான் களாயிருந்தோர் மூவருடைய பிரதிகளிற் கண்ட ரூபமாக இதனை இவ்விடம் பதிப்பித்திருக்கின்றோம் என்பது பழைய குறிப்பு'[2]

இக்குறிப்பிலிருந்து, சித்திரக்கவிகளைப் பதிப்பில் கொண்டு வருவதிலுள்ள சிக்கல்களை நாம் நன்குணரலாம். மூல ஏடுகளின் சிதைவு, பெயர்த்தெழுதுவோர் செய்த பிழை போன்றனவும் இவண் குறிக்கத்தக்கன. மேலும், பழங்காலத்தில் செய்யுட்கள் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்டதால் அவற்றில் இச்சித்திரங்களை

---

1. தமிழ்ப்புலவர் வரிசை. 23. இராம. வைத்தியநாத சர்மா
2. வீரசோழியம். அலங்காரப்படலம். உரை.

அமைப்பதும் கடினமாயிற்று எனலாம். இக்காரணங்களால் இவை யாவும் தனித்தனியாக வரையப்பட்டு அவரவரிடம் இருந்திருக்க வேண்டும். அச்சு நூல்களைப் போல இவை அதிகம் பரவாததால் இவற்றின் அருமை பலருக்கும் தெரிய வாய்ப்பில்லை.

## அவதானிகளினிடையே

அவதானம் என்னும் சொல் மறுப்பு இன்மை, நினைவு, மேன்மைச் செயல் என்னும் பொருளுடையது. அவதானம் செய்ய முன் வரும் புலவர், சபையில் கூடியுள்ள புலவர் பெருமக்கள் கேட்கும் கேள்விகட்கு முறையே மறுப்பின்றி விடை கூற வேண்டும். எண்மர், பதின்மர், பதினாறு பேர் என வினாவும் கேள்விகட்கு விடை இறுத்தால் அவர்களை முறையே அட்டாவதானி, தசாவதானி, சோடசாவதானி என்பர்.

பொதுவாக, மிகவும் புலமைத்திறம் வாய்ந்தவர்களே அவதானிகளாக விளங்க முடியும். குறிப்பாக கவிபாடும் திறமையை இவர்கள் தம் செயல்களில் ஓர் அங்கமாகவே கொண்டுள்ளனர். 'சதாவதானம் சுப்பிரமணிய ஐயர்' இயற்றிய பலபாடற்றிரட்டு[1], 'அட்டாவதானம் பொ.மீ. இராமலிங்கக் கவிராயர்' இயற்றிய சித்திரக் கவிகள்'[2] போன்றவற்றை நோக்குமிடத்து, அவதானம் செய்வோரிடத்தில் இச் சித்திரக் கவிகள் செல்வாக்குப் பெற்றுள்ளதை அறியலாம்.

சிந்தனைத் திறத்தமைந்த சிறிய பாடல்களான இச்சித்திரக் கவிகள் தனிமனிதனின் திறமைக்குச் சான்றாக அமைவதால் அவதானிகளினிடையே பெருவழக்குப் பெற்றன எனலாம்.

## அறிஞர் எண்ணங்கள்

சித்திரக் கவிகளைப் பற்றி அறிஞரிடையே கருத்து வேற்றுமை உண்டு. ஆயினும், அவற்றின் சிறப்புக்கருதி அவற்றின் தேவையைப் பலரும் பாராட்டுகின்றனர். இவ்வகையில் தமிழறிஞர் சிலரின் எண்ணங்களை இவண் சுட்டுதல் பொருத்தமாகும்.

''பண்டைக் காலத்தில் அரிதினும் அரிதாக இயற்றப்பட்ட மிறைக்கவிகளும் சில; அவற்றை இயற்றிய புலவர்களும் மிகச்

1. தஞ்சை சதாவதானம் சுப்பிரமணிய ஐயர், பல பாடற்றிரட்டு (முதல் பாகம்)—(1881)
2. தமிழ்ப்புலவர் வரிசை 20. பொ.மீ. இராமலிங்கக் கவிராயர்.

சிலரே. இக்காலத்தில் அத்தகைய புலவர் சிலரும் இலராயினர் தமிழ் மொழியானது இத்தகைய செய்யுட்கள் இயற்றுவதற்கு ஏற்ற இடந்தருங் குழைவு உடையதாதல், மிறைக் கவிகளைப் பார்த்தாலல்லது நன்கு விளங்காது. மொழி இடந்தராத போது புலவர்கள் எத்துணைத் திறம் உடையவராயினும் தமது திறமையை அம்மொழியின்கண் காட்ட இயலாது'' என்பர் மறைமலையடிகள்.[1]

''நம் முன்னோர்கள் கண்ட பாட்டமைப்புகள் பல திறத்தன. அவைகளுள் ஒன்று சித்திரக்கவி, இக்கவி பாடுவதிலுள்ள அருமைப் பாடுகள் அத்துறையில் இறங்கி உழைப்பவர்க்கே நன்கு தெரியும். தமிழ் வளம் பெருகியுள்ள அந்நாளிலேயே சித்திரக்கவி பாடப் பலர் முயல்வதில்லை. தமிழ் வளம் அருகியுள்ள இந்நாளில் சித்திரக்கவி திறப்படப் பாடுவார் சிலரே'' என்பர் திரு. வி. கலியாண சுந்தரனார்.[2]

''புலவர்கள் இயற்றிய நாற்கவிகளில் சித்திரக்கவி பாடுவதும் அதற்குச் சரியான உரை வகுப்பதும் கடினமான காரியமாகும். இவைகள் படங்களுடன் அச்சாகி வெளிவந்தால் பிற்காலத் தமிழ் மாணவர்கள் சித்திரக் கவிகள் இயற்றத் துணை புரியுமென்று கருதுகிறேன். தமிழ்ச் செல்வர் இவர் கவிகளை உலகினர் அறியச் செய்வது தமிழுக்கே செய்த பெருந் தொண்டாகுமென எண்ணுகிறேன் என்பர் டாக்டர் உ.வே. சாமிநாதய்யர்.[3]

தமிழறிஞர்களின் இத்தகைய எண்ணங்களை நோக்குமிடத்து இக்கவிகளின் தனிச்சிறப்பு நன்கு வெளிப்படுகின்றது.

இதுகாறும் ஆய்ந்தவற்றுள், பொது நிலையில் சில உண்மைகளைப் பின் வருமாறு தொகுத்துக் காணலாம்.

1. தமிழில் 'சித்திரம்' என்னும் சொல் தொல்காப்பியர் காலந் தொட்டே வழக்கிலுள்ளது. இச் சொல் அழகு. சிறப்பு, வியப்பு என்னும் பொருள்களில் இலக்கியத்தில் பயன்படுத்தப் படுகின்றது. ஓவியம் என்னும் சொல்லும் இதே பொருளுடையதாகும்.

---

1. 2. 3. சித்திரக்கவி மாலை—அணிந்துரை.

2. தமிழர்களின் ஓவிய உணர்வை இலக்கியங்களின் வாயிலாக அறியுமிடத்து, ஆடவர் பெண்டிர் எனும் இருபாலரும் இக் கலையில் சிறப்புற்று விளங்கியதை அறியலாம்.

3. எழுத்து, கிளவி, எழுதுதல் போன்ற சொற்கள் சித்திரத்தை யும், சித்திரம் வரைதலையும் குறிக்கின்றன.

4. 'கவி' என்பது நால்வகைப் புலமைத் திறத்தில் ஒன்று. இதுவே 'கவிதை' என்ற பொருளில் நால்வகைத் திறம் பெறும். அவற்றுள் 'அருங்கவி' யாகப் போற்றப்படுவது சித்திரக்கவி யாகும்.

5. கவிஞன் தான் இயற்றிய கவிதையில், பிறர்க்குப் புலனாகாதச் சித்திரவடிவைப் புலனாக்கியும், அவையே அழகாக-அணியாக அலங்காரமாகிப் பார்த்தார்க்கு இன்பம் பயக்கும் வகையில் அமைப்பதே இச்சித்திரக்கவிகள்.

6. கோடுகளினால் வரைந்த ஓவியம் 'புனையா ஓவியம்' எனப் படும். இதற்குப் பலவித வண்ணங்களைக் கூட்டிப் புனைந்து அமைப்பது 'சித்திர' மாகும். இதேவகையில் நேர்க்கோடு, வளைந்தகோடு, கோணக்கோடு போன்ற ஓவிய அடிப்படை களுடன் வட்டம், சதுரம், கோணம் என்னும் வடிவங்களில் எழுதப்படும் புனையா ஓவியங்களில் எழுத்தும், சொல்லும்' பொருளுமே வண்ணங்களாகக் கொண்டு புனைவது சித்திரக் கவிகளாகும்.

7. பொதுவாக மனித எண்ணங்கள், புதுமைப்போக்கு, விடுகதை, விளையாட்டு அமைப்பு, இவற்றுடன் கவிதையிலுள்ள அருமை களைப் பிறருக்கு அறிமுகப் படுத்த வேண்டும் என்னும் ஆவல் போன்றவற்றின் காரணமாக இவை தோன்றின எனலாம்.

8. சித்திரக்கவிகள் பல நூற்றாண்டுகளாகச் சிறப்புடன் வழங்கி வருபவை. இடைக்காலத்தில் பெரிதும் வழக்கில் இருந்துள்ளன. சாதி, சமயம், இனவேறுபாடு இல்லாது அனைவராலும் பாடப்படும் கவியாகவும் இருந்துள்ளன.

9. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கூறப்படும் திரு ஞான சம்பந்தரே இவ்வகைக் கவிகளை முதன் முதலாக இலக்கிய உலகிற்கு அறிமுகப் படுத்தியதாக அறியப்படுகிறது.

10. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட நிகண்டுகளும், யாப்பு, அணி, பாட்டியல் போன்ற இலக்கண நூல்களும் சித்திரக்கவிகளின் வகைகளைக் கூறுகின்றன.

11. சித்திரக்கவிகளுள் சில பெருவழக்கிலும், தனி இலக்கிய வடிவும் பெற்றுள்ளன. சில வகைகள் மாற்றமும் வளர்ச்சியும் பெற்று வழங்கப்படுகின்றன.

12. இவை யாவும் யாப்பமைதியும் பொருளமைதியும் ஒருங்கே பெற்று, படவடிவில் பொருந்தி, கண்டோரை வியப்படையச் செய்யும் தன்மையுடையன.

13. மொழிப் புலமையும் கலைத் திறமையும் மிக்கவர்களால் இயற்றப்பெறும் சித்திரக்கவிகளால் மொழியின் நுட்பம், அழகு, நளினம், செறிவு இவை அனைத்தையும் புரிந்து கொள்ள முடியும்.

14. சித்திரக்கவிகளை இயற்றுவதென்பது வேலையற்றவர்களின் வீணான வேலையல்ல. சொற்றொடரைப் பிரிக்கும் முறை' ஒரு சொல்லின் பல பொருள், ஒரே பாடலைப் பிரித்து வெவ் வேறு பாவினங்களாக அமைத்தல் போன்ற பல்வேறு இலக் கண நுட்பங்களைக் கொண்டே இவ்வை அமையக்காணலாம்.

15. இக்கவிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கணித நுண்மைகள் அடங்கியிருக்கக் காணலாம். மக்களின் இரு கண்களாகக் கூறப் படும் 'எண்ணும் எழுத்துமே' இவற்றின் அடிப்படையாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

16. 'சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்' என்பதே பழமொழி. ஆயினும் இக்கவிகள் தம் திறத்தால் 'சித்திரமும் நாப்பழக்கம்' என்பதைக் காட்டுகின்றன.

17. சித்திரக்கவிகள் பலவும் தெய்வத்திற்குச் சிறப்பாகப் படைக்கப் பட்டன. இவற்றுள் திருஎழுகூற்றிருக்கை குறிப்பிடத்தக்கது.

18. தொண்ணூற்றாறு வகை பிரபந்தங்களில் ஒன்றான எழுகூற் றிருக்கையினை நாட்டுப்புற இலக்கிய அமைப்பில் கூறுவது அறியத்தக்கது.

19. இறுதி இயைபு பெற்று 'மாலை', 'கூற்றிருக்கை', 'நிரோட் டகம்', 'பந்தம்' எனத் தனித்த இலக்கிய வகைகளாகவும் இவை வளர்ந்துள்ளன.

20. சித்திரக்கவி நூல்களையும் அவற்றைப் பாடிய புலவர்களையும் கடந்த முன்னூறு ஆண்டுகளாக மிகுதியாக அறிய முடிகிறது.

21. அண்மைக்காலத்திலும் தமிழ் இலக்கணவிதி மாறாத, சிறப்பு மிக்க புலவர்கள் இவற்றைப் போற்றியிருப்பதுடன், தம் நூல் களினிடையே இவற்றை அமைத்திருப்பதும் அறியத்தக்கது.

22. தமிழ் மொழியின் வன்மையை எடுத்துக் காட்ட ஒலி, எழுத்து, சொல்லை இடைமறித்து அமைத்தல் என மொழியின் ஒவ் வோரணுவையும் முற்றிலும் பயன்படுத்துவது கவிஞனின் கடமையாகும். இவ் அடிப்படையிலேயே இச்சித்திரக்கவிகள் அமைந்துள்ளன.

23. கவிதைச் சிறப்பிற்குத் தேவையான உவமை, உருவகம், உள்ளுறை, சிலேடை போன்ற பல இலக்கிய நயங்களும் சித்திரக் கவிகளுள் விரவி வரக்காணலாம்.

24. வடிவம், பொருண்மை, வெளியீட்டு முறை என ஒவ்வொரு கூறிலும் தனித்ததொரு நிலையினைத் தமிழ் இலக்கிய உலகில் தோற்றுவித்திருப்பது சித்திரக்கவிகளின் சிறப்பாகும். இலக்கிய இலக்கண நூல்களினிடையே காணப்படும் சித்திரக் கவி வகைகளை முறைப்படி தொகுத்துக் காணுமிடத்து இச் சிறப்புகள் அனைத்தும் நன்கு புலனாகும்.

# 1. மாலை மாற்று

இது, இலக்கண நூல்கள் எல்லாவற்றிலும் தொன்றுதொட்டு வழங்கப்படும் சித்திரக்கவி வகையாகும். மாலை என்பதுபூக்களால் வரிசையாகத் தொடுத்தது. ஒரு மாலைக்கு அமைந்த இரண்டு தலைப்புக்களில் எதனை முதலாகக் கொண்டு நோக்கினும் அம்மாலை ஒரே தன்மை உடையதாய்த் தோன்றுமாறுபோல, ஒரு பாடலை முதலிலிருந்து நோக்கினாலும் முடிவிலிருந்து நோக்கினாலும் அதே பாடலாக அமையும்படி எழுத்துக்களை நிரலே அமைத்துப் பாடுவது மாலை மாற்று என்னும் சித்திரக் கவியாகும்.

> ''ஒருசெயுண் முதலீ றுரைக்கினு மஃதாய்
> வருவதை மாலை மாற்றென மொழிப''[1]

என்பது மாறனலங்காரம்,

> ''இறுதி முதலாக வெடுத்து வாசிப்பினு
> மதுவே யாவது மாலை மாற்றாகும்''[2]

என்பது முத்துவீரியம்.

> ''......ஒருபாட்டு இறுதியதாய்
> இரையினும்அப் பாட்டாதல் மாலை மாற்று''[3]

என்பது சுவாமிநாதம்.

---

1. மாறன். 287.
2. முத்து. அணி. 18.
3. சுவாமி. 196. 5-6

## மாலை மாற்று



(குறள் வெண்பா)

(எ-டு) "நீவாத மாதவா தாமோக ராகமோ
தாவாத மாதவா நீ"[1]

(இ-ள்) நீவாத மாதவா - நீங்காத பெருந்தவ முடையோனே!
தாமோக ராகமோ தாவாது
- வலிய மயக்கவேட்கையோ நீங்காது;
அம்மாது அவா நீ - (ஆதலால்) அழகியபெண்ணினுடைய ஆசையினை நீக்கியருள்வாயாக (அவள் விருப்பத்தை நிறைவேற்று வாயாக)

நீங்காத பெரிய தவத்தை உடையாய்! வலிய மயக்கந்தரும் ஆசை நீங்கமாட்டாது. ஆதலால் பெண்ணாசையை நீக்கு என்னும் இப்பகுதி பாங்கி கூற்றாகும்.

திருஞானசம்பந்தர் பாடிய 'திருமாலைமாற்றே' முதல் இலக்கியமாக இன்று கிடைக்கிறது. அவர் தம் சீகாழித் தலத்தில் பாடிய பதிகம்[2] இம்மாலை மாற்று வகையைச் சார்ந்ததே.

இப்பதிகத்திலுள்ள பதினொரு பாடல்களையும் அவற்றின் விளக்கங்களையும் பின்வருமாறு காணலாம்.

1. "யாமா மாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா"

(யாம் ஆமா நீ ஆம் ஆம் மாயாழீ காமா காண்நாகா
காணா காமா காழீயா மாமாயா நீ மாமாயா)

(இ·ள்) யாம் - ஆன்மாக்களாகிய நாங்கள் கடவுளென்றால்
ஆமா - அது பொருந்துமா?
நீ - நீயே கடவுளென்றால்.
ஆம் ஆம் - அது முற்றிலும் தகுவதாகும்,
(ஏகான் மாவாதிகளை மறுத்தது)
மாயாழீ - பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே
காமா - யாவரும் விரும்பத்தக்க கட்டழகனே,
காண் - (தீயவும் நல்லவாம் சிவனைச் சேரின் என்பதை யாவரும்) காணுமாறு பூண்ட.

1. தண்டி மேற். ப. 219.
2. திருஞான. பதிகம். 75.

நாகா - பாம்புகளையுடையவனே.

காணா காமா - கை, கால் முதலிய அவயவங்கள் காணா தனவாச் செய்த காமனையுடையவனே (காமனை யுருவழித்தவனே) சினை வினை முதன் மேல் நின்றது.

காழீயா - சீகாழிப் பதியில் எழுந்தருளியிருப்பவனே,

மாமாயா - இலக்குமிக்குக் கணவனான திருமாலாகவும் வருபவனே, (நான்கனுருபும் பயனும் தொக்க தொகை)

மா - கரியதாகிய

மாயா - மாயை முதலிய மலங்களினின்றும்

நீ - எம்மை விடுவிப்பாயாக

ஆன்மாக்களாகிய நாங்கள் கடவுளென்றால் அதுபொருந்துமா. நீயே கடவுளென்றால் அது முற்றிலும் தகுவதாகும். பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே, யாவரும் விரும்பும் கட்டழகனே, பாம்புகளையுடையவனே. காமனை உருவழித்தவனே, சீகாழிப்பதியில் எழுந்தருளியிருப்பவனே, திருமாலாகவும் வருபவனே, மாயை முதலிய மலங்களினின்றும் எம்மை விடுவிப்பாயாக என்பது இதன் பொருளாகும்.

2. "யாகாயாழீ காயாகா தாயாராரா தாயாயா
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா"

(யாகா யாழீ காயா காதா யார்ஆர் ஆ தாய்ஆயாய்
ஆயா தார் ஆர்ஆயா தாகஆயா காழீயா யா கா)

(இ-ள்) யாகா - யாக சொரூபியே

யாழீ - யாழ் வாசிப்பவனே

காயா - அடியாருக்கு அருள வருகையில் உருவத்திருமேனி கொள்பவனே.

காதா - சங்கார கருத்தாவே.

காதுதல் - செல்லுதல். வடசொல்.

யார்ஆர் - எவரெவருக்கும்

ஆ - (பெற்றவள்) ஆகும்.

தாய் ஆயாய் - தாயானவனே

ஆயா - ஆராய முடியாத

தார் - மாலை.

ஆர் ஆயா - ஆத்திப் பூவாகக் கொண்டவனே.
(சிவனுக்குரிய மாலைகளில் திருவாத்தியும் ஒன்று)

தாக ஆயா - காதல் கொண்ட முனிபத்தினிகளாகிய மகளிர் கூட்டத்தையுடையவனே.
(தாகஆயன் குளாம்பல், மராடி என்பது போற் கொள்க)

காழியா! யா - துன்பங்கள் எவற்றினின்றும்
கா - எம்மைக் காப்பாயாக.

யாகசொரூபியே, யாழ் வாசிப்பவனே, உருவத்திருமேனி கொண்டவனே, சங்கார கருத்தாவே, எவருக்கும் தாயானவனே, ஆத்திமாலை கொண்ட அருளாளா, துன்பங்கள் எவற்றினின்றும் எம்மைக் காப்பாயாக என்பது இதன் பொருள்.

3. ''தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா''

(தாவா மூவா தாசா காழீநாதா நீ யாமா மா
மா யாநீ தாநாழி சா கா காசா தா வா மூவாதா)

(இ-ள்) தாவா - அழியாத. மூவா - மூப்பில்லாத.

தாசா - தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ நீக்கம், ஆன்மரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம நீக்கம், சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியத்தால் அடையும் பொருளாக உள்ளவனே,

காழீநாதா - சிகாழிக்குத் தலைவனே.
நீ - எவரும் சஞ்சரிப்பதற்கு அஞ்சி நீக்குகின்ற.
யாமா - நள்ளிரவில் நடம் பயின்றாடும் நாதனே.
மா – பெருமை வாய்ந்தவனே!
மா - ஐராவணமாகிய யானையின் மேல்.
யாநீ - ஏறி வருபவனே.
தாநாழீ - (தான + ஆழி) கொடையில் கடல் போன்றவனே
சா - சாவதினின்றும்
கா - காப்பாற்றுவாயாக.
காசா - இரத்தினம் போன்ற ஒளியை உடையவனே.
தா - கேட்ட வரங்களையெல்லாம் தருவாயாக.

வா - என் முன் எழுந்தருள்வாயாக.

மூ - எவற்றினும் முன்னே தோன்றிய.

வாதா-காற்று முதலாக உள்ள ஐம்பூத வடிவாய் உள்ள.

எவற்றினும் முன்னே தோன்றிய, ஐம்பூத வடிவாய் அழியாத மூப்பில்லாத, தசகாரியத்தால் அடையும் பொருளாக உள்ளவனே, சீகாழிக்குத் தலைவனே. நள்ளிரவில் நடமாடும் நாதனே, ஐராவணமாகிய யானையின் மேல் ஏறிவரும் பெருமையும் கடல் போன்ற கொடையும் இரத்தினம் போன்ற ஒளியும் உடையவனே, என் முன் எழுந்தருளி யான் கேட்ட வரங்களைத் தருவாயாக. எம்மைச் சாவினின்றும் காப்பாற்றுவாயாக என்பது இதன் பொருள்.

4. "நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ"

(நீவா வாயா கா யாழீ காவா வான்நோ வாராமே
மேரா வான் நோவாவா காழீயா காயா வாவாநீ)

(இ-ள்) நீவா - என்றும் மாறாத

வாயா - உண்மைப் பொருளானவனே.

கா - தாங்கிய

யாழீ - வீணையினையுடையவனே.

வான்நோவாராமே - கொடிய பிறவித்துயரம் எம்மை எய்தாமல்.

காவா - (காகா) வந்து காத்தருள்வாயாக

வான் - தேவர்கள்.

நோவாவா - துன்ப மடையாவாறு.

மேரா - மேரு மலையை ஏந்தியவனே.

காழீயா - சீகாழிப் பதியுள் எழுந்தருளியுள்ளவனே.

காயா - ஆகாய சொரூபியே. (முதற் குறை)

வாவாநீ - நீ விரைந்து வருவாயாக.

வாய் - உண்மை

காயாழீ - வினைத்தொகை

வாவா - அடுக்கு, விரைவுப் பொருட்டு

உண்மைப் பொருளானவனே, வீணையை உடையவனே, மேரு மலையை ஏந்தியவனே, சீகாழிப் பதியுள் எழுந்தருளிய ஆகாய சொரூபியே! கொடிய பிறவித்துயரம் எம்மை எய்தாமல் விரைந்து வந்து எம்மைக் காப்பாயாக என்பது இதன் பொருள்,

5. "யாகா லாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயமே லாகாயா"

(யா காலா மேயா காழீ யா மேதாவீ தாய்ஆவி
வீயாதா வீ தா மே யாழீகா ஆயா மேல் காயா)

(இ-ள்) யா - எவையும் வணங்கத் தக்க
யா - எவற்றிற்கும்,
காலா - கால வடிவமாக உள்ளவனே.
மேயா - எவற்றினுள்ளும் எள்ளில் எண்ணெய் போல் வியாபித்துள்ளவனே.
மேதாவீ - அறிவில் மேம்பட்டவனே.
தாய் ஆவி - எவ்வுயிருக்கும் தாயாகவும் உயிராகவும் உள்ளவனே.
வீயாதா - என்றும் அழிவில்லாதவனே.
வீ - கின்னரம் முதலிய பறவைகள் (தாம்-அசை)
மே - தன்னருகாமையில் வந்து விழும்படியாக.
யாழீ - வீணை வாசிப்பவனே.
யாம் - நாங்கள். மேல் - மேற்கொண்டு.
ஆகு - ஆவனவற்றிற்கு. ஆயா-ஆயாதவாறு.
கா - எம்மைக் காப்பாயாக.

கால வடிவமாக உள்ளவனே, அறிவில் மேம்பட்டவனே, எவ்வுயிருக்கும் தாயாகவும் உயிராகவும் உள்ளவனே, எல்லாப் பொருளிலும் உள்ளவனே, என்றும் அழிவில்லாதவனே. வீணை வாசிப்பவனே, நாங்கள் துன்பங்களிலிருந்து விடுபடஎம்மைக் காப்பாயாக என்பது இதன் பொருள்.

6. "மேலே போகா மேதேழீ காலாலேகா லானாயே
யேனாலாகா வேலாகா ழீதேமேகா போலேமே"

(மேலே போகாமே தேழீ காலாலே கால் ஆனாயே
ஏல் நால் ஆகி ஆல் ஏலா காழீதே மேகா போலேமே)

(இ-ள்) மேலே போகாமே - மார்க்கண்டேயர் மீது எமன் போகாமல்
தேழீ - கடுங்குரலால் உரப்பினவனாய்
காலாலே - காலினாலே
கால் ஆனாயே - (அவ்வெமனுக்கு) காலன் ஆனவனே.
ஏல் - பொருந்திய.

நால் - சனகர் முதலிய நால்வருக்கும்
ஆகி - குருவாகிய
ஆல் - கல்லால மரத்தில்
ஏலா - எற்றவனே.
காழீதே - சீகாழியிலுள்ள தெய்வமே.
மேகா - (திருமால் மேக வடிவங் கொண்டு வாகனமாகி நிற்க) அந்த மேகத்தை வாகனமாகக் கொண்டருளியவனே.
போலோமே - யாங்கள் உமது பல்கணத்தில் ஒருவராக எண்ணப்படுதற்கு அத்திருமாலை ஏத்திலோமோ?

மார்க்கண்டேயர் உயிர் மீது வந்த காலனை அழித்தவனே, சனகாதி முனிவர்களுக்கும் குருவானவனே, சீகாழித் தெய்வமே. யாங்கள் உமது பல்கணத்தில் ஒருவராக எண்ணப்படுதற்கு அத் திருமாலை ஏத்துவோம்.

7. "நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ"

(நீயா மாநீ ஏயா மாதா ஏழீ காநீ தானே
நே தாநீ காழீ வேதா மாய் ஆநீ மாயாநீ)

(இ-ள்) நீயா - (உம்மை) நீங்குதல் அறியாத.
மாநீ(மானீ) - உமா தேவியை உடையவனே.
ஏயா - ஒப்பற்ற. மாதா - தாயே
ஏழீ - ஏழிசை வடிவாய் உள்ளவனே.
காநீதானே - நீயே வலியவந்து என்னைக் காப்பாயாக.
நே - அன்பார்ந்த இடத்தை.
தாநீ - இடமாக உடையவனே.
காழி வேதா - சீகாழியில் எழுந்தருளியுள்ள வேத சொரூபியே
மாய் - எம்மைக் கொல்லும்.
ஆநீ - துன்பங்களை.
நீமாயாயேநீ - நீ கொல்ல மாட்டாயா?
மான் - மானைப் போன்றவர்.
மாநீ - மானை உடையவன்.
ஏழீ - ஏழ் தொகைக் குறிப்பாக இசையை உணர்த்தியது.
தாநீ - தானத்தை (இடத்தை உடையவனே) எங்களைக் கொல்லும் துன்பத்தை நீ கொல்ல மாட்டாயா?

ஏழிசை வடிவாய், உமா தேவியை உடையவனே, சீகாழியில் எழுந்தருளியுள்ள வேத சொரூபியே எம்மை வருத்தும் துன்பங்களை நீக்க வலிய வந்து காப்பாயாக என்பது இதன் பொருள்.

8. ''நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே

(நே அணவர் ஆ விழ யா ஆசை இழியே வேகதளேள் யளாயுழிகா
காழியுளாய் அரிளே தகவே ஏழிசை இராவணனே)

(இ-ள்) நே - நேயம்

அணவர் - (உமது திருவடியில்) நேயம் பொருந்தும் அடியவராம்.

ஆ - பசுக்கள். விழ - தன் வயமற்றுக் கிடக்க

யா - (யாத்த) கட்டிய. ஆசை - ஆசையாகிய கயிற்றை.

இழியே - அவிழ்த்து விடுபவனே.

(அடியவரைப் பசுவென்று, ஆசையைக் கயிறென்னாமையால் ஏகதேச உருவகம்)

(நேணவர் - நே + அணவர் எனவும்

யாசைழியே - யா, அசை, இழியே எனவும் பதம் பிரித்துக் கொள்க.

யா + ஆசை - வினைத் தொகை.

நேணவர், யாசைழியே - இவ்விரு தொடரும் மரூஉ முடிபின.)

வேகதளேரி யளாயுழிகா - வேக(ம்) அதரி, ஏரி, அளாய உழி, காவேகம்.

விலங்குகளில் வேகமாய் ஓடவல்ல மானின், அதன்தோலையணிந்த, ஏரி - அழகனே (ஏர்-அழகு. இகர விகுதி ஆண்பாலில் வந்தது).

அளாய உழி - துன்பங்கள் எம்மைச் சூழ்ந்தவிடத்து.

கா - காப்பாற்றுவாயாக.

அளாய என்பதற்கு வினை முதல் வருவித்து உரைக்கப் பட்டது.

காழியு(ள்)ளாய்! அரிளே தகவே.

அரு + இளவு + ஏது + அகவே.

ஏதம் - குற்றம். அது கடைக் குறைந்து ஏது என நின்றது

இளவு - சிறுமைத் தன்மை. இளப்பம், இளந்தலை. இளக்காரம் எனவும் வழங்கும்

உகரம் - பண்புப் பெயர் விகுதி.
அஃகவே என்பது அகவே என நின்றது.
அரு ஏதம் - மன்னித்தற்கரிய குற்றங்கள்
இளவு - (எமது) சிறுமைத் தன்மையால் செய்தன வாதலின்
அஃகவே - அவை மன்னிக்கத் தக்கன ஆகும்.
(அஃகுதல் - சுருங்குதல் இங்குக் குறைந்து மன்னிக்கற் பாலது என்னும் பொருளில் வந்தது)
ஏழிசை இராவணனே - ஏழிசை பாடிய இராவணனு மல்லவா பெரும்பிழையும் மன்னிக்கப் பெற்றுத் திருவருளுக்குப் பாத்திரமா யினான்.
யா - முன்னிலையசை.

செருக்கினால் செய்த பெரும் பெரும் பிழையை மன்னித்த கருணை, சிறுமையாற் செய்த பிழைகளை மன்னிக்கவும் தகும் என மன்றாடியவாறு.

அழகனே, அடியவரின் ஆசையாகிய கயிற்றை அவிழ்த்து விடு பவனே, துன்பங்கள் எம்மைச் சூழ்ந்தவிடத்துக் காப்பாற்றுவாயாக என்பது இதன் பொருள்.

9. ''காலேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலேகா''
(காலே மேலே காண்நீ காழீ காலே மாலே மே பூ
பூமேல் ஏ(ய்) மாலே காழீ காணீ காலே மேலே கா)

(இ-ள்) காலே - காற்றாகி எங்கும் கலந்தவனே.
மாலே - எவற்றிற்கும் மாயம் செய்பவனே.
(மால் - மயக்கம்)
மாயம் - மாயனென்னும் திருமாலுக்கும், மாயம் செய்ப வனாகையினால் சிவபெருமானுக்கும் மாய னென்றொரு பெயர்.
மே - சிறந்த. பூ - மலர்ந்த
பூமேல் ஏ(ய்) - பிரமனும்
மாலே - மாலும்
காலே - திருவடியையும்.
மேலே - திருமுடியையும். காண் - காணலை.

நீ - ஒழித்த
காழீ - வைரத் தன்மையனே. காழீ!
காண் - கடைக்கணி.
கால்ஈ - திருவடியைத் தருக. கா.

மாயவனே, காற்றாகி எங்கும் கலந்தவனே, திருமாலும் பிரமனும் தேடிக்காணா வைரத்தன்மை உடையவனே, கடைக் கண் அருள்வாயாக, என்பது இதன் பொருள்.

10. ''வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநினையே யேயொழிகாவண மேயுரிவே'
(வேரியு எண் நவம் காழியே ஏனை நீள்நேம் அடுஅள்
ஒகர துஏ
தேரகளோடு அமணே நினை ஏய் ஒழி காவணமே உரிவே)

(இ-ள்) வேரி - மணம். ஏண் - பெருமை.
நவம் - புதுமை காழியே.
ஏனை - துன்பத்தையும்.
நீள்நேம் - மிக்க அன்பையும்
அடு - முறையே ஒழி (த்தலும்)
அள் - அள்ளிக் கொள்ளுதலுமாகிய செய்கை.
ஒகர துஏ - யோகிகளுடைய செய்கையே
தேரகளோடு - தேரர்களின் உபதேசங்களோடு
அமணே - அமணர்களின் உபதேசங்களையும்
நினை - நினைத்தலையும்
ஏய் - அவரோடு பொருந்துதலையும்
ஒழி - ஒழிப்பிப்பீராக
காவணமே - அந்நெறிகளிற் சேராமற் காக்கும் திறம்
உரிவே - உரியவே என்பதன் மரூஉ.

உலகப்பற்றையும் துன்பத்தையும் ஒழிக்கும் பெருமை உடையவனே, அமணர்களின் நெறிகளிற் சேராமற் காத்து அருள்வீராக, என்பது இதன் பொருளாகும்.

11. ''நேரகழாமித யாசழிதா யேன்னியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயா தமி ழாகரனே.''
(நேர் அகழ் ஆம் இதய ஆசு அழி தாய்ஏல் நன் நீயே நல் நீள்
ஆய் உழிகா
காழியு ளானின் நையே நினையே தாழ் இசையா
தமிழாகரனே)

(இ-ள்) நேர் - நேர்மையை

அகழ் ஆம் - கல்வி யெறிவ தாகிய

இதய ஆசு - மனத்துக் கண் எழும் காம, வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும்

அழி - அழிக்க வல்லவனே

அழீ என்பதன் குறுக்கல் விகாரம்

தாய் ஏல் நன் றீயே - உலகுக்கெல்லாம் தாயாந் தன்மையை ஏற்கத் தக்கவன் நீ ஒருவனே.

வாழ்+ந்+அன்—வாணன் என்றாகியது போல

ஏல்+ந்+அன்—ஏனன் என்றாகியது.

நல் - நன்மை புரிவதில்

நீள் - மிக்கோனே.

நீள் முன்னிலைத் தொழிற் பெயராய் ஆகு பெயர்ப்பொருளில் நின்று குறுக்கல் விகாரமுற்ற விளிவேற்றுமை.

ஆய் உழிகா - தளர்ந்த இடத்துக் காப்பாயாக

தமிழாகரன் - தமிழே உடம்பாக உடைய திருஞான சம்பந்தனேன்

காழியுளானின் - சீகாழிப் பதியானைப் பற்றிய

நையே - கேட்டோர் மனம் குழைப்பதாகிய இப்பாடல் களை

நினையே - நினைத்துப் பாடவே

தாழ்(வு) - குறைவும்

இசையா - உண்டாகா

உலகுக்கெல்லாம் தாயானவனே, மனத்தில் எழும் காம, வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களை அழிப்பவனே, யான் தளர்ந்த இடத்துக் காப்பாயாக.

தமிழே உடம்பாக உடைய திருஞான சம்பந்தன், சீகாழிப் பதியானைப் பற்றிக் கேட்டோர் மனம் குழையும்படி பாடியுள்ள இப்பாடல்களை நினைத்துப் பாட ஒரு குறைவும் உண்டாகா என் பது இதன் பொருள்.

'மாலைமாற்று' என்னும் சித்திரக்கவி வகையில் அமைந்த முதன்மைப் பாடல்களாக மேற்கண்ட 11 பாடல்கள் கிடைக் கின்றன. திருஞானசம்பந்தரின் இப்பாடல்களைத் தொடர்ந்து பலரும் இவ்வாறு பாடியுள்ளனர்.

## மாலை மாற்று (வேறு)

இன்னிசை வெண்பா போன்ற யாப்பமைதியிலும் இம்மாலை மாற்று அமையப் பாடுவர்.

(இன்னிசை வெண்பா)

(எ-டு) "காவா ரிமாமக வானமா காமாரி
நாவேதே மாகவிக ளேதாதா மாதாதா
ளேகவிக மாதேவே நாரிமா காமான
வாகம மாரிவா கா"[1]

இது, பராசத்தி துதியாகும்.

(இ-ள்) கா - சோலை. ஆர் - நிறைந்துள்ள
இமா மகவு - இமையமலையரசன் மகளான
காமாரி - என்ற நாமத்தையுடையவளே
நாவே-எனது நாவில். தே -தெய்வத்தன்மை பொருந்திய
மாகவிகளேதா-பெருமையான கவிகளைத்தரவேண்டும்.
தாமா - தாமம் என்னும் முடிதரித்தவளே.
தாதாள் - உன்பாத சேவை தரவேண்டும்
ஏகஇகம் - ஒன்றாகிய இவ்வுலகுக்கு
மாதேவே - பெரிய தெய்வமானவளே
நாரி - நாரி என்னும் நாமம் பெற்றவளே
மா - பெரிய. கா - கற்பகம். மான - போல
மாஆகமம் - பெருமை மிக்க ஆகமங்கள் போற்றும்
மாரி - மாரியென்னும் நாமம் பெற்றவளே
வாகா - வந்து காக்க வேண்டும்.

காமாரி, நாரி, மாரி என்னும் நாமம் பெற்ற தாயே. தெய்வீகமான கவிகள் என்நாவில் உதிக்கும்படி வந்து சேவை காட்டி அருள்வாயாக என்பது இதன் குறிப்பாகும்.

## மாலை மாற்று: (வேறு)

இத்திருப்பத்திலுள்ள விருத்தங்களின் ஒவ்வோரடியும் மாலை மாற்றாய் நிற்கும்படி இவண் காணலாம்.

---

1. சித்திர கவி மாலை. பக். 19.

## (வஞ்சிவிருத்தம்)
## ஒற்றிலாச் செய்யுள்
## இரண்டாமெழுத் தொன்றிய சிறப்புடை அடியெதுகை

அடியொன்றற்கு ஒன்பதக்கரம்

தானன தானா தானதனா

சேரர சீமா சீரரசே
தாரம தாமா தாமரதா
நாரவ நானா நாவரநா
காரயி லாவே லாயிரகா (1)

வேதக மீயே மீகதவே
நாதக ணாளா ணாகதநா
சீதசு சீலா. சீசுதசீ
மேதக வீசா வீகதமே (2)

ஏதிப லேசா லேபதியே
நீதிம னேசா னேமதிநீ
கோதில கோரா கோலதிகோ
சீதிர சேயா சேரதிசீ (3)

மாமயி லாகோ லாயிமமா
தாமபி தாமா தாபிமதா
பூமக பூமா பூகமபூ
காமக தேவா தேகமகா (4)

கானவ மானே மாவனகா
நானவ நாடா நாவனனா
தீனத யாளு யாதனதீ
கானக காகா காகனகா (5)

## அடியொன்றற்குப் பத்தக்கரம்

தானன தானன தானதனா

வாசிவ லாவிவி லாவசிவா
தாசிர ரீசச ரீரசிதா
ஈசிசு தாவிவி தாசுசியீ
ஏசின லோவவ லோனசியே (6)

வேலவ வேரர வேவலவே
மாலச மாசச மாசலமா
நீலக லாபிபி லாகலநீ
காலவ காமம காவலகா (7)

நாயன நானினி நானயநா
மேயன லேனன லேனயமே
மாயவ மாவிவி மாவயமா
சேயப ணீகக ணீபயசே (8)

பூமண மாருரு மாணமபூ
மாமற மானினி மாறமமா
தூமது காமம காதுமதூ
தாமத னீபப னீதமதா (9)

தேனட வீறுறு வீடனதே
தீனத நாதத நாதனதீ
தானக வீசச வீகநதா
மேனக மீதிதி மீகனமே.[1] (10)

குறிப்பு:— இப்பாடல் ருதிரோற்காரி வருடம் ஆடிமாதம் 6 ஆம் தேதி சனிக்கிழமை பாடப்பட்டது.

இத்திரு மாலை மாற்று (ஒப்புமை பற்றி வந்த கலித்தாழிசை யெனும்) வேறுபாட்டாகவும் பாடப்படும்; அது வருமாறு :—

தானன தானா தானன—தானா தனனா தானா தனனா.

சேரர சீமா சீரர - சே, தா ரமதா மாதா மரதா
நாரவ நானா நாவர - நா, கா ரயிலா வேலா யிரகா. (1)

வேதக மீயே மீகத - வே, நா தகணா ளாணா கதநா
சீதசு சீலா சீசுத - சீ, மே தகவீ சாவீ கதமே. (2)

ஏதிப லேசா லேபதி - யே, நீ திமனே சானே மதிநீ
கோதில கேரா கோலதி - கோ, சீ திரசே யாசே ரதிசீ. (3)

மாமயி லாகோ லாயிம - மா, தா மபிதா மாதா பிமதா
பூமக பூமா பூகம - பூ, கா மகதே வாதே கமகா. (4)

---

1. பாம்பன். குமரகுருதாச சுவாமிகள். ஸ்ரீமத் குமார சுவாமியம். 18. திருமாலை மாற்று. பக் 394-400 பாரி அச்சகம். 1966

கானவ மானே மாவன - கா, நா னவநா டாநா வனனா
தீனத யாளு யாதன - தீ, கா னககா காகா கனகா. (5)

தானன தானன தானன—தானா தனனா தனனா தனனா.

வாசிவ லாவிவி லாவசி - வா, தா சிரரீ சசரீ ரசிதா
ஈசிசு தாவிவி தாசுசி - யீ, ஏ சினலோ வவலோ னசியே (6)
வேலவ வேரர வேவல - வே, மா லசமா சசமா சலமா
நீலக லாபிபி லாகல - நீ, கா லவகா மமகா வலகா (7)
நாயன நானினி நானய - நா, மே யனலே னனலே னயமே
மாயவ மாலிலி மாவய - மா, சே யபணீ ககணீ பயசே (8)
பூமண மாருரு மாணம - பூ, மா மறமா னினிமா றமமா
தூமது காமம காதும - தூ, தா மதனீ பபனீ தமதா (9)
தேனட வீறுறு வீடன - தே, தீ னதநா ததநா தனதீ
தாநக வீசச வீகந - தா, மே னகமீ திதிமீ கனமே. (10)
எனவாம்.

1. ''சேரரசீமா சீரரசே தாரமதாமாதாமரதா
நாரவநானாநாவரநா காரயிலாவேலாயிரகா''

(இ-ள்) சேர் அர - எப்பொருட்கண்ணும் கலந்துள்ள இறைவனே.
சீமா - செல்வமுடைய மன்னனே.
சீர் அரசே - மிகுபுகழரசே.
தார - பிரணவனே.
மதா - களிப்புடையானே.
மா தாமரதா - பெரிய மணிவடங்களால் அலங்கரிக்கப் பட்ட தேரையுடையானே.
நாரவ - அன்புடையானே.
நானா நாவர - பலவகை மொழிகட்குந் தலைவனே.
நாகு ஆர் அயிலா - என்று மிளமையுடைய வேற்பெரு மானே.
வேல் அயிர - பற்பல ஆயுதங்களையுடையானே.
கா - என்னைக் காத்துக் கொள்.

2. ''வேதக மீயே மீகதவே நாதகணாளா ணாகதநா
சீதசுசிலா சீசுதசி மேதகவீசா வீகதமே''

(இ-ள்) வேதக மீ - ஞான வெளியே.
ஏம் ஈ கதவே - பேரின்பத்தைத் திறந்து காட்டத்தக்க கபாடமே.

நாத - நாதனே

கண்ணாள் ஆள் - சரசுவதியையும் ஆளும் படியான.

நாக தநா - தெய்வயானையையுந் தனது சம்பத்தாகக் கொண்டவனே.

சீத சுசிலா - குளிர்ந்த நற்குணமுடையானே.

சீ சுத - பார்வதி மகனே.

சீ - பேரொளியே.

மேதக ஈசா - பரமேசா.

ஈ கதம் - யான் நலனெய்துமாறு நல்கியருள்

ஏ - ஈற்றசை.

ஏமம் - ஏம் என நின்றது. நாகம்—யானை—கஜநாயகி.

3. ''ஏதிபலேசாலேபதியே நீதிமனேசானே மதிநீ
கோதிலகோரா கோலதிகோ சீதிர சேயாசேரதிசீ''

(இ-ள்) பல் ஏசு ஏதி - பலவகைக் குற்றங்களையும் அறுக்கத்தக்கவளே,

பதியே - பசுக்களை யாளும் பரம பதியே.

நீதி மன்னே - நீதியை யளிக்கத்தக்க பெரியோனே.

சால்நே - (அன்பர்க்கு) மிக்க அன்பே,

கோதில் அகோரா - குற்றமில்லாத அகோர முகமுமுடையானே.

கோல் அதிகோ - செங்கோலோச்சுதலிற் சிறந்த இராசாவே.

சீதிர - திருவார் திரமுடையானே.

சேயா - சேயவனே.

மதி நீ - எனதுணர்வு நீ, (ஆகலின்)

சேர் அதிசீ - உயர் திருவிலே என்னைச் சேர்த்தருள்.

ஆல், ஏ - அசைகள்.

பலேசு ஏதி எனக் கூட்டுக. 'ஸ்திர' என்னும் வடசொல்லின் விகாரமே திர.

4. ''மாமயிலாகோலா யிமமா தாமபிதா மாதாபிமதா
பூமகபூமாபூகமபூ காமக தேவா தேகமகா''

(இ-ள்) மா மயிலா - பெரிய மயில் வாகனா.

கோலாய் - தண்டபாணியே

இமமா தாம - குளிர்ந்த பெரிய மாலைகளை யணிந்துளோய்

பிதா - பரமபிதா வாகவுள்ளவனே.

மாதா - பரம மாதாவாகவு மிருப்பவனே.
அபிமதா - அன்பென்னும் பேரருளுடையாய்.
பூ மக - பொலிவுடைய உற்சவமுடையவனே.
பூமா - (பிரமனது தொழிலைச் செய்த) பிரமனே.
பூ - (அட்டமூர்த்தங்களுள்) பிருதிவியாயிருப்பவனே,
கம - நீராயிருப்பவனே
பூ - எல்லா உற்பத்திக்குங் காரணனே,
மகதேவா - வேள்விகளுக்குத் தேவனே.
தேகமகா - உடலொளி யுடையோனே,
கா - என்னைக் காத்தருள்,
மாதா + அபிமதா—மாதாபிமதா எனப்புணர்தல்
தீர்க்க சந்தி. மக (மஹ)—உற்சவம், ஒளி.

5. "கானவமானே மாவனகா நானவநாடா நாவனனா
தீனதயாளுயாதனதீ கானககாகா காகனகா"

(இ-ள்) கானவ மான் ஏமா - வேடர்குல நங்கையாகிய வள்ளிப் பிராட்டியின் திருமண இன்பனே.
அனகா - பாவமில்லாதவனே,
நவ நால் நாடா - புதுமையுள்ள நால்வகை நாட்டையு முடையானே,
நாவன் நனா - நடுவனாகிய யமனுடைய நியாயப் பிரமாணத் தெளிவே,
தீன தயாளு - ஏழைகண் மீதிரக்க முடையாய்,
யாஅதன் - சூரபதுமனது சிங்க வாகனத்தை அதஞ் செய் தவனே,
நதி கால் - கங்கா நதிக்கு மகனெனப் படுவோனே,
நக - (உன்னதத் தானமாகிய) கந்தகிரி முதலிய மலை களிலிருப்போனே,
கா - வேண்டிற்றெல்லாந்தருங் கற்பகக் காவே,
கனகா - பொன்னொப்பானே,
கா கா - என்னைக் காத்துக்கொள். காத்துக் கொள்.

செல்வமுடையான் செல்வனெனப்படுமாறு ஏமமுடையான் 'ஏமன்' எனப்பட்டனன். ஏமம்—இன்பம். நவநால் நாடா எனக் கூட்டுக. நால்வகை நாடு—குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லை யெனு நிலங்களிலுள்ள ஊர். நா—நடுவாகலின் நடுவ னாகிய யமன் 'நாவன்' எனப்பட்டனன். நதியை 'நதீ' என்பது வடநூன் முடிபு. 'யாஅதன்' என்பவற்றில் யா—வாகனம்; இரண்டும் வடசொற்களே.

6. "வாசிவலாவிவிலாவசிவா தாசிரர்சசரிரசிதா
ஈசிசுதாவிவிதாசுசியி ஏசினலோவவலோனசியே"

(இ-ள்) வாசிவலா - (மூங்கிலாற் செய்யப்பட்ட) இசைக்குழல் வல்லவா,
வீவில் ஆவ - முடிவில்லாத பசுக்களையுடையாய்,
சிவா - சிவனே.
தா - வன்மையே.
சிரர் ஈச - நெடுங்கால மிருப்பவர்க்கும் ஈசுரனே,
சரீர - விசுத்த தேகமுடையானே,
சிதா - சாந்த குணத்தனே,
ஈசி சுதா - பார்வதி மைந்தனே,
விவிதா - பல்வடிவ பேதத்து மிருப்பவனே.
வலோன் - வல்லோனே,
சுசி ஈ - எனக்குத் தூய்மையை நல்கியருள்.
ஏசு இன்னல் ஓவ - எனக்குள்ள குற்றமும் துன்பமும் நீங்க.
நசி - அவற்றைக் கெடுத்தருள்.
ஏ - ஈற்றசை.

வாசி—இசைக்குழல். வீவு—விவு எனக் குறுகிற்று. இன்னல்—இனல் எனத் தொகுத்தல் விகாரப்பட்டது. பிறவற்றிற்கும் இது கொள்க.

7. "வேலவவேரரவேவலவே மாலசமாசசமாசலமா
நீலகலாபிபிலாகலநீ காலவகாமமகா வலகா."

(இ-ள்) வேலவ - வேலாயுதக் கடவுளே,
வேர்அர - மூல அரனே,
ஏவல - எல்லாவுயிர்களையுந் தன்னாணைவழி நிற்க நடத்துவோனே,
மால - பெருந்தன்மை யுடையோனே,
சமாச சமாசல - தொகைப்பட்டு நிற்கும் இந்திரிய நிக்கிரகத் தன்மையால் அசையாதிருப்போனே,
மாநீல கலாபி பிலா - பெரிய நீலநிற மயிலையுடைய பில மெனுங் குகையிலிருக்கின்ற குகனே,
கால - காலத்துக் கதிபனே,
அகாம - ஆசையில்லாதவனே,

மகாவல - பெரிய சக்தியுடையாய்
கலம்நீ - பிறவிக் கடலைக் கடக்க மரக்கலமாயுள்ள நீ,
கா - என்னைக் காத்தருள்.
ஏ - அசை.

8. "நாயனநானினிநானயநா மேயனலேனன லேனயமே
மாயவமாலிலிமாவயமா சேயபணீககணீபயசே"

(இ-ள்) இனி நாய் அன்ன நான் - இனி நாயைப் போன்ற நான்,
நால் நயநா - நால்வகை நயமுடைக் கவியை,
மேயன் அல்லேன் - உடையவனல்லேன்,
அனலேன் - உட்டுயராகிய வெப்பு நீங்கப் பெறாதவள் (ஆகலின்)
நயமே - சிவத்திருவே,
மாயவ - எல்லா மாயமு முள்ளவனே,
மாலிலி - மயக்கமில்லாதவனே,
மா வயமா - வலிய தேவ சிங்கமே
பயசே - பாலெனு மமிழ்தே,
சேய - செவ்வேளே,
பண் ஈக - நினக்குப் பணி செய்தலை எனக் கீந்தருள் வாயாக.
கண் ஈ - ஞானக் கண்ணையுங் கொடுத்தருள். இனி நாயன நான் எனக் கூட்டுக.
நால்வகைக் கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்.
பண்ணல் - பணி செய்தல், செய்தல்.

9. "பூமணமாருருமாணமபூ மாமறமானினிமாறம மமா
தூமதுகாமமகாதுமதூ தாமதனீபபனீதமதா"

(இ-ள்) பூ மணம் ஆர் உரு - பொலிவுடைத் தெய்வமணம் பொருந்திய திருவுருவே,
மாண் அம்ம - சிறந்த அழகினனே,
பூ மா - எழிலும் பெருமையுமுடைய,
மற மானினி - குறவர் குல மாதின்,
மால் - பெருமையை,
தம மா - இருளைப் பெருக்குஞ் சூரபதுமனாகிய மா மரத்தின்,
தூ - பகையே,

மதுகா - இன்ப சொரூபனே,
மம - (கைப்பாகிய) மமகாரத்தை,
காது மதூ - அழிக்குந் தேனே,
நீப - கடம்பணி கடவுளே,
பல் நீத மதா - பலவகை நீதத்தோடுங் கூடிய மதமுடையோனே,
தா மதன் - எனக்கு நல்ல வன்மையை நல்கியருள்.

10. ''தேனடவீறுறுவீடனதே தீனதநாததநாதனதீ
தாநகவீசசவீகநதா மேனகமீதிதிமீகனமே''

(இ-ள்) தேன் நட - பேரின்ப நடனா,
வீறு உறு வீடு அன்ன - (பிரபஞ்சத்தை வெல்லும்) வீறு, பாடார்ந்த வீடுபேறு போன்ற
தே - சொரூப தேவே,
தீன - எளிஞனிடத்து மிருப்பவனே,
தநா - செல்வனிடத்து மிருப்பவனே,
தத நாதன் - சுவானுபூதி வியாபக அருணகிரிநாதருடைய,
அதீதா - கடவுளே,
நக ஈச - குறிஞ்சிக் கிழவனே,
சவீ - பரஞ்சுடரே,
கந - நிறைந்துள்ளோனே,
மீ - சிதாகாசமே,
கனமே - சீர்மையே,
மேல் நகம் தா - எனக்கு மேலான இடத்தைக் கொடுத்தருள்.
ஈதிதி - அங்ஙனங் காத்தலையுஞ் செய்.

மேற்கண்ட பாடல்கள் ஒவ்வோரடியும் மாலை மாற்றாய் அமைந்துள்ளதைக் காணலாம்.

இவ்வாறு மாலை மாற்றாய் அமையும் வெவ்வேறு பாடல்களாலான ஒரு நூல் 'மாலைமாற்று மாலை' என்றும் வழங்கப்படுகின்றது. அதை இந்நூலின் பிற்பகுதியில் காண்க.

## 2. சக்கரம்

வண்டிச் சக்கரம் போல அமைக்கப்பட்ட சித்திரத்தில் சிற்சில இடங்களில் எழுத்துக்கள் பொதுவாக நிற்கும்படி அமையப் பாடும் செய்யுள் சக்கரம் எனப்படும். இதை மாறனலங்காரம் சக்கர பந்தம் என்றே கூறுகிறது. முத்துவீரியம் தவிர மற்றெல்லா இலக்கண நூல்களுமே இவ்வகையைக் கூறுகின்றன. இது பெரும் பாலும் நான்காரைச் சக்கரம், ஆறாரைச் சக்கரம், எட்டாரைச் சக்கரம் என மூவகைப்படும். ஆரைக்கால் என்பது சக்கரத்தின் குடத்திலிருந்து விளிம்பு வலயத்திற் சென்று பொருந்தும்படி தைத் திருக்கும் கட்டைகள் ஆகும்.

"சக்கரத் துள்தடு மாறுதல் தானே
சக்கர பந்த மெனச் சாற்றி னாரே"[1]

"அதுவே,
நாவிரு மூன்றிரு நாலென நாட்டும்
சால்பினி லார்புனை தன்மைய ஆகும்"[2]
என்பது மாறனலங்காரம்.

'நால், ஆறு, எட்டாரஞ் சக்கரம்'[3]
என்பது சுவாமிநாதம்.

### 1. நான்காரைச் சக்கரம்

இது, ஒரு சக்கரத்தில் நான்கு ஆரைக்கால்கள் அமைந்துள்ள தாகும். இவ்வமைப்பில் எழுத்துக்களை நிரலே அமைத்துப்பாடு வது நான்காரைச் சக்கரமாகும். இதை இரு வகையாகவும்பாடுவர்.

---

1. மாறன். 281
2. ,, . 282
3. சுவாமி. 197

நான்காரைச் சக்கரம்—1



## முதல் வகை

நடுவில் ஒரெழுத்து (பாடலின் தொடக்க எழுத்து, நிற்கச் சூட்டின் மேல் எழுத்துக்கள் நிற்கப் பாடுவது.

(எ-டு) ''மேரு சாபமு மேவுமே
மேவு மேயுண வாலமே
மேன வாமவ னாயமே
மேய னானடி சாருமே''[1]

(இ-ள்) மேரு சாபமும் மேவுமே - மேரு மலையும் (சிவபெருமானுக்கு) வில்லாகப் பொருந்தும்.

மேவுமே உணவு ஆலமே - (அவனுக்கு) விடம் உணவாக அமையும்.

அவன் ஆயமே மேலவாம் - அவன் பரிவாரமாகிய பூத கணங்கள் மேன்மை வாய்ந்தனவாம்.

மேய் அனான் அடி சாருமே - விரும்பி அப்பெருமானது பாதங்களைப் பற்றுக் கோடாகச் சேருங்கள்.

சிவபெருமானுக்கு மேருமலை வில்லாக மேவும். ஆலம் உணவாக அமையும். அவன் பூதக் கூட்டம் மேம்பட்டு விளங்கும்; அத் தன்மையான் திருவடிகளைச் சார்வீராக என்பது இதன் பொருள்.

இச் செய்யுளை நான்காரைச் சக்கரத்தில் முறையே அமைக்குங்கால் இச்செய்யுளிலுள்ள 32 எழுத்துக்களும் 17 எழுத்துக்களாகச் சுருங்கும். நடுக்குறட்டினின்ற 'மே' என்னும் எழுத்து, எட்டு முறை வாசிக்கப்பட்டு எட்டெழுத்தாகும். ஆரையில் நின்ற எட்டெழுத்துக்களும் இருமுறை வாசிக்கப்பட்டுப் பதினாறு எழுத்துக்களாம். இவை நீங்கச் சுற்று வட்டத்திலுள்ள எழுத்துக்கள் எட்டு. ஆக எழுத்துக்கள் முப்பத்திரண்டும் பதினாறாக அடங்கும்.

## இரண்டாவது வகை

நடுவில் ஒரு எழுத்தும் அதைச் சுற்றி நான்கு எழுத்துக்களும் அமைய, ஆரையின் மேல் நந்நான்கெழுத்து நிற்பச் சுற்று வட்டத்தில் இருபத்தெட்டெழுத்துப் பொருந்த, பாடலின் முதல் எழுத்தைச் சுற்று வட்டத்திலிருந்து ஆரம்பித்துப் பாடுவது.

---

1. தண்டி. மேற். ப. 229.

நான்காரைச் சக்கரம்—2



(நேரிசை வெண்பா)

(எ-டு) "மாதவா போதி வரதா வருளமலா
பாதமே யோது சுரரைநீ - தீதொழிய
மாயா நெறி யளிப்பா யின்றன் பகலாச்சீர்த்
தாயே யலகில்லா யாம்"[1]

(இ-ள்) அலகு இல் ஆய் ஆம் மாதவா - அளவில்லாத வலிமை பொருந்திய பெரிய தவத்தை யுடையோய்!

போதி வரதா - மகா போதி (அரச மரம்) விருட்சத்தினடியில் எழுந்தருளிய வரதனே!

பாதமே ஓது சுரரை நீ தீது ஒழிய மாயா நெறி அளிப்பாய் - உனது இணையடிகளைத் தோத்திரஞ் செய்யும் சுரர்களுக்கு அன்னோர் தம் தீமை கெட அருளி அழிவில்லா மோட்ச பதவியைக் கொடுப்பாய்.

இன்று - இப்பொழுது

அன்பு அகலாச் சீர்த் தாயே - தனது குழந்தைகள் மாட்டு அன்பு நீங்காத சிறப்பினையுடைய தாய் போன்றவனே! (எமக்கும் அருள் செய்வாயாக)

மாயா நெறி - வீடு

'அலகில் ஆடு ஆம் மாதவா' என வீற்பூட்டாகப் பொருள் கொள்க. 'எமக்கும் அருள் செய்' என்பது இசையெச்சம்.

மாதவனே, மாபோதி வரதனே, அன்பனே, உனது திருவடிகளை வணங்குபவரின் தீமை கெட அருளுவோனே எமக்கும் அருள் செய்வாயாக என்பது இதன் பொருள்.

## 2. ஆறாரைச் சக்கரம்

நடுவில் ஓர் எழுத்தும் அதைச் சுற்றி ஆறு எழுத்துக்களும் அமைய, ஆறு ஆரையின் மேல் எழுத்துக்கள் நிற்பச் சுற்று வட்டத்திலிருந்து தொடங்கிப் பாடுவது.

"மாதவனே தென்னரங் கேசமான் மருளாகமிகு
போதனுமன்பிற் றொழு கேசவ புரை கூர்பவமே
வாதித மாகுதற் கிங்கே யெனாருயிர்கா பொதுவே
வேதநமாநம போதனை வார்க் குள்ளமே தகவே."[1]

1. தண்டி. மேற், ப. 235.
2. மாறன். 784

(இ-ள்)

திருமகள் காந்தனே! அழகிய அரங்கேசனே! மேகம் போன்ற திருமேனியனே! பெரிய பிரமனும் அவன் முதலாங் கடவுளரும் அன்பினோடுந் தொழுங் கேசவனே! சகலான்மாக்களுக்கும் பொது நின்றவனே! என்றுன்னை நினைந்து மிகவுங் குழைவார்க் கிதயத் தாமரை யகத்தோனே; வேத முதல்வனே; நின்னைக் குறித்து நமாநம என்னா நின்றேன்; அதற்குத் தகுவதாக வென்னாருயி ரின்னும் பொல்லாங்கை விளைக்கப்பட்ட செனனத்தை இவ்வுல கத் தெய்தாது இன்பமெய்துதற்கு என்னைக் காப்பாயாக.

துறை - கடவுள் வணக்கம்
இது ஆறாரைச் சக்கரம்

இதனுள், நடுவு 'கே' என்னுமெழுத்து நின்று அதனைச் சூழ்ந்த குறட்டில் ஆறக்கரம் நின்று சூட்டிற் பதினெட்டெழுத்து நின்று குறட்டுக்குஞ் சூட்டுக்கும் நடு ஆராறில் ஆர்தோறும் ஏழெழுத்து நின்று ஏழெழுத்தில் நடுவெழுத்தாறும் 'தென்குரு கூர்' என்னும் பேராக நின்று ஆக அறை அறுபத்தேழில் எழுபத் தறுபத்தேழும் ஒற்றுள்பட ஒன்பதெழுத்து மாறாடின முறையா லேறி எழுபத்தாறாக நேரசைக் கலித்துறை நின்றவாறு காண்க.

நடுவிற் 'கே' மூன்றாகவும், முதற்சூட்டின் மையத்து 'வே' மூன்றாகவும், ஒழித்த சூட்டின் மையத்து நின்ற மா கு பொ மே வா ஐந்தும்ஒரொவொன்று இவ்விரண்டாகவும் நின்றன. இதனைப் பந்திக்குமாறு:— இடது பாகத் திரண்டாஞ் சூட்டின் மையத்து 'மாதவனே' என்றெடுத்து நேரே மிகும் என முடித்து, அதற் கடுத்த மூன்றாஞ் சூட்டின் மையத்துப் போதன் என எடுத்துமே யென நேரே முடித்து, நாலாஞ் சூட்டின் மையத்து வாதித மாகு தற்கென எடுத்து, பொதுவே என முடித்து, முடித்த 'வே' நாலா மடிக்கு முதலெழுத்தாகப் பின்னும் மேதகவேயென அதனின் முடிக்க.

## 3. எட்டாரைச் சக்கரம்

நடுவில் ஓர் எழுத்தும் அதைச் சுற்றி எட்டு எழுத்துக்களும் அமைய, எட்டு ஆரைகளில் ஆரைக்கு ஆறு எழுத்தாக அமைய, பாடலின் முதல் எழுத்தைச் சுற்று வட்டத்திலிருந்து தொடங்கிப் பாடுவது.

(எ-டு) ''மலர்மலி சோலை அகனலங் கதிர்க்க
மடமயி லியற்றக மாதிரம் புதைத்து
வளைந்துபுகன் மேக வல்லிருண் மூழ்க
வரியளி துதைந்த கதுப்பினி தடைச்சி
மன்னுமா மடமொழி வடிவாள் வளவன்
கன்னித் துறைவன் கனகச் சிலம்பே''[1]

(இ-ள்) மாமடமொழி - பெருமை வாய்ந்த மடப்பத்தை உடைய மொழியினை யுடையாள்

மலர்மலி சோலை - பூக்கள் நிறைந்த சோலையின்

அகல் நலம் கதிர்க்க - மிகுந்த அழகு விளங்க

மடமயில் இயல்தக - மடப்பம் மிக்க மயிலின் இயல்பு பொருந்த

மாதிரம் புதைத்து வளைந்து புகல்மேகம் வன்மை இருள் மூழ்க - திக்குக்களிற் பொதிந்து மூடிப் புகுதலையுடைய மேகத்தின் மிகுந்த இருள் தன்னிடத்துப் படிய

வரி அளி துதைந்த கதுப்பு இனிது அடைச்சி - இரேகைகளையுடைய வண்டினங்கள் நெருங்கிய கூந்தலைச் செவ்விதாக அலங்கரித்து.

வடிவாள் வளவன் - வடித்துக் கூர்மையாக்கிய வாளினை யுடைய சோழனாகிய

கன்னி துறைவன் - கன்னியாகுமரி நீர்த்துறையினை யுடைய மன்னனது.

கனகம் சிலம்பே மன்னும் - பொன்மயமாகிய மலையினிடத்துப் பொருந்தி நிற்பன்

வரியளி - வரிப்பாட்டினையுடைய வண்டுமாம்

இச்செய்யுள் பாங்கற்குத் தலைவன் தலைவியது இயலிடங் கூறல் என்னுந் துறைத்தாம்.

மலர்மலி சோலையின் அழகும், மடமயிற் தோகையின் வனப்பும், மேகத்தின் இருட்சியும் பொருந்தக் கூந்தலைப் புனைந்து தலைவி கனகச் சிலம்பில் மன்னுவள் என்க.

இக்கவி, எட்டாரைச் சக்கரத்தில் அமையும் போது நடுவில் 'க' என்னும் எழுத்து நிற்பக் குறட்டில் 'அறமே தனமாவது'

---

1. தண்டி, மேற்

என்னுந் தொடர் புலப்பட, ஒவ்வோர் ஆரின் மேலும் அவ்வாறு எழுத்துப் பொருந்தச் சுற்று வட்டச் சூட்டில் முப்பத்திரண்டு எழுத்துக்கள் அமையக் காணலாம்.

## திருச்சக்கர மாற்று

திருஞான சம்பந்தர் தேவாரத்தில் 'திருச்சக்கர மாற்று' என்னும் வகை இயம்பப்படுகிறது. இது, சக்கரம்-சுழற்சி என்னும் அடிப்படையில் அமைகிறது. இங்கு ஆரைகளோ அல்லது அவற்றில் அமையும் எழுத்துக்களோ குறிக்கப் படவில்லை. மாறாக, சில பெயர்ச் சொற்கள் சுழல் வடிவில் அமையப் பாடப்பட்டுள்ளது.

### முதல் வகை

பின்வரும் பதிகத்தில்[1] முதற்பாட்டில் சீகாழிக்குள்ள பிரமனூர் முதலான பன்னிரு திருநாமங்களும், இம்முதற் பாட்டில் இரண்டாவதாகச் சொல்லப்பட்ட திருநாமம் இரண்டாம் பாட்டின் முதலாகவும், மூன்றாவதாகச் சொல்லப்பட்ட திருநாமம் மூன்றாம் பாட்டின் முதலாகவும், இங்ஙனம் முறையே சக்கரம் போற் சுழன்று வருகின்றது. இவ்வமைப்பு எழில் பெற அமைந்த சிறப்புடையதாதலின் இது சக்கர மாற்று என்று சாற்றப் பெற்றது.

'[1]பிரமனூர் [2]வேணுபுரம் [3]புகலி [4]வெங்குருப் பெருநீர்த் [5]தோணி
புரமன்னு [6]பூந்தராய் பொன்னஞ் [7]சிரபுரம் [8]புறவஞ் [9]சண்பை
அரன்மன்னு தண்[10]காழி [11]கொச்சைவய முள்ளிட்டங் காதி யாய
பரமனூர் பன்னிரண்டாய் நின்ற[12]திருக் கழுமலநாம் பரவு
மூரே.' (1)

---

1. திருஞானசம்பந்தர் தேவாரம் 70. திருப்பிரமபுரம், பதிகம் 206

1. மன்னு - நிலைபெற்ற
   பொன் அம் - பொன்னையும் அழகையும் உடைய
   அரன்மன்னு தண் காழி - சிவபிரான் எழுந்தருளிய குளிர்ந்த காளீச்சரம்

[2]வேணுபுரம் பிரமனூர் புகலிபெரு வெங்குரு வெள்ள த் தோங்குந்
தோணிபுரம் பூந்தராய் தூநீர்ச் சிரபுரம் புறவங் காழி
கோணிய கோட்டாற்றுக் கொச்சை வயஞ்சண்பை கூருஞ்
செல்வ ங்
காணிய வையகத்தா ரேத்துங் கழுமலநாங் கருது மூரே. (2)

[3]புகலி சிரபுரம் வேணுபுரஞ் சண்பை புறவங் காழி
நிகரில் பிரமபுரங் கொச்சைவய நீர்மே னின்ற மூதூர்
அகலிய வெங்குருவோ டந்தண் டராயமரர் பெருமாற் கின்பம்
பகரு நகர்நல்ல கழுமலநாங் கைதொழுது பாடு மூரே' (3)

[4]வெங்குருத் தண்புகலி வேணுபுரஞ் சண்பை வெள்ளங் கொள்ளத்
தொங்கிய தோணிபுரம் பூந்தராய் தொகுபிரம புரந்தோல் காழி
தங்கு பொழிற்புறவங் கொச்சை வயந்தலைபண் டாண்ட மூதூர்
கங்கை சடைமுடிமே லேற்றான் கழுமலநாங் கருது மூரே (4)

[5]தொன்னீரிற் றோணிபுரம் புகலி வெங்குருத் துயர்தீர் காழி
இன்னீர வேணுபுரந் தராய் பிரமனூ ரெழிலார் சண்பை
நன்னீர பூம்புறவங் கொச்சை வயஞ்சிலம்ப னகரா நல்ல
பொன்னீர புன்சடையான் பூந்தண்க ழுமலநாம் புகழு மூரே (5)

---

2. வெள்ளத்து ஓங்கும் தோணிபுரம் - பிரளய வெள்ளத்துள் மேல் ஓங்கி மிதந்து விளங்கிய தோணிபுரம்
கோணிய - வளைந்த கூரும் - மிகும்
காணிய - காண

3. நிகர் - ஒப்பு
நீர்மேல் நின்ற மூதூர் - தோணிபுரம்
அகலிய - அகன்ற இடத்தை யுடைய
அம் தண்தராய் - பூந்தருவராய்
அமரர் பெருமாற்கு - தேவர் பிரானுக்கு

4. தண் - குளிர்ந்ததாகிய.
வெள்ளம் கொள்ளத் தொங்கிய தோணிபுரம் என்றதால் தோணி தொங்குதல் உணர்த்தப்பட்டது.

5. தொல் நீர் - பழைய பிரளய வெள்ளம்.
துயர் - பிறவித்துயர்.
சிலம்பன் நகர் - சிரபுரம்.

[6]தண்ணந் தராய் புகலி தாமரையா னூர்சண்பைதலைமுனாண்ட
வண்ண னகர்கொச்சை வயந்தண் புறவஞ்சி ரணியார் காழி
விண்ணியல்சீர் வெங்குருநல் வேணுபுரந் தோணிபுர மேலாலேந்து
கண்ணு தலான் மேவியநற் கழுமலநாங் கைதொழுது கருது
மூரே (6)

[7]சீரார் சிரபுரமுங் கொச்சைவயஞ் சண்பையொடு புறவ நல்ல
ஆராத் தராய்பிரம னூர்புகலி வெங்குருவொ டந்தண் காழி
ஏரார் கழுமலமும் வேணுபுரந் தோணிபுர மென்றென் றுள்கிப்
பேரா னெடியவனு நான்முகனுங் காண்பரிய பெருமா னூரே (7)

[8]புறவஞ் சிரபுரமுந் தோணிபுரஞ் சண்பைமிகு புகலி காழி
நறவ மிகுசோலைக் கொச்சை வயந்தராய் நான்முகன்றனூர்
விறலாய வெங்குருவும் வேணுபுரம் விசயன் மேலம் பெய்து
திறலா லரக்கனைச் செற்றான்றன் கழுமலநாஞ் சேரு மூரே (8)

[9]சண்பை பிரபுமரந் தண்புகலி வெங்குருநற் காழி சாயாப்
பண்பார் சிரபுரமுங் கொச்சை வயந்தராய் புறவம் பார்மேல்
நண்பார் கழுமலஞ்சீர் வேணுபுரந் தோணிபுர நாணி லாத
வெண்பற் சமணரொடு சாக்கியரை வியப்பழித்த விமல னூரே (9)

---

6. தண் அம்தராய் - பூந்தராய்
தாமரையான் ஊர் - பிரமபுரம்.
தலைமுன் ஆண்ட அண்ணல் நகர் - சிரபுரம்
விண் - ஆகாயம். இயல் - செல்லும். சீர் - கனம். புகழ்.
மேலோர் - தேவர், ஞானியர் முதலோர்.
மேவிய - விரும்பி எழுந்தருளியுள்ள

7. சீர் ஆர் - புகழ் நிறைந்த
நல்ல ஆராத்தராய் - நல்ல தெவிட்டாத பூந்தராய்
ஏர் - அழகு. உள்கி - நினைந்து.
பேரான் - பெயராதவனாய்.

8. நறவம் - தேன்.
நான் முகன்றன் ஊர் - பிரமபுரம்.
விறல் - பெருமை. விசயன் - அருச்சுனன்.
திறல் - திறன். அரக்கன் - இராவணன்.
செற்றான் - அழித்தான்.

9. சாலாப் பண்பு - அழியாக் குணம்.
பண்பார் - குணத்தார் எனினுமாம்.
நாண் - நாணம்.
வியப்பு - பெருமை.

[10]செழுமலிய பூங்காழி புறவஞ் சிரபுரஞ்சீர்ப் புகலி செய்ய
கொழுமலரா னன்னகரந் தோணிபுரங் கொச்சைவயஞ் சண்பை
யாய
விழுமியசீர்வெங்குருவொடோங்குதராய் வேணுபுரமிகு நன்மாடக்
கழுமலமென் றின்னபெயர் பன்னிரண்டுங் கண்ணுதலான் கருது
மூரே. (10)

[11]கொச்சை வயம்பிரம னூர்புகலி வெங்குருப் புறவங் காழி
நிச்சல் விழவோவா நீடார் சிரபுரநீள் சண்பை மூதூர்
நச்சினிய பூந்தராய் வேணுபுரந் தோணிபுர மாகி நம்மேல்
அச்சங்க டீர்த்தருளு மம்மான் கழுமலநா மமரு மூரே (11)

[12]காவி மலர்புரையுங் கண்ணார் கழுமலத்தின் பெயரை நாளும்
பாவியசீர் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவன்மாலை
நாவி னலம்புகழ்சீர் நான்மறையான ஞானசம் பந்தன் சொன்ன
மேவியிசை மொழிவார் விண்ணவரி லெண்ணுதலை
விருப்பு ளாரே (13)

இரண்டாம் வகை

திருஞான சம்பந்தர் பாடலில் வேறு வகையான சக்கரம் ஒன்றும் வருகின்றது. காழியின் திருநாமங்கள் முதற்பாட்டில் இணைக்கப்பட்டுள்ளன. இவ்விணை கடைசிப் பாடல் வரை பிரியாமல் வருமாறு ஒரு முறை பேணப்பட்டுள்ளது. ஒரு பாட்டில் ஈறாக முடிந்த இணைத் தலங்களே அடுத்த பாட்டின் முதல் இணையாக வருகின்றன. அந்த இணையிலும் முன்பாட்டின் ஈறாக முடிந்த தலமே சுழன்று வருவதைக் காணலாம். அப்பதிகம் பின் வருமாறு அமைகின்றது.

---

10. செழுமலிய - செழிப்பு மலிதலையுடைய
விழுமிய சீர் - மிக்க புகழ்.

11. நிச்சல் - நாடோறும்.
விழவு - திருவிழாக்கள்
ஓவா - ஒழியாத.
நீடுஆர்-காலத்தாலும் இடத்தாலும் நெடுமைபொருந்திய
நச்சு இனிய - விரும்புதற்கு இனிய.
அச்சங்கள் - பிறப்பச்சம் முதலியவை.
அம்மான் - அருமகன் என்பதன் மரூஉ.

12. காவி - நீலோற்பலம். கருங்காவி.
புரையும் - ஒக்கும்.
பாவிய - பரவிய.
பத்திமை - அன்பு. தலை விருப்பு - தலையன்பு.

விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
புகலிவெங் குருமேற் சோலை
வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம்வண் புறவமண் மேல்
களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
கொச்சைகழு மலமென் றின்ன
விளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர்தம்
பகையெறிவித் திறைவ னூரே' (1)

'திருவளருங்கழுமலமே கொச்சை
தேவேந்திரனூ ரயனூர் தெய்வத்
தருவளரும் பொழிற்புறவஞ் சிலம்பனூர்
காழிதகு சண்பை யொண்பா
வுருவளர்வெங் குருப்புகலி யோங்குதராய்
தோணிபுர முயர்ந்த தேவர்
வெருவவளர் கடல்விடம துண்டணிகொள்
கண்டத்தோன் விரும்பு மூரே' (2)

வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன் வாழூர்
ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழிற்
காழியிறை கொச்சை யம்பொன்
வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய
மிக்கயனூ ரமரர்கோ னூர்
ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ
தரனாளு மமரு மூரே. (3)

---

1. திருஞான சமபந்தர் தேவாரம். 73. திருப்பிரமபுரம் பதிகம். 209.

1. இளங்குமரன் - முருகக் கடவுள்.
பகை - பகையாகிய அசுரர்களை
எறிவித்த - எறியச் செய்த.

2. அயனூர் - பிரமபுரம்.
தெய்வத்தரு - கல்பக விருக்ஷாதி.
சிலம்பனூர் - சிரபுரம்.
நாகம் - மலை.
ஒள்பா உருவளர் - அறிவொளியுடைய அருட்பாக்கள் வடிவில் வளர்கின்ற.
வெருவ - அஞ்சியலற.

3. மறை - வேதம்.
சிலம்பன் வாழூர் - சிரபுரம். நாகநாத சுவாமிகோயில்

மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப்
புகலிதராய் தோணிபு ரம்வான்
சேமமதில் புடைதிகழுங் கழுமலமே
கொச்சைதே வேந்திர னூர்சீர்ப்
பூமகனூர் பொலிவுடைய புறவம்விறற்
சிலம்பனூர் காழி சண்பை
பாமருவு கலையெட்டெட் டுணர்ந்தவற்றின்
பயனுகர்வோர் பரவு மூரே. (4)

தரைத்தேவர் பணிசண்பை தமிழ்க்காழி
வயங்கொச்சை தயங்கு பூமேல்
விரைச்சேருங் கழுமலமெய் யுணர்ந்தயனூர்
விண்ணவர்தங் கோனூர் வென்றித்
திரைச்சேரும் புனற்புகலி வெங்குருச்
செல்வம்பெருகு தோணி புரஞ்சீர்
உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவ
முலகத்தி லுயர்ந்த வூரே. (5)

புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு
சிரபுரம்பூங் காழி சண்பை
எண்டிசையோ ரிறைஞ்சியவெங் குருப்புகலி
பூந்தராய் தோணி புரஞ்சீர்
வண்டமரும் பொழின்மல்கு கழுமலநற்
கொச்சைவா னவர்தங் கோனூர்
அண்டயனூ ரிவையென்ப ரருங் கூற்றை
யுதைத்துகந்த வப்ப னூரே. (6)

---

4. மாமலையாள் - இமாசல குமாரியான உமாதேவியார்.
சேமம் - காவல்.
பூமகனூர் - பிரமாபுரம். பொலிவு - விளக்கம்.
விறல் - வலிமை, வெற்றி.
கலை எட்டெட்டு - அறுபத்து நான்கு கலைகள்.
நுகர்வோர் - அநுபவிக்கும் அறிஞர்கள்

5. தரைத்தேவர் - பூசுரர், அந்தணர்
விரை - மணம். மெய் உணர்ந்த அயன் என்க.
அயனூர் - பிரமபுரம்.
விண்ணவர்தம் கோன்ஊர் - வேணுபுரம்.
திரை - அலை. உரை - (புகழ்) மொழி.

6. புண்டரிகத்துஆர்வயல்-தாமரை மலர்களால் நிறைந்தகழனி
இறைஞ்சிய - வணங்கிய.
வானவர் கோனூர் - வேணுபுரம்.
அண்ட அயனூர் - பிரமதேவனூர், பிரமபுரம்
காலசங்காரர் கர்த்தா என்க.

வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங்
கோனூர்வண் புகலி யிஞ்சி
வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு
சண்பைவியன் காழி கொச்சை
கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந்
தோணிபுரம் பூந்த ராய்சீர்ப்
பண்மலியுஞ் சிரபுரம்பார் புகழ்புறவம்
பால்வண்ணன் பயிலு மூரே. (7)

மோடிபுறங் காக்குமூர் புறவஞ்சீர்ச்
சிலம்பனூர் காழி மூதூர்
நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை
வேணுபுரங் கமல நீடு
கூடியய னூர்வளர்வெங் குருப்புகலி
தராய் தோணிபுரங் கூடப்போர்
தேடியுழ லவுணர்பயி றிரிபுரங்கள்
செற்றமலைச் சிலைய னூரே. (8)

இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன் றன்னூர்
நிரக்கவரு புனற்புறவ நின்ற தவத்
தயனூர்சீர்த் தேவர் கோனூர்
வரக்கரவாப் புகலிவெங் குருமாசி
லாச்சண்பை காழி கொச்சை
அரக்கன்விற லழித்தருளி கழுமலமந்
தணர்வேத மறாத வூரே. (9)

---

7. வண்மை - கொடை
வரத்து - மேன்மையையுடைய,
இஞ்சி - மதில், மிக்கோர் - ஞானம், தவம், தொண்டு, பூஜை முதலியவற்றால் மேன்மை பெற்றவர்.
கற்றோர் - சிவபிரானை வழிபடும்நெறியைஉணர்ந்தோர் வேதாகமங்களைக் கற்றவர் எனலுமாம்.
பார் - உலகம்

8. மோடி - துர்க்கை,
புறங்காக்கும் - காவல் செய்யும்.
சீர்ச்சிலம்பன் ஊர் - சிரபுரம்.
கமல நீடுகூடியவன் ஊர் - பிரமபுரம் (தாமரையில் வாழ் பவன்)
போர்...புரங்கள் செற்றமலை சிலையன் - திரிபுரத்த சுரரை அழித்த மேருவில்லியாகிய சிவபிரான்.

9. இரக்கம் உடைஇறையவன் - கருணையே உருவமாகிய சிவபிரான்.

மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங்
கொச்சையிந் திரனூர் மெய்மை
நூலோது மயன்றனூர் நுண்ணறிவார்
குருப்புகலி தராய்தூ நீர்மேல்
சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ்
சிலம்பனூர் செருச்செய் தன்று
மாலோடு மயனறியான் வண்காழி
சண்பைமண் ணோர்வாழ்த்து மூரே. (10)

ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர்
கொச்சைகழு மலமன் பானூர்
ஓக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய்
சிரபுரமொண் புறவ நண்பார்
பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர்
புகலிவெங் குருவு மென்பர்
சாக்கியரோ டமண்கையர் தாமறியா
வகைநின்றான் றங்கு மூரே. (11)

---

நிரக்க வருபுனல் என்றது நீரின் பெருக்கத்தையும் விரைவையும் உணர்த்தும்.
தவத்துஅயன் - தவத்தையுடைய பிரமன்.
புகல் என்றெண்ணி வரக் கரவாத புகலி. மாசு - குற்றம்
அரக்கன் - இராவணன். விறல் - வலி, அருளி - சிவன்.

10. மெய்த்தவம் - உண்மைத்தவம் (தபசு),
மெய்ம்மை நூல் - சத்தியமான வேதங்கள்.
நுண்அறிவு ஆர்குரு - நுட்பமான அறிவு பொருந்திய குரு வெங்குரு
சேல் - மீனினம். செரு - போர்.

11. ஆக்கு - ஆக்கம், 'ஆக்கம் மிக்க ஊர்'
ஆக்கம் அமர்சீர் ஊர் என்க.
அன்பான் ஊர் - அன்புருவான சிவபிரான் ஊர்.
அன்பானூராகிய தோணிபுரம்.
'அன்பே சிவம்'
கமலத்தோன் - பிரமதேவன்.
புரந்தரன் - இந்திரன்
ஒக்கம் - உயர்ச்சி, பழக்கம், பழகு, நகரவொற்றில்லை.
இறக்கம் - இறங்கு.

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிதராய்
தோணிபுர மணிநீர்ப் பொய்கை
புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர்
புகழ்க்காழி சண்பை தொல்லூர்
மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம்
வேணுபுர மயனூர் மேலிச்
சக்கரஞ்சீர்த் தமிழ்விரகன் றான்சொன்ன
தமிழ்தரிப்போர் தவஞ்செய் தோரே. (12)

## பிரபந்தத்திரட்டுக் கூறும் இலக்கணம்

சக்கரங்கள் நான்கு வகைப்படும். பதினேழு எழுத்து அமையும் படியுள்ள நான்காரைச் சக்கரம், நாற்பத்து ஒன்பது எழுத்து மனைகளில் வரும் ஆறாரைச் சக்கரம், எண்பத்தைந்தும், எண்பத்தொன்பதும் எழுத்துடைய எட்டாரைச் சக்கரம் என்பன. இவற்றை வெண்பாவிலன்றிச் சூத்திரத்தில் பாடுக எனவும் பிரபந்தத் திரட்டு கூறுகிறது.

'மன்னிய நான்கு வகைப்படுஞ் சக்கரங்க
ளுன்னுமனை யீரெட் டடனொன்று - மன்னுநாற்
பானொன்பா னெண்பத்தஞ் செண்பத்தொன் பான்பாட
லானவெண் பாச்சூத்தி ரம்.'[1]

என்பது பாடல்.

ஆயின், நமக்கு இன்று கிடைக்கும் பாடல்கள் பல வெண் பாவிலேயே அமைகின்றன. மேலும் எழுத்தெண்ணிக்கையும் மாறுபடுகின்றன.

யாப்பருங்கல விருத்தியில் இச்சக்கரத்தில் அமையும் பாடலைக் கூறி, அதை எவ்வாறு அமைப்பது என்பதையும் பாடலாகவே

---

12. அக்கரம் (அக்ஷரம்) - அழிவின்மை, க்ஷரம் - அழிவு அழியாத தருமனூர் என்றது வெங்குருவினை. தருமன் - இயமதருமன். புக்கரம் - தீர்த்தம். தொல்லூர் (புராதனபுரி) - பழமையதாகிய ஊர். மிக்கரஞ்சீர்-மிக்கு அரன்சீர் என்றதாகக் கொண்டுரைக்க லாம். நன்கு புலப்பட்டிலது. இச்சக்கரம் எனச் சுட்டி யதால், இப்பதிகம் சித்திர கவியுள் ஒன்றான சக்கர பந்தம் என்றறிந்து, முன்னோர் தலைப்பிற் குறித்தனர் எனலாம்.

1. பிரபந்தத் திரட்டு 1. திரட்டியல். 58

விளக்கியிருப்பது இவண் குறிப்பிடத்தக்கது. இவை இரண்டு பாடல்களும் வெண்பாவிலேயே அமைந்துள்ளன. எடுத்துக் காட்டாக,

(நேரிசை வெண்பா)

''தக்கவர் சம்பந்தந் தாங்கி யிவணெஞ்சா
மக்கட் டொகைஞாலந் தந்தோம்பி—மிக்கின்றோ
விண்மணந் தஞ்சாந்தந் நீவி நிரைத்தந்த
தண்மணவிற் சான்றோர் தயா''[1]

என்னும் இப்பாடல் ஆறாரைச சக்கரத்தில் அமைக்கும் வகையில் பாடப்பட்டுள்ளது.

(நேரிசை வெண்பா)

''ஆறாராய் அவ்வார்மேல் எவ்வே ழெழுத்தாகி
ஏரார்ந்த நேமிமேல் ஈராறாய்ச் - சீரார்ந்த
ஒண்குறட்டைச் சூழ நடுவோர் தகாரமேற்
றண்மணவிற் சக்கரமாந் தான்''

இதன் வழியே எழுதிக் கண்டுகொள்க என இச்சக்கரம் அமைக்கும் முறையும் கூறப்படுகிறது. இதன்வழி இச்சக்கரங்களை முறைப்படி அமைக்கவேண்டியதன் தேவையையும் நாம் ஒருவாறு உணரலாம்.

இதனுட் 'சக்கரம்' என்றதனானே, பூமிச்சக்கரமும், ஆகாயச் சக்கரமும், பூமியாகாயச் சக்கரமும், வட்டச்சக்கரமும், புருடச் சக்கரமும், சதுரச் சக்கரமும், கூர்மச் சக்கரமும், மந்தரச் சக்கர மும், காடகச் சக்கரமும், கலிபுருடச் சக்கரமும், சலாபச் சக்கரமும் சக்கரச் சக்கரமும், அரவுச் சக்கரமும், முதலாகவுடையன புணர்ப் பாவையுள்ளும், போக்கியத்துள்ளும், கிரணியத்துள்ளும், வது விச்சையுள்ளும் கண்டு கொள்க. அவையெல்லாம் சாவவும் கெடவும் பாடுதற்கும், மனத்தது பாடுதற்கும் பற்றாம் என்று கொள்க என யாப்பருங்கலம் கூறுகிறது.

புணர்ப்பாவை, போக்கியம், கிரணியம், வதுவிச்சை போன்ற தமிழ் நூல்கள் மறைந்து போனதால் இச்சக்கரங்களைப் பற்றிய செய்திகள் தெளிவாகவில்லை.

மேலும், மந்திரம், யந்திரம் போன்றவற்றிலும் இத்தகைய சக்கரங்கள் வரையப்படுவதால் இத்தகு சித்திரக் கவிகள் இயற்றுதல் கூடாது என்றும் கூறுவர். ஆயின், இச்சித்திரக் கவி களில் அத்தகைய கூறுகள் எவையும் அடங்கவில்லை என்பதை இவண் அறிதல் வேண்டும்.

---

1. யா.வி. ஒழிபியல். மே. பா.

## 3. சுழிகுளம்

எட்டெழுத்தாய் நான்கு வரியும் முற்றுப்பெற்ற பாட்டு· அதன் நான்கு வரிகளையும் மேனின்று கிழிழிந்தும் கீழ்நின்று மேலேறியும் புறஞ்சென்றுண் முடியப் படிக்கத் தக்கதாகப் பாடப் படுவது. யாப்பருங்கலம் முதலான எல்லா இலக்கண நூல்களும் இவ்வகையைக் கூற, மாறனலங்காரம் சூத்திரமும் அதன் உரை யும் இதன் விளக்கத்தைப் பின்வருமாறு உரைக்கக் காணலாம்.

"தெழித்தெழு நீர்குளத் தினுட்செறித் ததைக்கொடு
சுழித்தடங் குவபோன் றடங்குதல் சுழிகுளம்"[1]

என்பது நூற்பா.

"ஆரவாரித்து எழாநின்ற புனல் குளத்தினுள் தனதிடத் தடைந்தது யாதொன்று, அதனைக் கைக்கொண்டு சுற்றி உள்ளே அடங்குவது போலச்சுற்றிப் பாவினகத்துப் பொருளைக் கொண்ட டங்குதல் சுழி குளமாம்," என்றவாறு.

"எண்ணுறு கோட்டி விழைத்துச் சுழிபோலு
நண்ணல் சுழிகுளம்..."[2]

என்பது பிரபந்தத் திரட்டின் விளக்கமாம்,

"அன்றி ஓர்பாட்டு எவ்வெட்டுஎழுத்தாய் நால்வரி இட்டு ஒழுங்கு கீழ்மேல் மேல்கீழ்புறம் புறம்பார்க்கி னும்பாட்
"டொத்தல்சுழி குளம்:"[3]

என்பது சுவாமி நாதம்.

---

1. மாறன். 295
2. பிரபந்தத் திரட்டு. திரட்டியல் பா. 59
3. சுவாமிநாதம். 197. 4-5

## சுழிகுளம்



(வஞ்சி விருத்தம்)



(எ-டு) "கவிமுதி யார்பாவே
விலையரு மாநற்பா
முயல்வ துறுநர்
திருவழிந்து மாயா"[1]

(இ-ள்) கவி முதியார் பாவே - செய்யுளியற்றுவதில் முதிர்ச்சி யடைந்தவர் பாடல்களே,
விலை அருமை மா நன்மை பா - விலை மதித்தற்கரிய பெருமை வாய்ந்த நல்ல பாடல்களாம்.
முயல்வது உறுநர் - முயற்சி செய்வதில் நன்கு பொருந்தினவர்தம்,
திரு அழிந்துமாயா - செல்வம் சிதைந்து தொலையா.

கருத்துரை:

கவிகளில் முதிர்ந்தார் பாடும் பாடலே விலையிடுதற்கரிய தாகும். இடைவிடாது முயல்பவர் செல்வங்கள் அழிந்தும் அவை நீங்கா.

(வஞ்சித்துறை)

"அதிகமல மாகாவே
திண்ணிற மேர்போகா
கணிநீங்கு மார்மா
மறங்குவகு மேல"

எனவும்,

"கதமிகு வன்கோளி
தன்குன் நீவாற்கோ
மிகுதிற மாநீவான்
குன்றதன் மாறீவ"

எனவும்,

"சதமக லாவேலர்
தனதிண் டேரகல
மதியடு வானூரவே
கண்டுயிலா வாடேலா"

எனவும் வரும் பிற பாடல்களாலும் இதை அறியலாம்.

---

1. தண்டி மேற்.

சுழிகுளமாக அமையும் பாடலில் எட்டு எழுத்துக்களே அமைத்துப் பாடுவதால் இவை பெரும்பாலும் வஞ்சிப்பா வகைகளாகவே அமைவது குறிப்பிடத்தக்கது.

மேலும், ஒற்றெழுத்துக்களே இல்லாத பாடல்களும் சுழிகுளமாகப் பாடப்படுகின்றன.

### (ஒற்றிலாச் சுழிகுளம்)

கருவிளம் தேமா தேமா
தனதன தானா தானா

(எ-டு) மதிமதி மாமா வாவா
திதிதிதி சேயே யோவா
மதியமு மாசே யேமா
திதிமுரு காமா சேமா.[1]

| ம | தி | ம | தி | மா | மா | வா | வா |
|---|---|---|---|---|---|---|---|
| தி | தி | தி | தி | சே | யே | யோ | வா |
| ம | தி | ய | மு | மா | சே | யே | மா |
| தி | தி | மு | ரு | கா | மா | சே | மா |

இதில், மேலிருந்து கீழிழிந்து கீழிருந்து மேலேறி யுச்சரித்தானும், புறநின்றுவந்துண் முடிய வுச்சரித்தானும் மேற்செய்யுளே யாமாறறிக. ஐந்து வகையாகச் சுழித்துச் சேறலை இதன்கண் அறியலாம்.

(இ-ள்) மதிமதி - அறிவுக்கறிவே.
மாமா - அழகுக்கழகே.
வாவா - வருவாயாக, வருவாயாக.
திதி திதி - (என்னை) நிலைநிறுத்துவாயாக நிலைநிறுத்துவாயாக,
சேயே - இளமைப் பருவமுடையானே,
ஓயா - கெடாத
மதிஅம் உமா - அறிவு மழகுமுடைய உமாதேவியின்
சேயே - மகனே.
மா திதி முருகா - பெரிய காப்புத் தொழிலுடைய முருகவென்னுந் திருநாமத்தோனே.
மா சேமா - மகாசேமமுடையானே. எ-று.

---

1. திருவலங்கற்றிரட்டு. 2. 46,

# 4. ஏகபாதம்

ஒரு செய்யுளில் நான்கு அடிகளும் ஒரே விதமாயமைந்து ஓரடியே நாற்கால் உச்சரித்தால் பாட்டுப் பொருள் வேறுபட்டு முடிவது ஏகபாதம் எனப்படும்.

ஏகம்—ஒன்று. பாதம்—அடி. ஒரு பாடலின் நான்கு அடிகளும் ஒன்றாயிருத்தல் என்பது இதன் பொருள்.

யாப்பருங்கலம், வீரசோழியம் தவிர மற்ற இலக்கண நூல்கள் இவ்வகையைப் பற்றி விளக்கம் ஏதும் கூறவில்லை. ஆயின், திருஞான சம்பந்தரின் ஒரு பதிகம் முழுவதும் ஏக பாதமாகவே அமைந்துள்ளதைப் பின்வருமாறு காணலாம்.

இவற்றைத் தொடர்ந்து ஏகபாத நூற்றந்தாதி போன்ற பல இலக்கியங்கள் வளர்ந்துள்ளன.

ஏகபாதம்

பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்[1]

(இ-ள்) ஞானாகாசமாகிய பராசத்தியான பரிபூரணத்தை மிகுதியாக வியந்து அந்தப் பராசத்திக்கு அதீதமாகிய சுகமே வடிவாய் முதல் நடு இறுதி காணப்படாத வஸ்து எந்தப் பெரியோன். மேல் நிலமாகிய ஆகாசத்தின் கண்ணே யோடா நின்ற கங்கா தேவியை விரும்பித் திருமுடியிலே வைத்தவன், எம்மை

1. திருஞான சம்பந்தர் தேவாரம். பதிகம். 127

நீங்காத நிலைமையையுடைய எமது உயிர். பிரம ரூபத்திலே எண்ணப்பட்ட என்னை முத்தியிலே விடுகைக்கு அமையாத விருப்ப முள்ளவனாய் என்னை ஒக்க வந்தவன். பிரமபுரம் என்கின்ற சீகாழிப் பதியிலே வீற்றிரா நின்ற கர்த்தாவானவன் என்னுடைய சுவாமி. பெரியோனும் எனக்கு உயிரானவனும் என்னை யொக்க வந்தவனும் சீகாழிப்பதியில் வீற்றிருக்கும் கடவுள் எனக் கூட்டிப் பொருள் கொள்க.

விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன் (2)

(இ-ள்) அஷ்டகுல பர்வதங்களும், ஒலிசிறந்த தரிசு மணியாகவும், அகிலலோகங்களையும் உள்ளேயகப்படுத்தும் தன்மையவாயும், பெரிதாயும் உள்ள திருச் சிலம்பினைத் தரித்துள்ளவன். நூபுரம் எனற்பாலது நுபுரம் எனக் குறுகி நின்றது. விஷ்ணுவின் புறனுரையாகிய சிவ தூஷணத்தை அரசமரத்தினீழலில் அவனுடன் இருந்து விரும்பியுள்ள முப்புரங்களைச் சங்கரித்துள்ளவன். அண்ணி எனற்பாலது அணி என இடைக் குறையாய் நின்றது. தேவர்கள் கற்பகப் பூஞ்சோலைமலர்களால் அர்ச்சிக்கப் படுகின்ற தேவேந்திரனுடைய எணு எனற்பாலது ஏணு என நீண்டது. புரந்தரன் எனற்பாலது புரத்தரன் என வலித்து நின்றது. இதழ்கள் விண்டு மலர்கின்ற சோலை சூழ்ந்த சீகாழிப் பதிக்குக் கர்த்தாவாயுள்ளவன். தேவேந்திரன் மூங்கில் வழியாக வந்து பூசித்ததால் வேணுபுரம் என்னும் பெயர் பெற்றது. சிலம்பினைத் தரித்துள்ளவரும், முப்புரத்தை எரித்தவரும், தேவேந்திரனுடைய சோலை சூழ்ந்த வேணுபுரத்தில் வீற்றிருக்கும் இறைவர் எனக் கூட்டி உரைத்துக் கொள்க.

புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே (3)

(இ-ள்) இதயகமலத்திலிருந்து இடையறாத ஆனந்தம் பொழியப்பட்டு என்னை மலபோதத்தில் தள்ளாமல் எனக்கு அடைக்கலப் பொருளாயுள்ளவன். ஆன்மாக்களுக்கு இரகைஷயாக முண்டம் போலிருந்து திருநீற்றை அணியப்பட்ட மிக்க கருணை

யானவனே யான் பாடும் பாடலை உவந்துள்ளவன். புலிக்காலும் புலிக்கையும் பெற்றுள்ள வியாக்கிர பாத முனிவருக்கு ஞானா னந்தமாகிய நாடகத்தைக் கனக சபையிலே ஆடல் செய்யும் பரத வித்தையைக் கற்றுள்ளான். வியம் எனற்பாலது விய எனக் கடை குறைந்து நின்றது. கீழ்ச் சொன்ன லீலைகளெல்லாம் செய்கின்ற சிவன் தனது இச்சையால் பொருந்தியிருக்கும் ஊர் பிர்மா பூசித்த புகலி எனும் திருப்பதி.

விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன் (4)

(இ-ள்) கன்று குணிலாக எறிந்து விளவின் கனியைக் கொண்ட நாரணனைப் பிரகாசஞ் செய்யப்பட்டு நின்மல மாயிருந் துள்ள தனது பெரிய திருமேனியிலே ஒன்று பாதியாக வைத்துள் ளான் என்க. தீ எனற்பாலது தி எனக் குறுகி நின்றது. கழுதரு எனற்பாலது கழ்தரு என நின்றது. மாறுபாடாய்க் கதறப்பட்ட பௌத்தனது தலையிலே அக்கினியைச் சொரிந்து மிக்க பயத் தோடும் விழுகின்ற இடியை விழும்படி ஏவிப் பௌத்தரை வேர றுத்தானும் தானேயன்றி யானன்றாகும். தீ எனற்பாலது தி எனவும் காழ்தரு எனற் பாலது கழ்தரு எனவும், ஏங்கு எனற் பாலது எங்கு எனவும் குறுகி நின்றன. தனது பரிபூரணத்திலே தன்னை யிழந்து இரண்டாய் விசுவமுருகித் தான் விஷமாகத் தூஷணப்பட்டு நிற்கின்ற எனக்கும் குருமூர்த்தியாய் வந்து என் பிறவியை ஒழித்துத் தனது பேரின்பமாகிய பரிபூரணத்திலே எனது அடிமை குலையாமல் இரண்டற வைத்தவன். கீழ்ச் சொல்லிப் போந்த செய்திகளெல்லா முடையன் எத்தன்மையனோ என்னில் எங்கும் பிரகாசியா நின்ற கீர்த்தியினால் சிறக்கப்பட்டுள்ள இயமனால் பூசிக்கப்பட்ட வெங்குரு என்னும் திருப்பதியை விரும்பி யுள்ளான். வெங்குரு என்பதும் சீகாழி.

சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன் (5)

(இ-ள்) சுடுநிலமாகிய மயானத்தை நடமாடும் இடமாகக் கொண்டும், முப்புரங்களையும் நகைசெய்து சுடப்பட்ட வெற்றிப்

போரையுடைய தும்பை மாலைக் கடவுள். சூடார் எனற்பாலது சுடர் எனவும், ஈமம் எனற்பாலது இம் எனவும் குறுகி நின்றன. துரோணம் எனற்பாலது தோணி என மருவிற்று.

என் உச்சிக்குச் சூடாமணியுமாய் என்மேல் வைத்த மாலினை யுடையனுமாய் யாகத்தின் கண்வந்த யானையை வடிவொழித்துப் போர்க்கும் தன்மையை உடையவன். சூடாமணி எனற் பாலது சுடர்மணி எனவும், மாலி எனற் பாலது மாளி எனவும் தோல் எனற் பாலது தோள் எனவும் நின்றன. மாலையுடையவன்—மாலி. தோல்—யானை.

சூரியனுடைய களங்கத்தைக் கழுவப்பட்ட சமுத்திரம் போன்ற செனனக் கடலிலே கீழ்ப் பட்டழுந்திக் கெடா நின்ற ஆன் மாக்களுக்குக் கைப்பற்றிக் கரையேறும் தெப்பமாகப் பிரணவம் என்கிற மந்திரத்தை அவரது செவியின் கண்ணே உண்டாக்கா நின்றவன். மண்ணி என்பது மணி என இடை குறைந்து நின்றது. புரந்தவன் எனற் பாலது புரத்தவன் என வலித்தல் விகார மாயிற்று.

விளக்கத்தையுடைய நவரத்தினங்களாலே அலங்கரிக்கப்பட்ட மாளிகை சூழ்ந்த திருத்தோணிபுரத்திலே வீற்றிருக்கும் சிவன் இத் தன்மையன்.

பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி (6)

(இ-ள்) பூமியிலுள்ளாரையும் தேவகணங்களாய் உள்ளாரையும் தனது நாபிக் கமலத்திலே தோற்றுவிக்கப் பட்ட பிர்மா விஷ்ணுவினது போதத்திலே கண்ணாடியும் நிழலும் போலப்பிரதிவிம்பியா நின்றவன். ஆடி என்பது அடி எனக் குறுகி நின்றது.

மலத்திரயங்களைக் கழுவப்பட்ட சிவஞானிகள் கூட்டம் பொலிவு பெறத்தக்க வனப்பையுடைய ஆனந்த நிருத்தம் செய்தருள்பவன்.

சர்வாங்கமும் உத்தூளம் பண்ணின மார்பை உடைய சிவ ஞானிகளும். புண்ணிய பாவக் கட்டையரிந்து விசுவத்தைத் தள்ளப்பட்ட சிறப்பையுடையருமாயிரா நின்றவர்களுக்கு மிகுதியான மூலமாயுள்ளவன். உந்தராய் என்பது, ஊந்தராயென நீண்டது.

மறுவிலா மறையோர் வாழ்கின்ற திருப்பூந்தராய் என்னும் திருப்பதியின்கண் வீற்றிரா நின்ற சிவனது அழகிய திருவடித் தாமரை என்னை ஆண்டிடுவதாக பூந்தராய் என்பது சீகாழி.

செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில் (7)

(இ-ள்) தனது திருவடிப் பிரசாதமில்லாதார்க்கு மல மயக்கத்தின் மேலீட்டைக் கொடாத சிவனுக்கு விசுவாதீதமான இருப்பிடம் எனது சைதன்னியமே.

சந்தாதிகளஞ்சும் சேரப்பட்ட உலகத்தைத் தன்வாயினிட மாகவுடைய விஷ்ணுவின் களேபரத்தைத் திருமேனியிலே தரித் துள்ளான். சேர் எனற்பாலது செர் எனவும், சீர் எனற்பாலது சிர் எனவும் குறுகி நின்றன.

ஆத்தும விகாரமாகிய கர்மத்தினாலே இந்திரியங்களுக்கு விடயமாகிய சுவர்க்கத்திலிச்சையுடையானுக்கு அந்த சுவர்க்கம் மெய்யாக விசேடித் திருக்குமன்றே.

இந்திரிய வன்மையாகிய யுத்தத்துக்கு இளையாமல் அந்த இந்திரியமான பாணங்கள் தனது அறிவுக்குள் தைக்கப்படான். ஒரு கால் சிரபுரம் என்று சொன்னவிடத்துப் பஞ்சேந்திரியங்களையும் அவியப் பொருது சிவனுடைய திருவடியிலே அடையா நிற்பன் என்பதாம்.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன் (8)

(இ-ள்) பொலிவினையுடைய மாயா நிருத்தம் புரிகின்ற பத்திர காளியும் பூதபசாசும் பொருந்திய மயானமே திருக்கோயிலாக உள்ளவன். சுத்தமான வழியைத் தரப்பட்ட மகாரிஷிகள் திரண்டு பண்ணா நிற்கும் ஆரணியத்தில் தனித்துத் தவம் புரியா நிற்கும் தபோதனன். அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள இலக்குமியையொத்த இருடி பத்தினிகள் பிச்சையிடவந்து அணையு மிடத்துத் தனக்குள்ள நிருவாணத்தை அவர்களுக்குக் கொடுத் தவன். பொன்னால் செய்யப்பட்ட [illegible] திருவடிகளைப்

பாதங்களிலே யணிந்துள்ள கன்னியர் திரண்டு விளையாடும் புறவம் என்னும் திருப்பதியில் வாழ்கின்ற சிவன். புறவம் என்பதும் சீகாழி.

தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான்
தசமுக னெரிதர வூன்று சண்பையான் (9)

(இ-ள்) ஆத்துமாக்களிடத்துக் கருணைபிறக்கும் இடமாயுள்ளவன். அக்கினி வீசப்பட்டுத் திருவரையிலே அழுந்தச் சாத்தியுள்ள விரிந்த படத்தினையுடைய பாம்பை அரைஞாணாக வுடையவன். எல்லாம் இறந்து அந்தமாயுள்ள சிவஞானிகள் குழாத்துக்கு நேரிதாகிய சூனியமாயுள்ள பொருளைத் தோற்றுவித்துள்ளானுமாய்ப் புலியினது ஊன் பொருந்திய தோலாடையைத் திருவரையிலே விரித்துடுத்தவன். நேரி எனற்பாலது நெரி எனக் குறுகி நின்றது தரக்கு எனற்பாலது தர எனக் குறைந்தது. தூசு எனற்பாலது தூசு எனக் குறுகி நின்றது. பாயான் எனற்பாலது பையானெனக் குறுகிப் போலியாயிற்று ஆத்தும விகாரமான அகங்காரம் போம்படி என்னறிவில் எதிர்ப்பட்டவன் கயிலாய மலையைத் திருவுள்ளத்தடைத்து எழுந்தருளியிருந்து ஆத்துமாக்களை இரக்ஷியா நின்ற விசேஷத்தையுடையவ'னென்றேத்தும் சட்சமயங்களுக்கும் அவரவர் கொண்ட பயனாயுள்ளவன். சேரி எனற்பாலது நெரி எனக் குறுகிநின்றது. பத்துத் தலையுள்ள இராவணன் முறியும்படி திருவிரலாலடர்த்தவன் யாரென்னில், சண்பை என்னும் திருப்பதியிலே வீற்றிருக்கும் கடவுள்.

காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே

(இ-ள்) நிலைபெற்று நின்ற நின்மலமாகிய சித்தத்தையுடைய பத்தரிடத்துச் சத்தியப்பொருள் விளையும் பொருட்டு ஞான நாட்டத்திலே அவர்களைக். கடாக்ஷிக்கின்றவன். திருமிடற்றில் களங்க முடையானது கருணையை நினைத்து ஞான நாட்டத்தை யுடைய சிவஞானிகள் சிவனுக்கிச்சை தன்னடியார்க்கே ஆங்காரத்தைத் தடுக்குமதே பணியெனத் தமதறிவிலே கருதாநிற்பர். விஷ்ணுவும் பிர்மாவும், திருமுடியும் திருவடியும் காணும் பொருட்டு வராகமும் அன்னமுமாகக் கருதி வடிவு கொண்டார். ஐயா! உள்ள

படி கருதிச் சிவனைப் பெறாமல் அவர் கருதிய தேது எனில் அன்னியமே கண்டனர். கண் எனற்பாலது காண் என நீண்டது. என் பொருட்டால் காழி என்னும் திருப்பதியைப் படைத்தான். என் ஐயனை, எனது ஆசையை, கீழ்ச் சொன்ன இருவர்களும் தாங்கள் தேடும் தேட்டப் பிறிவில் மயக்கத்திலே தேட்டமழித்துத் தோன்றா நிற்பவனைத் தேடி மறத்தலொழிந்து எவ்வாறு காண்பர்.

கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே

(இ ள்) ஆணவ மலத்தோடு கூடியுள்ள மயக்கத்துடன் மாறுபட்டோர்கள் மாயாதனுவாலும் மந்திரதனுவாலும் மறைக்கப் படார்கள். மூடார் எனற்பாலது மூடர் எனக் குறுகி நின்றது. புலால் நாற்றத்தைப் பொருந்திய அழுக்கு மெய்யைப் பொய் யென்று மனங்கொள்ள மாட்டாமல் அதுவே தமது நிலைபெற்ற வுருவாக நினைத்துத்து வராடையாலே உடம்பைச் சூழப்பட்ட பௌத்தரும், பேதைத் தன்மையையுடைய மச்சியகந்தியினுடைய நலத்தைக் கொள்ளும் பொருட்டு அவளது சரீரம் எல்லாம் சுகந்த மொய்க்கும்படி அவளுடனே பொருந்திய பராசனாகிய மகாவிருடி வந்து சிவனைப் பொருந்தி அருச்சிக்கப் படுதலால். பராசர முனிவ ரால் பூசிக்கப்பட்டு அவன் பெயரால் பெயர் பெற்றுள்ள கொச்சை நகரம் என்னும் திருப்பதியிலே எழுந்தருளியிரா நின்ற தலைமை யோனை உள்ளபடி தரிசனம் பண்ணி வழிபட மாட்டார்களது நினைவு எவ்வாறிருக்கும் என்னில், மழைக்காலிருளும் வெளிதென இருண்ட மயக்கத்தையுடைய ஆணவ போதமாயிருக்கும்.

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

(இ-ள்) மிகுதிப்பட்ட தோஷமாயுள்ள சுக்கில சுரோணித மாகிய இருகை நீரின்கண்ணே சிரமுதலாகிய அவயவமாகத் தோன்றிப் பூமியின்கண் செனித்துப் பரிணமித்துப் பின்பு தேய்ந்து மரிக்கின்ற சென்மத்தையும், பரிணமித்தல்-வேறுபடுதல். கீழ்ச் சொல்லிப் போந்த சென்மத்தையும் கழுவி மலத்திரயங்களையும் கழுவா நிற்கும். தனது பாதியாகிய திருவருளினாலே என்னை அகப் படுத்திக் கவுளிகரித்துக் கொண்டு அந்த அருள்வழியான என

திடத்தில் இடையறாமல் வாழும் தன்னை எனக்குத் தந்த அடிமை குலையாமல் எக்கண்ணும் விட்டு விளங்கும் கர்த்தர். பாதி எனற் பாலது பதி எனக் குறுகி நின்றது. மாயா மயக்கத்தின் கண்ணே மயங்கி பெத்தமுத்தி இரண்டும் தெரியாமல் திண்டாடப்பட்ட மலபோதர்க்கு அமுதம் போன்று அரிதாயுள்ளவனுமாய் விட்டு விளங்கப்படா நின்ற பொன்னுருவையுடையவனாச் சிருஷ்டிக்குக் கர்த்தாவாகிய பிரமனது சிரக்கபாலத்திலே பிச்சை கொண்டு நுகரும் கருணையாளனே! திருக்கழுமலம் என்னும் மூவாப் பழங் கிழமைப் பன்னிரு பெயர்பெற்ற அனாதி மூலமாகிய பதியிடத்துக் கவுணிய கோத்திரத்திலே தோன்றப்பட்டயான் நிவேதிக்கப்படும் காட்டாகிய இப்பாடலைக் கீழ்ச் சொன் னவற்றிலும் மலத்திரயங் களிலும் அழுந்தா நின்ற ஒருத்தராகிலும் பலராகிலும் உரை செய்வார் உயர்ந்தாரே யாதலால் இப்பாடலை இடைவிடாமல் உரை செய்வீராக. காட்டு என்பது கட்டு எனக் குறுகி நின்றது.

இவ்வாறே ஏகபாத நூற்றந்தாதி போன்ற நூல்களும் எழுந் துள்ளன.

# 5. எழுகூற்றிருக்கை

எழுகூற்றிருக்கையாவது, ஏழு அறை ஆக்கி, முறையானே குறுமக்கள் (சிறார்கள்) முன்னின்றும் புக்கும் பேர்ந்தும் அறைகீறி விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதி யாக முறையானே பாடுவது என்பது யாப்பருங்கலம். இதனைப் பின்வந்த மாறனலங்காரம் விளக்கமாகக் கூறக்காணலாம்.

செய்யுளகத் தெண்ணப்பட்ட ஒன்று என்னும் எண் ஒன்று முதலாக ஒரேழ் ஈறாக நிகழ்ந்த எண்களைப் பதினான்கு நிலந் தொறு மீளவெண்ணுவ தொன்றாகும் எழுகூற்றிருக்கை. அங்ஙன மெண்ணப்படு மெண்கள் தாம் இரதத்திற் பந்திக்குமிடத்து மையத்திற் பத்தி இரண்டு பத்தியாய்க் கீறி வலமே இடமே நடத் தலைத் தரும் பகுதியில் மையத்திலொன்று பன்னான்காகவும், அதன் அயலிருபத்தியிலிரண்டும் பன்னிரண்டாகவும், ஒழிந்த மூன்று முதலிய வெண்ணும் பத்திதோறும் இரண்டு குறைந்து ஏழென்னுந் தொகை பொருந்தி முதலே நின்ற வொன்றில் வந்து முடியும்.

> ''ஒன்று முதலா வோரேழீறாச்
> சென்ற வெண்ணீரேழ் நிலந்தொறுந் திரிதர
> வெண்ணுவ தொன்றா மெழுகூற் றிருக்கை''[1]

> ''அவைதா
> மிரத பெந்தத்தினி லிடையறை யிரண்டாய்ச்
> சரத மதுற நடைசார் தருபான்மையி

1. மாறன். 297

னொன்று பன்னான் காயொரு பன்னிரண்டாய்
நின்றயலேனவு நிலந்தொறு முபயங்
குன்றுவதாய்த் தொகை கூடி யொன்றிலிறும்.''[1]

என்பது நூற்பா,

இதையே,

''எழுகூற் றிருக்கை ஏழுஅறை கீறிக்
குறுமக்கள் முன்னர்க் குறுகியும் மறுகியும்
விளையாடும் பெற்றி விளம்புதல் என்ப''[2]

எனப் பிரபந்த தீபமும் விளக்குகிறது.

சித்திரக் கவிகளில் ஒன்றான எழுகூற்றிருக்கை கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன் எழுந்த முழுப் பிரபந்தம் என்பர்.[3] திவாகரம் போன்ற நிகண்டுகளும் இவ்வகையைக் குறிக்கக் காணலாம்.

ஒன்று முதல் ஏழு வரையுள்ள எண்கள் கூடியும் குறைந்தும் பெரும்பாலும் ஆசிரியப் பாவில் பாடப்படும் இச்சித்திரக்கவி, நாட்டுப்புற விளையாட்டான 'பாண்டியாடல்' 'கிளித்தட்டு' போன்ற சிறுவர் விளையாட்டுக்களின் அடிப்படையாகத் தோன்றியது. மகளிரின் ஊசல், அம்மானை, கழங்கு, பந்தாடுதல் போன்ற விளையாட்டுகள் இலக்கியச் சிறப்புப் பெற்றுள்ளமையுடன் இதுவும் இணைந்து நோக்கத்தக்கது என்பர்.[4]

## முதல் நூல்

திருஞான சம்பந்தரே முதன் முதலில் எழுகூற்றிருக்கையைப் பாடியுள்ளார். இவருக்குப் பின் திருமங்கை யாழ்வார், அருணகிரி நாதர் போன்றோரும் பாடியுள்ளனர். இவை யாவும் சிறப்புப் பற்றி வரும் 'திரு' என்னும் அடைமொழியுடன் 'திரு எழு கூற்றிருக்கை' என்றே அழைக்கப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் ஒரு தனி இலக்கியமாகக் கருதப்படுகிறது.

## பாடல் அடி எண்ணிக்கை

ஆசிரியரின் மன விரிவுக்குத் தக்கபடி இப்பாடல்கள் விரிந்தும், சுருங்கியும் செல்லும். விரிந்து செல்வது எளிது; சுருங்கிச்

---

1. மாறன். 298
2. பிரபந்ததீபம். 20
3. மு. அருணாசலம். தமிழ் இலக்கிய வரலாறு. 9 ஆம் நூ பக். 352
4. டாக்டர் ச.வே. சுப்பிரமணியன். பிரபந்த தீபம். பக். 16

செல்வதோ அரிதாகும். திருஞான சம்பந்தரின் பாடல் 47அடிகள், திருமங்கை யாழ்வார் பாடல் 46 அடியும், நக்கிரர் பாடம் 55 அடியும், யாப்பருங்கல உரையில் காணும் பாடல் 36 அடியும், அருணகிரிநாதர் பாடல் 27 அடியும், மாறனலங்காரம் பாடல் 51 அடியும், தண்டபாணி சுவாமிகள் பாடல் 34 அடி என இவர்கள் பாடியுள்ளமை அறியத்தக்கது. இவற்றுள் அருணகிரிநாதர் பாடிய எழுகூற்றிருக்கை அடியளவில் சுருங்கிய பாடலாகும்.

## அமைப்பு

இச்சித்திரக் கவியை இரத பந்தத்தில் அமைப்பது மரபு, தேரின் உருவம் தோன்றும்படி நேர்க்கோடிட்டுக் கட்டங்கள் அமைத்து அவற்றில் எண் முறையைப் பின்பற்றி, பாடற் பகுதிகளை முறையாகப் பொருந்த அமைப்பதாகும். தேருக்கு மேற்பாகம், கீழ்ப்பாகம் இருப்பதுபோல் அமையும். ஒவ்வொரு பாகத்திலும் ஏழு கூறுகள் இருக்கும். இவற்றுள் முதல் கூறு 3 அறையும், இரண்டாம் கூறு 5 அறையும், மூன்றாம் கூறு 7 அறை யும், நான்காம் கூறு 9 அறையும், ஐந்தாம் கூறு 11 அறையும், ஆறு ஏழாம் கூறுகள் 13 அறையும் உடையனவாகும். இவ்வாறு ஒவ்வொரு வரிசையிலும் ஒன்றற்கொன்று இரண்டிரண்டு அறைகள் மேற்படக் காணலாம். மேற்பாகத்தில் உச்சியிலிருந்தும் கீழ்ப்பாகத்தில் அடியிலிருந்தும் இந்தக் கூறுகள் இவ்வாறு அமையும்.

திருஞானசம்பந்தர், திருமங்கையாழ்வார், நக்கீரர் போன்றோர் பாடல்களில் இவ்வமைப்பினைக் காணலாம்.

இவ் அமைப்பை எண் வடிவமாகப் பின்வருமாறு காணலாம்.

1 2 1
1 2 3 2 1
1 2 3 4 3 2 1
1 2 3 4 5 4 3 2 1
1 2 3 4 5 6 5 4 3 2 1
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1

இவ் அமைப்பில் சிறிது மாற்றமுடன் அருணகிரிநாதர் அமைக் கின்றார். அதில் முதற்கூறு ஓரறையும், இரண்டாம் கூறு மூன்று

அறையும் எனத் தொடர்ந்து அமையும். இதில், இறுதியில் இரண்டாம் முறை ஏழுவரை ஏறியும் இறங்கியும் வருகின்ற அமைப்பு இல்லை.

1
1 2 1
1 2 3 2 1
1 2 3 4 3 2 1
1 2 3 4 5 4 3 2 1
1 2 3 4 5 6 5 4 3 2 1
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1

இவ்வமைப்பு முறையைப் பின்பற்றியே தண்டபாணி சுவாமிகளும் பாடியுள்ளார். இவ்வாறு முதலில் மையத்தில் ஒன்று வருமாறு உள்ள அமைப்பு மாறனலங்கார உரையிலும் காணப்படுகிறது.

## எண் மாலைகள்

இந்த நிரப்புப் படத்தில் மேற்பாகத்தின் எண்கள் மட்டும் அந்தந்தக் கூறு அறைகளில் கொடுக்கப்பட்டுள்ளன. இதனை உற்று நோக்கின், ஒவ்வொரு கூறிலுள்ள இலக்கங்கள் மொத்தத்தையும் கூட்டினால் 1, 4 9, 16, 25, 36, 49 என வரும், அவை முறையே $1^2$, $2^2$, $3^2$, $4^2$, $5^2$, $6^2$, $7^2$ என அமையும் கணித நுண்மையையும்அறியலாம்.மேலும் இந்தஎண்கள் தேரைச்சூழ்ந்துநின்று தொங்கல் மாலைகள் போலவும் அமைந்துள்ளதை அறியலாம்.

## வேறு வகை

யாப்பருங்கல விருத்தி கூறும் அருகபரமன் எழுகூற்றிருக்கை ஒன்றிலிருந்து மேலே ஏறி இறங்கி ஒன்றுக்கு வரும்போது, அங்கு ஒன்று ஒருமுறை வருகிறதேயன்றி அடுத்த ஏற்றத்திற்குரிய ஒன்று தனியாக இல்லை. இதுவும் ஒரு புதிய அமைப்பு என்பர்.[1] இது பின்வருமாறு அமையும்.

1 2 1
2 3 2
1 2 3 4 3 2 1
2 3 4 5 4 3 2
1 2 3 4 5 6 5 4 3 2 1
2 3 4 5 6 7 6 5 4 3 2
1 2 3 4 5 6 7 6 5 4 3 2 1

---

1. மு. அருணாசலம். தமிழ் இலக்கிய வரலாறு. 10ம் நூ. பக். 315.

## பாட வேறுபாடு

நக்கீரர் இயற்றிய திருஎழுகூற்றிருக்கை முழுமையும் சம்பந்தர் பாடிய பாடலைப் பின்பற்றிப் பாடப்பட்டது என்றும், இப் பாடலையே யாப்பருங்கல உரைகாரர் மேற்கோளாகத் தருகிறார் என்றும், இதேபோல உரைகாரர் அருகபரமாகத் தாமே ஒரு புதிய பாடலையும் மேற்கோள் காட்டியுள்ளார் என்றும் கூறி, இப் பாடல்களுக்கான பாடவேறுபாடுகளையும் கூறுவர்.[1]

இவ்வாறு ஒன்று முதல் ஏழு வரையிலான எண்ணிக்கையில் பாடுமிடத்து இறைவனின் அருட்செயல்களையும் சில தத்துவங் களையும் இவற்றுள் அடக்கிப்பாடுவது மரபாக உள்ளது.

## தனிச் சிறப்பு

திருஎழுகூற்றிருக்கை என்பது, திரு+எழு+கூற்று+இருக்கை எனப் பிரிவதாகி, திரு-முத்தி இன்பம், எழு-எழுகின்ற, முத்தியின் பத்தை எழுப்புகின்ற. கூற்று-சொற்களின், இருக்கை-இருப்பிடம் எனப் பொருள் தருவதாகி, செல்வமும் வீட்டின்பமும் தருதற்கு இருப்பிடமாகிய திருப்பதிகம் என்றும் விளக்குவர்.[2]

இப்பாடல்களின் தனிச் சிறப்புக்குச் சான்றாக பின்வரும் செய்திகளும் அமைகின்றன.

திருஞான சம்பந்தரின் பாடல்களை எல்லாம் அவரது தந்தை யான சிவபாத இருதயர் நாள்தோறும் பாடிப்பயின்று வந்ததாக வும், அவை நாள்தோறும் பெருகிவர அங்ஙனம் முற்றும் பயிலப் பெறாது வருந்த அவர் பொருட்டுச் சம்பந்தர் திருஎழுகூற்றிருக் கையைப் பாடியருளி அஃது ஒன்றையே விதிப்படி ஓதினால், எல்லாப் பதிகங்களையும் ஓதிய பயன் கிடைக்கும் என்று அறுதி யிட்டு உரைத்ததாகவும் கூறுவர்.[3]

'புகலியில் வித்தகர்போல - அமிர்த்த கவித்தொகை பாட - அடிமை தனக்கருள்வாயே'[4] என்று வேண்டிய அருணகிரிநாதர் சம்பந்தரைப் போலவே தாமும் முருகக் கடவுளுக்குத் திருஎழு கூற்றிருக்கையைப் பாடியுள்ளதாகக் குறிப்பிட்டு 16,000 திருப்

1. மு.அருணாசலம். சித்தாந்தம். ஜூலை 1970. பக்.187-194
2. வ.சு. செங்கல்வராய பிள்ளை. முருகவேள் பன்னிரு திரு முறை. பகுதி-1. ப. 682.
3. பெரிய புராணம். 2174. 'எந்தைக் கெழுகூற்றிருக்கை'
4. திருப்புகழ் 242

புகழின் பிழிவாக உள்ள இதைப் பாடினாலேயே அவை அனைத்தையும் பாடிய பயன்கிட்டும் என்றும் கூறுவர்.[1]

நக்கீரரின் திருஎழுகூற்றிருக்கைப் பாடலைத் தொடர்ந்து அமையும் ஒரு வெண்பாவும் இப்பாடலின் சிறப்பை விளக்கக் காணலாம். நக்கீரன் மேல் சிவபெருமான் சினங்கொண்டு எரித்த போது அவர் வருந்தி இப்பாடலைப் பாடி இறைவனின் அருள் பெற்றதாகவும் கூறுவர்.[2]

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ள திருவல்லிக்கேணி பார்த்தசாரதி திருவெழுகூற்றிருக்கையின் காப்புச் செய்யுளில் இக்கவி இறைவனே (கண்ணனே) பாடப் பணித்துப் பாடப்பட்டதாகவும் கூறுவர்.

"ஏனோர் விதிதொட் டெழுகூற் றிருக்கை சொல்லி
யானோர் பதிகூற் றிருக்கையுஞ்சொற்-றேன்ஓர
என்துணிவார் ஏழ்கூற் றிருக்கையுஞ்சொல் லென்றுகண்ணன்
இன்றுரைத்தான் ஈதறிவார் யார்"

என்பது அச்செய்யுள்.

இவ்வாறு பல நிலைகளிலும் தனிச் சிறப்புப் பெற்ற இவ் எழுகூற்றிருக்கைப் பாடல்கள் இலக்கிய அமைப்பில் குறிப்பிடத் தக்கனவாகும்.

## திருவெழுகூற்றிருக்கை

(இணைக்குறளாசிரியப்பா)

(எ-டு)

ஓருரு வாயினை மானாங் காரத்(து)
ஈரியல் பாய்ஒரு விண்முதல் பூதலம்
ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்ப மும்மூர்த்தி களாயினை:
இருவரோ டொருவ னாகி நின்றனை;
ஓரா லீழ லொண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை; நாட்ட மூன்றாகக் கோட்டினை;

1. வ. சு. செங்கல்வராய பிள்ளை. முருகவேள் பன்னிரு திருமுறை பகுதி-1. ப-683.
2. திருவெழுகூற்றிருக்கை-பக். 24.

இருநதி யரவமோ டொருமதி சூடினை;
ஒருதாள் ஈரயின் மூவிலைச் சூலம்
நாற்கால் மான்மறி ஐந்தலை அரவம்
ஏந்தினை; காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி ஈடழித் துரித்தனை;
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்
கொன்று தலத்துற அவுணரை அறுத்தனை;
ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை; ஒருங்கிய மனத்தோ(டு)
இருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி ஐவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை;
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை;
இகலிய மைந்துணர் புகலி அமர்ந்தனை;
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை:
பாணிமூ வுலகும் புதைய மேல்மிதந்த
தோணிபுரத் துறைந்தனை; தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை;
வரபுரம் என்றுணர் சிரபுரத் துறைந்தனை;
ஒருமலை எடுத்த இருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை; புறவம் புரிந்தனை;
முந்நீர்த் துயின்றோன் நான்முக னறியாப்
பண்பொடு நின்றனை; சண்பை அமர்ந்தனை;
ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணராக் காழி அமர்ந்தனை;
எச்சன் ஏழிசையோன் கொச்சையை மெச்சினை;
ஆறு பதமும் ஐந்தமர் கல்வியும்
மறைமுத னான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை;
இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை

கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்
அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.[1]

(இ-ள்)

மான் ஆங்காரத்து - சக்தி, சிவம் என்ற,
ஈரியல்பாய் - இரண்டு தத்துவங்களின் தன்மையாய் இருந்து,

ஓர் உரு ஆயினை - (அந்தச் சக்தியுடனே இணைந்து)ஒரே உருவம் கொண்டு ஒன்றாகி நின்றனை.

ஒரு விண்முதல் பூதலம் - ஆகாயம் முதல் பூமி ஈறாக உள்ள பஞ்ச பூதங்களையும்,

ஒன்றிய இருசுடர் - பொருந்திய சந்திர சூரியர்களாகிய இரண்டு ஒளிகளையும்

உம்பர்கள் - தேவர்கள்
பிறவும் - (ஏனைய) ஆத்மாக்களையும்
படைத்து - சிருட்டித்து
அளித்து - காத்து
அழிப்ப - துடைக்க

மும்மூர்த்திகள் ஆயினை - பிரமா, விட்டுணு, உருத்திரன் என்னும் மூன்று மூர்த்திகள் ஆயினாய்,

இருவரோடு - பிரமா விட்டுணுவினோடு
ஒருவனாகி - ஏகமூர்த்தியாகி
நின்றனை - நின்றாய்
ஓர் ஆல் நீழல் - ஒப்பற்ற கல்லால மர நிழலிலே,
ஒண்கழல் இரண்டும் - ஒளிபொருந்திய திருவடிகள் இரண்டினையும்,
முப்பொழுது - காலை, பகல், மாலை என்ற மூன்று காலங்களிலும்

ஏத்திய - துதி செய்து நின்ற
நால்வர்க்கு - சனகாதி முனிவர் நால்வர்க்கு
ஒளிநெறி - சைவசித்தாந்த உண்மைத் தத்துவத்தை
காட்டினை - தெரிய விளக்கி உபதேசித்தாய்,
நாட்டம் - கண்கள்

1. திருஞான சம்பந்தர் தேவாரம்

மூன்றாக - மூன்றாகும்படி கொண்டு,
கோட்டினை - புருவம் நெரித்து,
அரவமோடு - நாகப்பாம்பினோடு,
இருநதி - பெரிய கங்கா நதியையும்
ஒருமதி - ஒப்பற்ற பிறைச் சந்திரனையும்
சூடினை - தலையில் அணியாகச் சூடியுள்ளாய்
ஒருதாள் - ஒற்றைக் காம்பினையும்
ஈரயில் - ஈர்கின்ற கூர்மையினையும் கொண்டுள்ள
மூவிலைச் சூலம் - மூன்று இலைவடிவான சூலத்தையும்
நால்கால் மான்மறி - நான்கு கால்களையுடைய மான் கன்றினையும்.
ஐந்தலை அரவம் ஏந்தினை - ஐந்து தலை நாகத்தையும் கைகளிலே ஏந்தியுள்ளாய்,
காய்ந்த - தன்மேல் கோபித்து வந்த
நால்வாய் - தொங்குகின்ற வாயினையும்
மும்மதத்து - மூன்று மதநீர்ப் பெருக்கினையும்
இருகோடு - இரண்டு தந்தங்களையும் உடைய
ஒருகரி - ஒரு ஆண் யானையினது
ஈடு அழித்து - வலியைக் கெடுத்து
உரித்தனை - தோலை உரித்துப் போர்வையாகக் கொண்டாய்
ஒருதனு - ஒப்பில்லாத மேருமலையாகிய வில்லை
இருகால் வளைய வாங்கி - இரண்டு முனையும் சேர வளையும்படி வணக்கி
அவுணரை - அசுரர்களை
நானிலம் அஞ்ச - பூமியில் உள்ளார் பயப்படும்படி
கொன்று - எரித்துக் கொன்று
முப்புரத்தோடு - அவர்களது அரண்களாகிய திரிபுரத்தோடு
தலத்துற - மண்ணில் வீழ்ந்து கிடக்கும்படி
அறுத்தனை - செகுத்தாய்
ஐம்புலன் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
நாலாம் அந்தக்கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரம்
முக்குணம் - சாத்துவிதம், ராசதம், தாமதம்
இருவளி - பிராணன், அபானன்

ஒருங்கிய - மூலாதாரத்திலே ஒடுக்கிக் கொண்டு
ஏகாக்கிர சித்தராயிருந்துள்ள
வானோர் - சிறந்த யோகியர்,
ஏத்த நின்றனை - துதிக்க நின்றருளினாய்;
ஒருங்கிய மனத்தோடு - ஒன்றையே நினைத்திருந்து
இருபிறப்பு ஓர்ந்து - கருமப்பிறப்பையும், ஞானப் பிறப்பையும் அறிந்து
முப்பொழுது - காலை, மாலை, உச்சி
குறை முடித்து - செய்ய வேண்டிய கர்மாக்களைச்செய்து முடித்து
ஆறு அங்கம் - சிட்சை, வியாகரணம், சந்தங், நிருக்தம், சோதிடம், கல்பம் என்ற வேதாங்கங்கள்
முதலெழுத்து - 'ஓம்'
எழு - ஆகாயத்தில் எழுகின்ற
வான்தனை - மேகங்களை
வளர்க்கும் - வேள்வித்தீ வளர்த்து மழையை வருவிக்கும்
பிரமபுரம் - சீகாழித் திருப்பதி
பேணினை - விரும்பி எழுந்தருளியுள்ளாய்;
அறுபதம் - ஆறு கால்களையுடைய வண்டுகள்
முரலும் - இசைபாடும்
வேணுபுரம் - சீகாழி
இகலி - சூரபதுமனோடு மாறுபட்டு
அமைந்து - யுத்தமொழிந்து
உணர் - பின்பு பரமேசுவரனது திருவடியே தஞ்சம் என்று உணர்ந்து
புகலி அமர்ந்தனை - சீகாழிப்பதியை விரும்பினாய்
வெங்குரு - சீகாழிப்பதி
பாணி - நீரானது
மூவுலகும் புதைய - பூமி, ஆகாயம், சுவர்க்கம் என்ற மூன்று உலகங்களையும் புதைப்ப
மேல்மிதந்த - அதன் மேலே தோணிபோல மிதந்த
தோணிபுரத்து - சீகாழியிலே
உறைந்தனை - கோயில் கொண்டுறைகின்றாய்;
இருநிதி - சங்கநிதி, பதுமநிதி
வாய்ந்த - பொருந்தியிருக்கின்ற
பூந்தராய் - சீர்காழியிலே
ஏய்ந்தனை - எழுந்தருளியிருக்கின்றாய்;

வரபுரம் - அத்விதீயமானபுரம்
சிரபுரம் - சீகாழிப்பதி
ஒருமலை - கயிலாய மலை
இருதிறல் - மிக்க புயவலிமை படைத்த
அரக்கன் - இராவணனுடைய
விறல் - ஆற்றல்
புறவம் - சீகாழிப்பதி,
புரிந்தனை - விரும்பி எழுந்தருளினாய்
முந்நீர் துயின்றோன் - திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட திருமால்
நான்முகன் - பிரம்மா
சண்பை - சீகாழிப்பதி
அமணர் - சமணர்
அறுவகை - எல்லாம் கணத்திலே தோன்றி அற்றுப் போகும் என்ற வகையினைச் சேர்ந்த,
தேரரும் - பௌத்தரும்,
ஊழியும் உணரா - ஊழிக்காலத்தும் அறியமாட்டாத
காழி - சீகாழிப்பதி
எச்சன் - யாகம் செய்வோனும், யாகதேவதையும் நீயே
கொச்சை - சீகாழிப்பதி
ஆறுபதம் - பெயர், வினை, இடை, உரி, வடசொல், திசைச் சொல் என்ற ஆறு சொற்கள்.
ஐந்து அமர் கல்வியும் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளால் கற்கின்ற கல்வியறிவும்,
கவுணியன் - ஞானசம்பந்தன்.

கருத்துரை:

இறைவனே! நீ, சக்தி, சிவம் என்ற இரண்டு தத்துவங்களின் தன்மையாய் இருந்து, அந்தச் சக்தியுடனே இணைந்து ஒரே உருவம் கொண்டு ஒன்றாகி நின்றனை.

எங்கும் ஒன்றாகப் பரந்துள்ள ஆகாயம் முதலாகப் பூமி ஈறாக உள்ள பஞ்ச பூதங்களையும், பொருந்திய சந்திர சூரியர்களாகிய இரு ஒளிகளையும், தேவர்களையும் ஏனைய ஆன்மாக்களையும் படைத்து, காத்து, அழிக்க முறையே பிரமா, விட்டுணு, உருத்திரன் என்னும் மூன்று மூர்த்திகள் ஆனாய்,

இத்துடன், பிரம விட்டுணுவோடு ஏகமூர்த்தியாகியும் நின்றாய்.

ஒப்பற்ற கல்லால மரத்தின் நிழலிலே முப்பொழுதும் உமது திருவடிகளை வணங்கிய சனகர், சநாதனர், சனந்தனர், சனற்குமாரர் என்ற நால்வர்க்கும் தட்சிணாமூர்த்தி வடிவாகி ஒளி காட்டினாய்.

முக்கண்ணும், நாகமும், கங்காநதியும், பிறைச் சந்திரனும் கொண்டு விளங்குகின்றாய்.

சூலமும் மான் கன்றினையும், நாகத்தையும் கையிலே தரித்துள்ளாய். வலிய ஆண்யானையின் தோலைப் போர்வையாகக் கொண்டாய்; மேருமலையை வில்லாக வளைத்து, தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற அசுரர்களைக் கொன்று திரிபுரம் எரித்தாய்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து புலன்களையும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக் கரணங்கள் நான்கினையும்; சாத்துவிதம், ராசதம், தாமதம் என்ற மூன்று குணங்களையும்; பிராணன், அபானன் என்ற இரண்டு வாயுவையும் மூலாதாரத்திலே ஒடுக்கிக்கொண்டு ஏகாக்கிர சித்தராயிருந்துள்ள சிறந்த யோகியர் துதிக்க நின்றருளினாய்.

உணவு, உறக்கம், அச்சம், புணர்ச்சி என்னுமிவற்றில் செல்லும் மனத்தை இறைவன் திருவடிகளிலே பொருந்த வைத்தவர்களாய்; முன்னர்த் தாம் தாய் வயிற்றுப் பிறந்த கருமபிறப்பையும், உபநயனத்தின் பின்னர் உண்டாகும் ஞானப்பிறப்பையும் தெள்ளத் தெளிய விசாரித்து அறிந்து; காலை, உச்சி, மாலை என்ற மூன்று சந்தியிலும் செய்ய வேண்டிய ஜப, தர்ப்பண, ஓமங்களை, செவ்வனே செய்து முடித்து; இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்கிற நான்கு வேதங்களையும் ஓதி; பித்ரு, தேவ, மனித, பிரம, பூத யக்ஞங்களாகிய ஐந்து வேள்விச் சடங்குகளையும் சரிவர அமையச்செய்து: 'ஓம்' என்ற பிரணவத்தோடு தொடங்கி; சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், சோதிடம், கல்பம் என்ற வேதாங்கங்கள் ஆறினையும் அறியச் சொல்லி; தொன்று தொட்டுப் பரம்பரையாக வருகின்ற உச்சரிப்புமுறை, சுவரம் முதலியவற்றை ஓதியோதி மனத்தில் பயில வைத்து; ஆகாயத்தில் எழுகின்ற மேகங்களை மழை பொழியும்படி செய்ய வேள்வித்தீ வளர்த்து மழையை வருவிக்கும் பிராமணர்கள் வாழும் பிரமபுரத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியுள்ளாய்.

வண்டுகள் இசைபாடும் பொழில்கள் சூழ்ந்த சீகாழியை விரும்பி, இந்திரன் முதலிய தேவர்கள் புகல் புகுந்த புகலியை விரும்பினாய்; நாற்புறமும் அலைகடலால் சூழ்ந்த சீகாழியை விரும்பினாய் நீரானது பிரளயமாய்ப் பெருகி பூமி, ஆகாயம், சுவர்க்கம் என்ற மூன்று லோகங்களையும் புதைப்ப, அதன் மேலே தோணி போல மிதந்த சீகாழியிலே கோயில் கொண்டுறை கின்றாய்.

சங்கநிதி, பதுமநிதி என்ற இருநிதிகளும் பொருந்தி, அத்விதீய மானபுரம் என்று உணரத்தக்கதான சீகாழியிலே கோயில் கொண்டுள்ளாய்.

ஒப்பற்ற பெருமையுள்ள கயிலை மலையைத் தூக்க முயன்ற இராவணனுடைய ஆற்றலைப் போக்கி அவனுக்கு அருள் புரிந் தாய். திருமாலும் பிரமாவும் அடியும் முடியும் அறியமாட்டாத தன்மையோடு நின்றருளினாய். சமணரும் பௌத்தரும் ஊழிக் காலத்தும் அறிய மாட்டாத சீகாழியிலே விரும்பி எழுந்தருளி யுள்ளாய்.

யாகம் செய்வோனும், யாகதேவதையும் ஏழிசை வடிவமாயும் இருப்பவனே! பெயர், வினை, இடை, உரி, வடசொல், திசைச் சொல் என்ற ஆறு சொற்களும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளால் கற்கின்ற கல்வியறிவும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், முக்காலமும் தோன்றும்படி சீகாழிப் பதியில் நின்றருளினாய்.

இத்தகைய விழுமிய இயல்புகளையுடைய உன்னை நினைக்க வல்லமையுடையோர் இப்பூவுலகில் எவரும் இல்லை.

இவை நினது ஒன்றிய ஒன்றாந் தன்மையின் உள்ளமைந்துள்ள பெருமையினை நன்கு அறிந்த ஞானசம்பந்தனின் பொருள் பொதிந்த பேச்சுக்களாகும்.

## திருவெழுகூற்றிருக்கை (வேறு)

(நேரிசையாசிரியப்பா)

ஓருரு வாகிய தாரகப் பிரமத்து
ஒருவகைத் தோற்றத்து இருமர பெய்தி
ஒன்றாய் ஒன்றி இருவரில் தோன்றி
[illegible]

ஒருவ னாயினை; ஓராச் செய்கையின்
இருமையின் முன்னாள் நான்முகன் குடுமி
இமைப்பினிற் பெயர்த்து மூவரும் போந்து
இருதாள் வேண்ட ஒருசிறை விடுத்தனை;
ஒருநொடி அதனில் இருசிறை மயிலின்
முந்நீ ருடுத்த நாவிலம் அஞ்ச
நீவலஞ் செய்தனை; நால்வகை மருப்பின்
மும்மதத் திருசெவி ஒருகைப் பொறாப்பன்
மகளை வேட்டனை; ஒருவகை வடிவினில்
இருவகைத் தாகிய மும்மதன், தனக்கு
மூத்தோ னாகி நால்வாய் முகத்தோன்
ஐந்துகைக் கடவுள் அறுகு சூடிக்கு
இளையோ னாயினை; ஐந்தெழுத் ததனில்
நான்மறை உணர்த்தும் முக்கட் சுடரின்
இருவினை மருந்துக்கு ஒருகுரு வாயினை;
ஒருநாள் உமைஇரு முலைப்பால் அருந்தி
முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
ஐம்புலக் கிழவன் அறுமுகன் இவன்என
எழுதரும் அழகுடன் கழுமலத்து உதித்தனை;
அறுமீன் பயந்தனை; ஐந்தரு வேந்தன்
நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சுட்டு
அன்றில் அங்கிரி இருபிள வாக
ஒருவேல் விடுத்தனை, காவிரி வடகரை
மேவிய குருகிரி இருந்த ஆறெழுத்து
அந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவன் எனவிருந் தனையே.[1]

(இ-ள்) ஓர் உரு ஆகிய - ஒரு உருவத்தைக் கொண்டுள்ள,
தாரக பிரமித்து - பிரணவ சொரூபமான பர்ப்பிரம்மத்தினிடத்து,
ஒருவகைத் தோற்றத்து - மானுடப்பிறப்பில் ஒப்பற்ற ஆறு தனிச் சேய்களான வகையில் தோன்றி,
இருமரபு - தாய்மரபு, தந்தைமரபு,
ஒன்றாய் ஒன்றி - ஆறுமுகங்களும் ஒருசேரப் பெற்று,
இருவர் - சிவம், சக்தி,
மூவாது இன்றி - என்றும் குமரனாகவேயிருந்தருளி,

1. அருணகிரிநாதர் - திருஎழுகூற்றிருக்கை.

இருபிறப்பாளர் - அந்தணர்,
ஒருவனாயினை - ஒப்பற்றவனாயினை,
இருமை - பெருமிதம்,
ஓராச்செய்கை - ஆராயாத செய்கை,
மூவர் - சிவன், விட்டுணு, இந்திரன்
முந்நீர் - கடல். நானிலம் - பூவுலகம்,
பொருப்பன் - மலைபோன்ற ஐராவதம்
மகள் - தெய்வயானை
மும்மதன் - விநாயகன்
ஐந்தரு வேந்தன் - இந்திரன்
அன்றில் அங்கிரி - கிரௌஞ்சகிரி,
குருகிரி - சுவாமிமலை

கருத்துரை:

ஒரு உருவத்தைக் கொண்டுள்ள பிரணவ சொரூபமான பரப்பிரம்மத்தினிடத்து, மானுடப் பிறப்பில் ஒப்பற்ற ஆறு தனிச் சேய்களான வகையில் தோன்றி தாய்மரபு, தந்தை மரபு என்ற இருவகை மரபினையும் ஏறிட்டு அடைந்து, பின்பு இரு மரபினையும் ஒன்றாக்கி ஆறுமுகங்களும் சேரப் பெற்று ஒரு சேயாய் ஒன்றி, சிவசக்தி அம்சமாய் அவதரித்து, மூப்பில்லாது என்றும் குமரனாய் அந்தணர்களுக்குள் ஒப்பற்றவனாக நின்றாய்.

இறுமாப்பும் ஆராயாத செய்கையும் கொண்ட பிரமதேவனை தண்டித்துப்பின், சிவபிரான், திருமால், இந்திரன் இவர்கள் அடி பணிந்து வேண்ட பிரமனை விடுவித்தருளினாய்.

கண்ணிமைக்கும் பொழுதிற்குள்ளே பெரிய சிறகுகளை யுடைய மயிலின் மேலேறிக் கடலாற் சூழப்பட்ட இப்பூவுலகை நீ வலம் வந்தாய். நான்கு பகுதிப்பட்ட தந்தங்களையும் மதநீர் பெருக்கையும் கொண்ட ஐராவதத்தின் காப்பில் வளர்ந்த தெய்வ யானையை விரும்பி மணம் புரிந்தாய்.

யானைமுகமும் மனித உடலும கொண்ட அறுகுசூடும் கடவுளாம் ஐங்கரனுக்குத் தம்பியாகத் தோன்றினாய். ஐந்தெழுத்த தனில் நான்மறை உணர்த்தும் முக்கட் பிரானாகிய சிவனுக்கே குருவாக விளங்கினாய்.

சீகாழிப்பதியில், தோணிபுரத்து உமையம்மை தன் இரு முலைகளிலும் பெருகிய பாலைப் பொற்கிண்ணத்தில் கொடுக்க அருந்தி, முத்தமிழில் நாற்கவிராசனாகி ஐம்புலனழகன் அறுமுகனாக அவதரித்தாய்.

கார்த்திகைப் பெண்டிர் அறுவரால் வளர்க்கப்பட்டு, கிரௌஞ் சகிரியே இரண்டாகும்படி. வேலாயுதம் செலுத்தினாய். காவிரி யாற்றின் வடக்குக் கரையில் அமைந்துள்ள சுவாமி மலையில் வாழும் அந்தணர் வணங்குமாறு திரு ஏரகத்துத் தனிப் பெருங் கடவுளாகத் தலைமை தோன்ற வீற்றிருந்தருளுகின்றாய்.

## திருவெழுகூற்றிருக்கை (வேறு)

### (இணைக்குறள் ஆசிரியப்பா)

ஒருபொருட் கிருதுணி புரைத்தனை யொருகா
லிருபிறப் பாளர்க்கு மூவமிழ் தாக்கி
யீரறம் பயந்த வோரரு ளாழியை
யிருமலர் நெடுங்க ணரிவையர் தம்மொடு
மூவகை யுலகி னால்வகைத் தேவரு
மும்மையி னிறைஞ்சு மீரடி யொருவனை
யிருவினை பிரித்து மூவெயின் முருக்கி
நாற்கதி தவிர்த்த வைங்கதித் தலைவ!
நான்மறை யாள! மும்மதிற் கிழவ!
இருகுண மொருமையிற் றெரிவுறக் கிளந்த
விருசுடர் மருட்டு முக்குடைச் செல்வ!
நால்வகை வருணமு மைவகைக் குலனு
மாற்றி மாந்தர்க் கறிவுற வகுத்தனை
யைந்நிற நறுமலர் முன்னுற வேந்தி
நாற்பெரும் படையொடு மும்முறை வலங்கொண்
டிருகையுங் கூப்பி யொருமையின் வணங்கி
யரசர் நெருக்குறூஉ முரசுமுழங்கு முற்றத்
திருநிதிப் பிறங்கலொ டிமையவர்[1] சொரிதலின்
முருகயர் வுயிர்க்கு மும்மலர் மாரியை
நால்வகை யனந்தமு நயந்தனை தேவரி
னைவகை விழவு மையற வெய்தினை
யாறுபுரி நிலையுந் தேறினர்க் கியம்பினை
யெழுநயம் விரித்த திருமறு மார்பினை
யறுபொரு ளறைந்தனை யைம்பத மருளினை
நான்குநின் முகமே மூன்றுநின் கண்ணே
யிரண்டுநின் கவரி யொன்றுநின் னசோகே
யொருதன்மையை யிருதிறத்தினை

பா. வே. 1. செறிதலின்

முக்குணத்தினை நால்வகையினை
யைம்பதத்தினை யறுபிறவியை
யேழுகற்றிய மாதவத்தினை
யரிமருவிய மணியணையினை
வளர்கதிரொளி மண்டலத்தினை
அதனால்,
மாகெழு நீழற் கேவலந் தோற்றிய
வாதியங் குரிசினிற் பரவுதுந்
தீதறு சிவகதி சேர்கயா மெனவே''[1]

## படவடிவமைப்புகள்:

எழுகூற்றிருக்கையின் கவிநயத்தை அனைவரும் சுவைக்கும் வகையிலும், அதன் மேன்மையை எடுத்துக் காட்டும் வகையிலும் இவற்றிற்கான படவடிவமைப்புகள் கோயில்களில் அமைக்கப்பட்டுள்ளன, மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் நக்கீரரின் எழுகூற்றிருக்கையும் கும்பகோணம் சாரங்கபாணி கோயிலில் திருமங்கையாழ்வாரின் எழுகூற்றிருக்கையும், திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயிலிலும், சுவாமிமலை சுவாமிநாத சுவாமி கோயிலிலும் அருணகிரிநாதரின் எழுகூற்றிருக்கையும் தேர்வடிவில் பளிங்குக் கல்லில் செய்து அமைக்கப்பட்டுள்ளன.

## இரதபந்தம் - எழுகூற்றிருக்கை வேறுபாடு

எழுகூற்றிருக்கை என்பதை இரதபந்தமாகப் பாடுவது மரபு. அதாவது, எழுகூற்றிருக்கைப் பாடலை இரதம் போன்ற அமைப்பில் மேல் கீழ் தட்டுகளில் அமையுமாறு பாடுவர். ஆயினும், இரத பந்தத்திற்கும் இதற்கும் பெரும் வேறுபாடு உள்ளதைக் காணலாம்.

இந்த பந்தத்தில் பாடலின் முதல் எழுத்து தேரின் கீழ்ப்பகுதியின் சக்கரங்களிலிருந்து தொடங்கி ஒவ்வொரு தட்டிலுமுள்ள கட்டங்களில் மேலேறிப்போய், உச்சியிலுள்ள முதல் அறையிலிருந்து நான்காவது அடியின் முதல் எழுத்துத்தொடங்கி முறையே கீழ் இறங்கி வந்து முடிவதாகும். ஆனால் எழுகூற்றிருக்கை சொற்களின் அடிப்படையிலும் எண்ணிக்கையின் அடிப்படையிலும்

---

1. திருப்பாமாலை. யாப்பருங்கலவிருத்தி. மே.பா. பக். 535 536

ஒவ்வொரு அறையில் பொருத்தப் பாடுவது. இரத பந்தந்தில் பாடலிலுள்ள ஒரே எழுத்துக்கள் படத்தில் ஒன்றற்கொன்று ஒத்து குறையும். எழுகூற்றிருக்கையில் அவ்வாறு எழுத்துக்கள் குறைவதில்லை. இரத பந்தத்தில் மேல் பாதி வரை ஒரு பாடலும், கீழ்ப் பாதியில் மற்றொரு பாடலும் ஆகவும் பாடப்பெறும். சிலவற்றில், தேரின் நடுவிலுள்ள தூண்களிலும் பாடலின் எழுத்துக்கள் தொடர்ந்து அமையுமாறும் பாடப்படும். இவ்வமைப்புக்கள் எழுகூற்றிருக்கையில் காண இயலவில்லை.

எனவே, இவற்றினிடையே முழு வடிவ ஒப்புமை இருந்தாலும் எழுத்து, சொல், அறைகளின் எண்ணிக்கை இவற்றில் சில வேறுபாடுகள் அமையக் காணலாம்.

## வேறு வகைகள்

இவ் எழு கூற்றிருக்கையை அடிப்படையாகக் கொண்டு நாற்கூற்றிருக்கை, எண்கூற்றிருக்கை, ஒன்பது கூற்றிருக்கை, ஒருபது கூற்றிருக்கை போன்றவற்றை முறையே பாம்பன் சுவாமிகள், தண்டபாணி சுவாமிகள் போன்றோர் பாடியிருப்பதை அறியலாம்.

# 6. காதை கரபபு

யாதேனும் ஒரு செய்யுளுக்குரிய எழுத்துக்களெல்லாம் தேடி எடுக்கத் தக்கனவாக அமைய வேறோர் செய்யுளையியற்றி, அதன் முதற் செய்யுளை மறைத்து வைப்பது காதை கரப்பாகும்.

''காதை கரப்பது காதை கரப்பே''[1]

என்பது மாறனலங்காரம்,

காதை-கவி; கரப்பு-மறைத்தல்)

(எ-டு) (நேரிசை வெண்பா

''அகலல்குற் தேரே யதர மமுதம்
பகர்தற் கரிதிடையும் பார்க்கின் - முகமதிய
முத்தென்ன லாமுறுவன் மாதர் முழுநீல
மைத்தடங்கண் வெவ்வேறு வாள்''[2]

(இ-ள்) அகல் அல்குல் தேரே - அகன்ற அல்குல் தேராகும்
அதரம் அமுதம் - வாயிதழ் அமுதமாகும்
இடையும் பகர்தற்கு அரிது - இடையும் உவமை சொல்லு தற்கரியது.

பார்க்கின் - ஆராய்ந்து பார்க்குமிடத்து,
முகம் மதியம் - முகம் முழு மதியாகும்.
முறுவல் முத்து என்னலாம் - புன்னகை முத்தென்று கூற லாம்.

---

1. மாறன். 72.
2. தண்டி. மேற்கோள் பா.

மாதர் முழுநீலம் மைத்தடங்கண் - விருப்பத்தை
யுண்டாக்கும் பெரிய நீலமலர் போலும் மையுண்ட
விரிந்த கண்கள்,
வெவ்வேறு வாள்-தனித்தனி வாளாயுதங்களாகும்.

இச்செய்யுள், பாங்கற்குத் தலைவன் தலைவியின் இயல் கூறியது.

## கருத்துரை

நண்பனே! நான் கண்ட மாதருடைய உருவத்தன்மை கேட்பாயாக. அல்குலானது தேரினது தட்டாயும், வாயிதழானது அமுதமாயும், இடையானது சொல்லுதற்கு அரிதாயும், முகமானது மதியமாயும், முறுவலானது முத்தமாயும், மைத்தடங்கண்ணானது நீலப்பூவாயும், வேறுபட வைத்த வாளாயு மிருக்கும்.

இச்செய்யுளில்,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.'[1]

என்னும் குறளிலுள்ள எழுத்துக்களெல்லாம் ஆங்காங்கு வருமாறு அமைந்து அக்குறட்கவி மறைந்து கிடப்பதைக் காணலாம்.

1. திருக்குறள். 1

# 7 கரந்துறைப் பாட்டு

ஒரு செய்யுள் முடிய எழுதி, அதனை ஈற்று நின்று மொழிக்கு முதலாயின எழுத்துத் தொடங்கி ஒன்று இடையிட்டு எழுத்துக் கொள்ள மற்றொரு பாட்டு வரப் பாடுவது கரந்துறைப்

கரத்தல் - மறைத்தல். உறைதல் - இருத்தல். ஒரு பாட்டினுள் ஒரு பாட்டு மறைந்திருத்தல்.
பாட்டாகும்.

> "முதலொரு செய்யுண் முடித்தத னிற்றிற்
> பதமத னிறுதியிற் பயிலெழுத் துத்தொடுத்
> திடையிடை யிட்டெதி ரேறாய் முதலய
> லடைதரப் பிறிதொரு செய்யுள் கரந்தங்
> குறைவது கரந்துறை செய்யுளென் றுரைபெறும்'.[1]

என்பது மாறனலங்காரம்.

(எ.டு) (நிலை மண்டில ஆசிரியப்பா)

> "ஒது மாசா னுற்ற னல்லணி
> சீருய ராஜிசித் தசனாம் ராகூ
> வமுதுண் டேசகம் வான மதியொத்
> தரசிவ னித்ய விறலா னாகு
> வாக்கேழ் பூமி மாதவந் தமுதே"[2]

(இ-ள்)

ஓதும் - கற்பிக்கும்
ஆசான் - குருவானவன்

---

1. மாறன். 288
2. பி. வி. அப்துல்கபூர், சித்திரகவி மாலை. பா. 26.

உற்ற - பொருந்திய

நல்அணி - நல்ல அழகானது.

சீருயர் - கீர்த்தி உயரப் பெற்ற.

ஆதி சித்தசனாம்-முதல் மன்மதனாம் (சிவபிரான்நெற்றி விழியெரிபாயு முன் உள்ள மன்மதன்)

ராகம் – இராகமாகிய

அமுதுண்டே - அமிர்தத்தையுண்டு

சகம் - உலகத்தார்.

வானமதியொத்த - ஆகாயத்திலுள்ள பூரணச்சந்திரனை யொத்த.

அரசு இவண் - அரசனைப் போன்ற தலைவன்.

ஏழ் பூமி - ஏழு உலகங்களுக்கும்.

மாதவத் தமுது - பெரிய தவஞ்செய்து பெற்ற அமுதம் போன்றது.

வாக்கு - தலைவனுடைய மொழியானது.

விறலானாக - வலிமையுள்ளவனாகுக(எனக் கூறப்பெற்ற வன்)

யாரெனின் - சத்தியசீலன் சாதுத்தன்மை பெற்ற வனாகிய முத்தமிழ்க் கலாவித்வ ரத்தினம் சண்முகம் என்பதாம்.

மேலேயுள்ள செய்யுளில் - ஈற்றயலெழுத்தாகிய- மு-முதலாக ஒரு எழுத்து விட்டு ஒரு எழுத்தாக மேலே வாசித்தால் பின்வரும் குறள் வெண்பா வரக் காணலாம்.

(குறள் வெண்பா)

முத்தமிழ்க்க லாவித்வ ரத்தினம் சண்முகம்
சத்திய சீலனற் சாது.

குறிப்பு:

காதை - சொல், கவி என இரு பொருள்பட வருவதால் தண்டியலங்காரம், இலக்கண விளக்கம், முத்து வீரியம் போன்ற நூல்கள் காதை கரப்பையும் கரந்துறைச் செய்யுளையும் மாற்றி விளக்குவதைக் காணலாம்

"யாப்பிறு மொழிமுத லக்கரந் தொடங்கி
யொவ்வோ ரெழுத்திடை யொழித்து வாசிக்க
வேறொரு செய்யுள் விளைப்பது காதை
கரப்பா மென்மனார் கற்றுணர்ந் தோரே"[1]

என ஆ. காதை கரப்பையும்,

"ஓர்பாவினிலிருந் தோர்பாக் குரியன
வக்கரம் பொருக்கிக் கொளலா கும்படி
பாடல் கரந்துறைப் பாட்டென மொழிப"[2]

எனக் கரந்துறைப் பாட்டையும் முத்து வீரியம் விளக்குகிறது.

"...ஓர் கவிக்கோர்கவி சொல்லின்
அழுந்தாமல் எழுத்தெடுத்தல் கரந்துறையும் செய்யுள்"[3]

எனக் கரந்துறைச் செய்யுளையும்,

"...பாட்டு ஒன்று இறுதி
மேலாய்ஒன் றிடைவிடவே றாங் காதை கரப்பே"[4]

எனக் காதை கரப்பையும் சுவாமிநாதம் விளக்குகிறது.

இங்கு, யாப்பருங்கலம், வீரசோழியம், மாறனலங்காரம் இவை கூறும் காதை கரப்பின் இலக்கணம் கரந்துறைப் பாட்டின் இலக்கணமாகவும், கரந்துறைப்பாட்டின் இலக்கணம் இங்குக் காதை கரப்பின் இலக்கணமாகவும் மாறியிருப்பது குறிப்பிடத் தக்கது.

இரண்டு பெயர்களும் ஓரளவு பொருள் ஒன்றாகக் கொண் டிருக்க, கருத்தை மட்டும் இந்நூலாசிரியர்கள் வெவ்வேறாகக் கொண்டிருந்தனர் எனலாம்.

---

1. முத்துவி. சொ,
2. ,, ,,
3. சுவாமி. 197.
4. ,, ,,

# 8. தூசங்கொளல்

ஒருவன் ஒரு வெண்பாச் சொன்னால், அதன் ஈற்றெழுத்தே ஈறாக, அதன் முதல் எழுத்தே முதலாக மற்றொரு வெண்பா ஈற்றினின்று மேற்பாடுவது தூசங்கொளல் என யாப்பருங்கலம் இயம்புகிறது. இது புலவனின் யாப்பறி புலமையை அடிப்படையாகக் கொண்டது எனலாம்.

# 9. வாவனாற்றி

வாவனாற்றி என்பது, ஓர் எழுத்துக் கொடுத்தால், அது முதலாக ஈற்றடி பாடி; பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால் எருத்தடி பாடி; மற்றோர் எழுத்துக் கொடுத்தால், இரண்டாமடி பாடி; பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால், முதலடி பாடிப் பொருள் முடிய எதுகை வழுவாமற் பாடுவது வாவனாற்றியாகும்.

குறிப்பு

தூசங்கொளல், வாவனாற்றி என்னும் இரு வகைகளை யாப்பருங்கலம் மட்டும் சித்திரகவிகள் என விளக்குகிறது மற்ற இலக்கண நூல்களில் இவை விளக்கப்படவில்லை. இவையிரண்டும் புலவனின் திறனறியடிப்படையில் எழுந்தவை எனலாம் மேலும், அவதானக் கலையில் இவ்வாறு நிகழ்த்தச் சொல்லிக் கேட்பதை இன்றும் காணலாம்.

# 10. கூட சதுர்த்தம்

நாலடியால் ஆன ஒரு செய்யுளின் நாலாம் பாதம் ஏனைய மூன்று பாதங்களையு மேனின்று கீழிழிந்தும் கீழ் நின்று மேலேறு வதுமாக எழுதி முடித்த வரி மூன்றினிடை வரியின் மறைந்து நிற்பது கூட சதுர்த்தம் எனப்படும்.

"பாடலி னாலாம் பதம்பொறி வரியிடைக்
கூடமுற் றதுவே கூட சதுர்த்தம்"[1]

என்பது மாறனலங்காரம்.

"......பினடி; எழுத்துஏனை யடியின்
விழுத்தடங்கள் கூடச்சதுக்கம்"[2]

என்பது சுவாமிநாதம்

(எ.டு) (சந்த விருத்தம்)

"போதாவே மாதாகா லாமாயூ ராநேசா
யோதாதி யேவாவே கோவேபூ பாலாவா
நாதாவே சூதேதே காவாயே தேவாவா
தாதாமா நேதாவா வேலாதா தேவாவா."[3]

(இ-ள்) போதாவே - ஞானவானே
மாதா கால் ஆ - உமா தேவியின் கான் முளையானவனே
மயூரா - மயில் ஊர்பவனே
நேசா - அன்புடையவனே
ஓது ஆதியே - சொல்லும் முதல்வனே
வாவே - காக்க வருவாயே

---

1. மாறன். 293
2. சுவாமி. 197
3. கந்தன் சித்திரபந்தன மாலை. பா. 42

கோவே - தேவனே
பூபாலா - பூமியைக் காப்பவனே
நாதாவே - நாதனே
சூதேதே - காப்பதில் என்ன சூது
காவாயே - காப்பாற்றுவாயே
தேவா - தெய்வமே
வா - வருவாய்
தாதா - அருள் வள்ளலே
மாநே - பெரிய அன்பை
தா - கொடு
வா - வருவாய். வேலா - வேலனே
தாதே - கிருபையைக் கொடுக்க
வருவாய் - வருவாயாக

நான்காம் அடிக்கு விசேட உரை:-

தா - அருளைக் கொடு.
தாமா - குன்று தோறாடி
நேதா - அன்பைக் கொடு என்றுமாம்

(து.கு) 2/37, 5/38, 8/39, 11/40, 14/41, 17/42, 20/43, 23/44, 26/45, 29/46, 32/47, 35/48 பொருந்தி 48 எழுத்துக்களில் முடிவது.

## வேறு வகை:

கூட சதுக்கம் என்பது, ஈற்றடி எழுத்துக்கள் ஏனைய மூன்றடி யுள்ளும் கரந்து நிற்கப் பாடுவது எனவும் தண்டியலங்காரம் முதலான நூல்கள் விளங்குகின்றன.

(கட்டளைக் கலித்துறை)

(எ.டு)

"புகைத்தகைச் சொற்படைக் கைக்கதக் கட்பிறைப் பற்கறுத்த
பகைத்திறச் சொற்கெடச் செற்றகச் சிப்பதித்துர்க்கை பொற்புத்
தகைத்ததித் தித்ததுத் தத்தசொற் றத்தைப்பத் தித்திறத்தே
திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற் பற்றுக் கெடக்கற்பதே"[1]

(இ-ள்) புகை தகை சொல் - புகையும் நெருப்பின் தன்மையை யுடைய சொற்களையும்
படைகை - ஆயுதங்களைப் பற்றிய கைகளையும்
கதம் கண் - கோபம் பொருந்திய கண்களையும்

1. தண்டி. மேற்: பா

பிறைபல் - பிறைத்திங்கள் போலும் வளைந்த வக்கிர தந்தங்களையும்

கறுத்த - கருநிறத்தையுமுடைய

பகை திறம் - பகைவராகிய அரசு சாதியென்னும்

சொல்கெட - பேரும் கெட்டழிய

செற்ற - தொலைத்த

கச்சி பதி துர்க்கை - காஞ்சீபுரத்திற் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் துர்க்கா தேவியாகிய

பொற்பு தகைத்த - அழகு தங்கிய

தித்தித்த - இனிமை வாய்ந்த

துத்தத்த - யாழின் இசை போலும்

சொல் - சொல்லையுடைய

தத்தை - கிளி போன்றவளிடத்து

பத்தி திறத்தே திகைத்த சித்தத்தை - பக்தி செய்யும் திறத்தில் மயக்கமடைந்து தடுமாறிய உள்ளத்தை

துடைத்த பின் - மயக்க நீங்கிய பிறகு

பற்று கெட கற்பது - அகங்கார மமகாரங்களாகிய இரு வகைப் பற்றுங் கெட்டு ஞானத்தைப் பெறுவது உண்டாகும்.

'துர்க்கையாகிய தத்தையின் பத்தித் திறத்தே' எனக் கூட்டுக.

அகங்காரம் - யான் என்னும் பற்று.

மமகாரம் - எனதென்னும் பற்று.

**கருத்துரை:**

நெருப்பின் தன்மையையுடைய சொற்களையும், ஆயுதங் களோடு கூடிய கைகளையும், வெகுளியோடு கூடிய பார்வையை யும், பிறைபோன்ற கோரப் பற்களையும் கரிய நிறைத்தையு முடைய பகைஞராகிய அவுணசாதி யென்னும் வார்த்தை மாளச் செறுத்த காஞ்சீபுரப் பெரும் பதியிலுள்ள கொற்றவை யழகு தங்கிய இன்பந் தராநின்ற யாழினிசை போன்ற சொல்லையுடைய கிள்ளையை யொப்பாளிடத்து அன்பு செய்யாது அறிவழிந்த உள்ளத்தை நீக்கிய காலத்து, இருபற்றும் கெடுதற் கேதுவாகிய ஞானத்தை அறிவது.

இச்செய்யுளில் முதல் மூன்றடிகளிலும் ஆராயின் ஈற்றடி எழுத்துக்கள் காணப்படும். இங்ஙனம் ஓரடியின் எழுத்துக்கள் மற்றையடிகளில் மறைந்து நிற்றலால், இது கூட சதுக்கமெனப் பட்டது. கூடம் - மறைவு, சதுக்கம் - நான்கடிக் கூட்டம்: சதுர்த்தம் - நான்காவது. இது செய்யுளை யுணர்த்தும்.

# 11. கோமூத்திரி

நான்கடிப் பாடலை, இரண்டு அடியாக எழுதி, மேலும் கீழுமாக ஓரெழுத்து இடையிட்டுப் படிக்க அப்பாடலே ஆக அமைப்பது கோமூத்திரி ஆகும். கோ - பசு. மூத்திரம் - சிறுநீர்

பசு மாடு நடந்துகொண்டே நீர் விடும்போது அந்நீர் ஒழுகிய தாரையானது இவ்வாறே மேலும் கீழும் நெளிந்த வடிவமாய் இருக்கும்; அது பற்றியே இதற்குக் 'கோமூத்திரி' எனப் பெயர் ஏற்பட்டுள்ளது.

> 'கோமூத் திரநடை பெறல்கோ மூத்திரி'[1]

என்பது மாறனலங்காரம்

> 'நான்கடியை யீரடியாய் நண்ணிமா றிப்படித்த
> றான்காண்கோ மூத்திரி...'[2]

என்பது பிரபந்தத் திரட்டு.

> ''வரிகள் இரண் டிரண்டாய்மேல் கீழ்இடை ஒன் றகற்றி
> வாசிப்பநேர் சொல்பாட் டொத்தல் கோ மூத்திரி''[3]

என்பது சுவாமிநாதம்:

(எ.டு) (வஞ்சி விருத்தம்)

> விண்மணி நாடக வித்தகனே
> ஒண்முக மேதான் தண்மதியே
> வண்பணி தேடக விரதமனே
> சண்முகத் தாதா தருமணியே[4]

---

1. மாறன். 294
2. பிரபந்தத்திரட்டு. 1. திரட்டியல் 56
3. சுவாமி 196
4. பி.வி. அப்துல் கபூர், சித்திர கவி மாலை 20 கோமூத்திரீகம்

## கோமூத்திரி



(இ-ள்) விண்ணில் உலவும் இரவிபோன்று, நாடகத்திற்கு உழைப்பென்னும் ஒளி பரப்பிடும் வித்தாக உள்ளவன். ஒள்ளிய அவனுடைய முகமானது குளிர்ந்த சந்திரன் போன்றது. உலகில் வளமையான பெருந்தொண்டு எதுவென்று நாடொறும் தேடிச் செய்யும் மனத்தைப் பெற்றவன், யாரெனில் கற்பகம், சிந்தாமணி யைப் போலக் கொடுக்கும் தாதா. திரு. சண்முகம் தான்—என்பதாம்.

மேற்கண்ட நான்கடிப் பாட லை இரண்டு அடியாக அமைத்து மேலும் கீழுமாக ஒரெழுத்து இடையிட்டு முதலிலிருந்து படிக்க அப்பாடலே மீண்டும் அமையும்.

கோமூத்திரி, கோமூத்திரிகம், கோமூத்திரிகாபந்தனம் என அழைக்கப்படும் இவ்வகை, திருஞான சம்பந்தர் தேவாரத்திலேயே மூல இலக்கியமாக வழங்கப்படுகின்றது. இல்வகைக்கு 'மாவின் பாச்சல்' எனப் பெயரிட்டுள்ளமை இவண் கருதத்தக்கது.

இலக்கண நூல்கள் இவ்வகையை, எழுத்துக்கள் ஒன்று விட்டு ஒன்று சேர்த்துப் படிக்க அதே பாடலாகும் எனக் கூற, இப்பதிகத் தில் இவ்வாறு காணப்படவில்லை. மாறாக, முதற் பாட்டில் சொல்லப்பட்ட பெயர்கள் ஒரு வரிசைப்படாது பின்னுள்ள பாடல் களில் வர, ஒவ்வொரு பாட்டிலும் இறுதியாகக் கூறப்பட்ட தலம் அடுத்த பாட்டில் முதலாவதாக வரும்படி பாடப்பட்டுள்ளன.

சீகாழித் தலம் பற்றிய இப்பதிகத்தில் காழித் தலத்தின் பன்னிரு திருப்பெயர்களும் வருகின்றன. ஒரு பாட்டின் இறுதியிற் சொல்லிய பெயர் அடுத்த பாட்டில் முதலாவதாக வருகின்றது. ஆனால் முந்திய பாட்டில் சொல்லிய வரிசை ஏனைய பாடல் களில் பற்றியும் பற்றாதும் வருகின்றது. இவ்வாறு அமைந்துள்ள பன்னிரு பாடல்கள் அடங்கிய இப்பதிகம் 'திருக்கோமூத்திரி அந்தாதி'[1] என்றே வழங்கப் படுவதைப் பின்வருமாறு காணலாம்.

---

1. திருஞானசம்பந்தர் தேவாரம். 74. திருப்பிரமபுரம் பதிகம் : 210.

# திருக்கோமூத்திரி அந்தாதி

**பண் — காந்தாரம்**

**திருச்சிற்றம்பலம்**

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்
குறைவிலாப் புகலி பூமேன்
மாமகளூர் வெங்குருநற் றோணிபுரம்
பூந்தராய் வாய்ந்த விஞ்சிச்
சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை
புகழ்ச்சண்பை காழி கொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர்
கழுமலநாங் கருது மூரே. 1

கருத்துடைய மறையவர்சேர் கழுமலமெய்த்
தோணிபுரங் கனக மாட
உருத்திகழ்வெங் குருப்புகலி யோங்குநரா
யுலகாருங் கொச்சை காழி
திருத்திகழுஞ் சிரபுரத்தே வேந்திரனூர்
செங்கமலத் தயனூர் தெய்வத்
தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பைசடை
முடியண்ண றங்கு மூரே. 2

ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை
யொளிமருவு காழி கொச்சை
கார்மலியும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த்
தோணிபுரங் கற்றோ ரேத்துஞ்
சீர்மருவு பூந்தராய் சிரபுரமெய்ப்
புறவமய னூர்பூங் கற்பத்
தார்மருவு மிந்திரனூர் புகலிவெங்
குருக்கங்கை தரித்தோ னூரே. 3

---

1. பூமேல் மாமகளூர் வெங்குரு - திருமகள் பரவும் ஊராகிய வெங்குரு, அவள் வாழும் ஊர் எனலுமாம், செல்வம் பற்றியது.
   இஞ்சி - மதில். சேமம் - காவல். காமனை - மன்மதனை. நுதல் - நெற்றி.
2. கனகம் - பொன். திரு - இலக்குமி, அழகு தரு - மரம், கற்பகம் முதலியவை.
3. ஊர்மதி - விண் ஊர்ந்து செல்லும் சந்திரன்.
   கதுவ - பற்ற. கற்பத்தார் - கற்பகப்பூமாலை.
   தரித்தோன் - தாங்கியவன்

தரித்தமறை யாளர்மிகு வெங்குருச்சிர்த்
தோணிபுரந் தரியா ரிஞ்சி
எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந்
தராய்புகலி யிமையோர் கோனூர்
தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சிர் திகழ்காழி
சண்பைசெழு மறைக ளெல்லாம்
விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோ
னூருலகில் விளங்கு மூரே. 4

விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை
வேணுபுர மேக மேய்க்கும்
இளங்கமுகம் பொழிற்றோணி புரங்காழி
யெழிற்புகலி புறவ மேரார்
வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச்
சிரபுரம்வன் னஞ்ச முண்டு
களங்கமலி களத்தவன்சிர்க் கழுமலங்கா
மன்னுடலங் காய்ந்தோ னூரே. ç

காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர்
கழுமலமாத் தோணி புரஞ்சிர்
ஏய்ந்தவெங் குருப்புகலி யிந்திரனூ
ரிருங்கமலத் தயனூ ரின்பம்
வாய்ந்தபுற வந்திகழுஞ் சிரபுரம்பூந்
தராய்கொச்சை காழி சண்பை
சேந்தனைமுன் பயந்துலகிற் றேவர்கடம்
பகை கெடுத்தோன் திகழு மூரே. 6

---

4. தரியார் - பகைவர். இஞ்சி - மும்மதில், திரிபுரம். இமையோர் கோன் - இந்திரன். விரை - மணம்.

5. மேகம் ஏய்க்கும் - மேகமண்டலத்தை ஒன்ற ஓங்கும். கமுகம் - பாக்கு மரம். எழில் - அழகு. ஏர் ஆர் வளம் - அழகு நிறைந்த வளமை. வல்நஞ்சம் - வலியவிடம். களங்கம் - குற்றம். களத்தவன் - (திருநீல) கண்டன். காமன் - மன்மதன். காய்ந்தோன் - காய விழித்தவன், கோபித்தவன்.

6. காய்ந்து - கோபித்து. காலனை - இயமனை. சேந்தனை - முருகப் பிரானை. பயந்து - பெற்று. பகை - சூரன்படை.

திகழ்மாட மலிசண்பை பூந்தராய்
பிரமனூர் காழி தேசார்
மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம்
வயங்கொச்சை புறவம் விண்ணோர்
புகழ்புகலி கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங்
குருவெம்போர் மகிடற் செற்று
நிகழ்நீலி நின்மலன்றன் னடியிணைகள்
பணிந்துலகி னின்ற வூரே. 7

நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி
புரநிகழும் வேணு மன்றில்
ஒன்றுகழு மலங்கொச்சை யுயர்காழி
சண்பைவளர் புறவ மோடி
சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந்
தராய்புகலி தேவர் கோனூர்
வென்றிமலி பிரமபுரம் பூதங்க
டாங்காக்க மிக்க வூரே. 8

மிக்ககம லத்தயனூர் விளங்குபுற
வஞ்சண்பை காழி கொச்சை
தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம்
பூந்தராய் சிலம்பன் சேரூர்
மைக்கொள் பொழில் வேணுபுர மதிற்புகலி
வெங்குருவல் லரக்கன் றிண்டோள்
ஒக்கவிரு பதுமுடிக ளொருபதுமீ
டழித்துகந்த வெம்மா னூரே. 9

---

7. மலி - மலிந்த, மிக்க. தேசு - ஒளி
மகிடற்செற்று - மகிடா சுரனைக் கொன்று.
மகிடம் - எருமைக்கடா. நீலி - மாயோள், (துர்க்கை)
கறுப்பாயி.

8. மன்றில் - பொதியில், புரம் என்னும் பொருளது.
மன்றில் ஒன்று எனல் பொருந்துமேற் கொள்க.
மோடி - துர்க்கை
வென்றி - வெற்றி. பூதங்கள் தாங்கு ஆக்கம் மிக்க ஊர்.

9. தூ - தூய்மையுடைய. எல்லாவுயிர்க்கும் பற்றுக்கோடாகிய.
மை - மேகம், கருமையுமாம். பொழில் - சோலை.
அரக்கன் - இராவணன். ஈடு - வலிமை, பெருமையுமாம்.
எம்மான் - எம்பெருமான்.

எம்மான்சேர் வெண்குருச்சீர்ச் சிலம்பனூர்
கழுமலநற் புகலி யென்றும்
பொய்ம் மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந்
தரனூர்நற் றோணி புரம்போர்க்
கைம்மாவை யுரிசெய்தோன் காழியய
னூர்தராய் சண்பை காரின்
மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழலாய்
விளங்கியவெம் மிறைவ னூரே. 10

இறைவனமர் சண்பை யெழிற் புறவமய
னூரிமையோர்க் கதிபன் சேரூர்
குறைவில்புகழ்ப் புகலிவெங் குருத்தோணி
புரங்குணமார் பூந்த ராய்நீர்ச்
சிறைமலிநற் சிரபுரஞ்சீர்க் காழிவளர்
கொச்சைகழு மலந்தே சின்றிப்
பறிதலையோ டமண்கையர் சாக்கியர்கள்
பரிசறியா வம்மா னூரே. 11

அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங்
குருக்கொச்சை புறவ மஞ்சீர்
மெய்ம்மானத் தொண்புகலி மிகுகாழி
தோணிபுரந் தேவர் கோனூர்
அம்மான்மன் னுயர்சண்பை தராயயனூர்
வழிமுடக்கு மாவின் பாச்சல்
தம்மானொன் றியஞான சம்பந்தன்
றமிழ்கற்போர் தக்கோர் தாமே. 12

---

10. பொய்ம்மாண்பிலோர் - மெய்ப்புகழுடையோர்.
புரந்தரன் - இந்திரன். கைம்மா - துதிக்கையையுடைய யானை.
காரின் மெய்மால்-மேகம் போலும் திருமேனியையுடைய திருமால்.
பூமகன் - பிரமன். தழல் - தீ.

11. இறைவன் - சிவபிரான். அமர் - விரும்பியெழுந்தருளிய.
எழில் - அழகு. அதிபன் - இந்திரன். சிறை - அணை.
தேசு - ஒளி. கையர் - கீழோர். பரிசு - சிவமாம் பெற்றி, சிவன் இயல்பு.

12. மா - பெருமை. இலக்குமியுமாம்.
மானத்து - பெருமையுடைய. ஒள் - ஒளி.
அம்மால் - அழகிய திருமால் (கிருட்டிணமூர்த்தி), சிவபிரானுமாம். வழிமுடக்கும் ஆவின் பாச்சல் - கோமூத்திரி என்னுஞ் சித்திர பந்தத்தினியல்பு கூறப்பட்டது.
தம்மான் - தம்பிரான். தமிழ் - சைவமும் தமிழும் என்ற தொடர்க்கண் உள்ள தமிழ் மறை.

# 12. ஓரெழுத்துப் பாட்டு

செய்யுள் முழுவதும் ஒரே எழுத்தாலான பாட்டு ஓரெழுத்துப் பாட்டு எனப்படும். யாப்பருங்கலம் இதை ஒரு சித்திரக்கவி வகையாகவே கூறுகின்றது. தண்டியலங்காரம் போன்றவை இதை 'ஒருவருக்கப்பாட்டு' என மடக்கணியாகக் கூறுவதை அறியலாம்

(எ-டு) 1. (நேரிசைச் சிந்தியல் வெண்பா)

"காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்க—கைக்கைக்குக்
காக்கைக்குக் கைக்கைக்கா கா"[1]

(இ-ள்) காக்கைக்குப் பகை கோட்டான்; கோட்டானுக்குப் பகை காக்கை. அரசன் உலகத்தைக் காப்பாற்றுவதற்கு மீனை நோக்கிக் காத்திருக்கும் கொக்கைப் போன்றிருந்து, காலம் வாய்த்த போது செயலைச் செய்து முடிக்க வேண்டும். அவ்வாறில்லாமல் போயின் பகைவரை எதிர்த்து நாட்டைக் காப்பதற்கு மிகுந்த ஆற்றலுடைய தலைவனுக்கும் ஆகாது.

காலம், பகை யென்னுஞ் சொற்கள் எஞ்சி நின்றன.

(எ-டு) 2. (இன்னிசை வெண்பா)

"தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி
துத்தித் துதைதி துதைத்ததா தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது"[2]

(இ-ள்) வண்டே, நீ சுற்றிச் சென்று மகரந்தத்தை ஊதுகின்றாய். மகரந்தத்தை ஊதிய பின்னர்ப் பாய்ந்து செல்கின்றாய். மலர்களை அணுகுகின்றாய். மிகமிக இனிமையான மலர் எது? இனிமையுடையது எந்த மலரினது மகரந்தம்? அழகான மலர் இதழ் எது? எமக்குச் சொல்வாயாக.

இது, தலைவி யவயவங்களை வியந்த தலைவன் தலைவி கேட்ப வண்டினை நோக்கிக் கூறியது.

---

1, 2. தண்டி. 96மேற்

# 13. ஓரினப் பாட்டு

தமிழில் எழுத்தினங்கள் மூவகைப்படும். அவை வல்லினம் மெல்லினம், இடையினம் என்பன. ஓரினப் பாட்டு என்பது இன வெழுத்துப் பாட்டாகும். ஒரு பாடல் முழுவதும் ஒரே இன எழுத்துக்களை அமைத்துப் பாடுவது இனவெழுத்துப் பாட்டு எனப்படும்.

(எ-டு)

(குறள் வெண்பா)

''தெறுக தெறுக தெறுபகை தெற்றாற்
பெறுக பெறுக பிறப்பு''[1]

இது வல்லினத்தால் வந்த பாட்டு.

(நேரிசை வெண்பா)

''நன்மனமும் நாணமும் முன்னினும் நான்முன்னேன்
நின்மனமும் நின்னானு மென்னென்னோ—நன்மனமும்
நண்ணுமே நன்மாமை நண்ணுமா மெண்ணுமினோ
மண்ணின்மேன் மானன்ன மா''[2]

இது மெல்லினத்தால் வந்த பாட்டு.

(குறள் வெண்பா)

'வயலுழுவார் வாழ்வாருள் வாழ்வா ரயலுழுவார்
வாழ்வாருள் வாழா தவர்''[3]

இது இடையினத்தால் வந்த பாட்டு

இதையே வல்லினப் பாட்டு, மெல்லினப்பாட்டு, இடையினப் பாட்டு என மூவகையாக மாறனலங்காரம் கூறுவதையும் காண லாம்

---

1,2.3. யா. வி.மேற்.

## 14. பாத மயக்கு

மூவர் மூன்று ஆசிரிய அடி சொன்னால் தான் ஓரடி பாடிக் கிரியை கொளுத்துவது பாத மயக்கு ஆகும்.

(எ-டு)

(நிலை மண்டில ஆசிரியப்பா)

''ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த (அகநானூறு 8:1)
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான் (முல்லைப்பாட்டு 37)
நன்னாட் பூத்த பொன்னிணர் வேங்கை (அகநானூறு 85:20)
மலர்கொய லுறுவதென் மனமவள் மாட்டே''

இது பழவடி மூன்றனோடு தாம் ஓர் அடி பாடிப் பாக்கனார் பாடிய பாத மயக்கு

## 15. பாவின் புணர்ப்பு

நால்வர் நான்கு பாவிற் கட்டுரை சொன்னால் அவையே அடிக்கு முதலாகப் பாடிப் பொருள் முடிப்பது.

(எ-டு)

(நேரிசை வெண்பா)

''மலைமிசை எழுந்த மலர்தலை வேங்கைப்
பொத்தகத் திருந்த நெய்த்தலைத் தீந்தேன்
கண்டகம் புக்க செங்கண் மறவன்
யாழி னின்னிசை மூழ்க
வீடுகெழு பொதியில் நாடுகிழ வோனே''

இது பாவுக்கு ஒப்பப் பாடியது.

பாத மயக்கு, பாவின் புணர்ப்பு என்னும் இவ்விரு வகைகளை யாப்பருங்கலம் மட்டுமே கூறுகிறது. மற்ற நூல்கள் விளக்கவில்லை. இவையிரண்டும் புலவனின் திறனறியடிப் படையின என்பதும் குறிப்பிடத்தக்கன.

# 16. ஒற்றுப் பெயர்த்தல்

ஒற்றுப் பெயர்த்தல் என்பது, ஒரு மொழியைப் பாட்டின் இறுதிக் கண் வைத்துப் பிறிதொரு பொருள் பயக்கப் பாடுவது என யாப்பருங்கலம் கூறுகின்றது.

ஒற்று-மெய்யெழுத்து. பெயர்த்தல்-வேறுபடுத்தல்.

(எ-டு)

(நேரிசை வெண்பா)

''என்னைநீ காயல் எரிகதிரோய்! யான்பயந்த
பொன்னங் கழலான்பின் போகிய—மின்னைக்
கருதலரே யாகிக் கருணனைக்கொன் றிட்ட
பருதிவேற் பாண்டவரைக் காய்''[1]

ஒரு மொழியுந் தொடர் மொழியுமாய் நின்று, கருதிய பொருளன்றி வேறு பொருளும் பயக்கத் தக்கதாகப் பாடல் பாடுவது ஒற்றுப் பெயர்த்தலாகும்.

ஒரு சொல்லில் உள்ள ஒற்றெழுத்தினை எடுத்துவிட வேறு பொருள் தருவதும்; ஒரு செய்யுளில் பொருந்தி நிற்கும் வேறு பொருளைப் பெயர்த்து எடுப்பதும் ஒற்றுப் பெயர்த்தலாம்.

''ஒற்றினைப் பிரிக்கமற் றொருபொருள் உணர்த்தல்
ஒற்றுப் பெயர்த்தல் என்றுரை உணர்த்தும்''[2]

என்பது மாறனலங்காரம்.

---

1. யா. வி. மேற்.
2. மாறன். 299

"ஒருமொழி தொடர்மொழி யாகஒண் பொருள்படு
மவற்றை அப்பொருள் தவிர மறுபொருள்
பெறச் சொலல் ஒற்றுப் பெயர்த்த லாகும்"[1]

என்பது முத்து வீரியம்.

"ஓதுயிர்மெய் மொழியின் ஒற்றுப் பெயர்க்குங்கால் பொருள்வேறு
உடையது ஒற்றுப் பெயர்த்தல்"[2]

என்பது சுவாமிநாதம்

(எ-டு)

"வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து
மண்குளிரச் சாயல் வளர்க்குமாந்—தண்கவிகைக்
கொங்கா ரலங்கலந பாயன் குளிர்பொழில்சூழ்
கங்கா புரமாளிகை"[3]

(இ·ள்) வண்மை புயலை கீழ்படுத்து - வளப்பம் பொருந்திய மேக மண்டலத்தைக் கீழாக்கி மேலோங்கி

வானம் தரு மலைந்து- விண்ணுலகத்துள்ள கற்பக மலர்களை உச்சிமீது சூடி,

மண் குளிர - மண்ணுலகம் குளிர்ச்சியடைய,

சாயல் வளர்க்கும் ஆம் - தன் உருவச் சாயை யாகிய நிழலைப் பெருக்கும்,

தண்மை கவிகை கொங்கு ஆர் அலங்கல் அநபாயன்— குளிர்ச்சி பொருந்திய குடையினையும் மதுநிறைந்த மலர் மாலையினையுமுடைய அநபாய சோழனது.

குளிர் பொழில் சூழ் கங்கா புரம் மாளிகை - கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள குளிர்ந்த சோலை சூழ்ந்த அரண்மனை.

## கருத்துரை

வளப்பத்தினையுடைய மேகங்கள் கீழாக மேலோங்கி வானகத்தின் கணுண்டாகிய கற்பகப் பூக்களை உசசி மீது உடைத்தாய், உலகெலாம் தன்னுருவச் சாயையாகிய நிழலைப் பெருக்கும் குளிர்ச்சி பொருந்திய குடையினையும், மது நிறைந்த மாலையையுமுடைய அநபாயனது கங்காபுரத்தின் மாளிகை.

---

1. மு. வீ. சொ. 24
2. சுவாமி. 198
3. தண்டி. மேற். பா.

## மற்றொரு பொருள்

வண்மை புயலை கீழ் படுத்து - வளவிய மேகத்தைப் பழிக்குந் தன்மையதாய்,

வானம் தரு மலைந்து -சுவர்க்கத்துள்ள கற்பக விருட்சங்களோடு - கொடைத் தொழிலில் மாறுகொண்டு,

மண் குளிர சாயல் வளர்க்கும் - மண்ணுலகிலுள்ளார் களிப்படைய மென்மைத் தன்மையைப் பெரிதும் உடையதாகும்.

தண்மை கவிகை கொங்கு ஆர் அலங்கல் அநபாயன் - குளிர்ந்த குடையையும் மணம் நிறைந்த ஆத்தி மலர் மாலையையும் உடைய அநபாய சோழனாகிய

கங்காபுரம் ஆளிகை - கங்கை கொண்ட சோழபுரத்தை ஆளும் மன்னனது கை.

## கருத்துரை

வளப்பத்தினையுடைய மேகத்தைப் பழிக்குந் தன்மையுடையதாய், வானகத்தினுண்டாகிய கற்பகத்தோடு பகைகொண்டு கொடுத்து உலகத்துள்ளாருடைய உள்ளங் குளிரும் வண்ணம் காவல் புரியுங் கங்காபுரத்தை யாளும் குளிர்ந்த குடையினையுடைய அநபாயனது கை.

இச்செய்யுளில், 'கங்காபுர மாளிகை' என்பது கங்காபுரத்திலுள்ள மாளிகை எனவும், கங்காபுரத்தினை ஆள்பவனுடைய கை எனவும் மகர ஒற்றுப் பெயர்ந்து ஒற்றுப்பெயர்த்தலாயிற்று.

## வேறு

இனி, ஒற்றுப் பெயர்த்தலுக்கு வேறு வகையிலும் விளக்கமளிக்கப்படுகிறது.

ஒற்றுப் பெயர்த்த லென்பது, ஒரு செய்யுளுக்கு உரை கூறி ஒரு அடிக்கு வேறு உரை கூறுவது.

ஒரு அடியிற் பத்துமரம் வரும்படியும், தேர், மருது, என்ற சொல் வரும்படியும் மனைவியின் ஊடலைக் காட்டியும் வெண்பாவாகப் பாடுவதே கவி,

இதனை

(நேரிசை வெண்பா)

''தேருடைத்தாய்க் கற்பாய்த் திணைமருதாய்த் திண்மரம்
ஓரடியுட் பத்துடன் ஒற்றுப்பேர்த்—தேருடைய
பண்பாவு தொல்சீர் மறமன்னர் தம்முன்னால்
வெண்பா உரைப்பான் கவி''

என்னும் யாப்பருங்கலம் மேற்கோள் பாடலும்,

''ஓரடியுட் பத்து மரமுடனொற் றுப்பெயர்த்துத்
தேர்மருவி யூடற் றிறம்புனைந்து—நீர்மை
மருதம் புணர்ந்ததுவும் வெண்பாவாய் வையும்
கருதப் பகர்வன் கவி''

என்னும் தண்டியலங்கார மேற்கோள் பாடலும்உணர்த்துகின்றன.

(எ-டு) 1

(நேரிசை வெண்பா)

பொற்புடைய மாதர் புலவாரோ பொய்ம்மருவாச்
சொற்பயிலும் பாண சுடர்மணித்தேர்—கற்புடைய
வஞ்சிநகர் சேரினற மாமருதா ரான்மகிழா
நஞ்சனைய நல்வயலூ ரற்கு''

(இ-ள்) பொய் மருவா சொல்பயிலும் பாண-பொய்யோடுகூடாத சொற்களைப் பலகாலும் சொல்லா நின்ற பாணனே!

சுடர் மணி தேர்-தலைவனது பிரகாசமான மணிகள் கட்டிய தேர்.

கற்பு உடைய வஞ்சி நகர் சேரின் அறமா-கற்பினையுடைய தலைவியின் அரண்மனையை அடைந்தால் அது தருமமாகுமா.

பொற்பு உடைய மாதர் புலவாரோ-அழகினையுடைய பரத்தையர் ஊடுதலைச் செய்யாரோ?

மருதாரான் மகிழா நஞ்சுஅனையம் நன்மைவயல்ஊரற்கு-மணம் பொருந்திய மாலையையும் நல்ல வயல்களையுடைய ஊரினையுமுடையானாகிய தலைவனுக்குக் களிப்பினைத் தராத விடம் போன்றுள்ளேம் அல்லேமோ யாங்கள்?

## கருத்துரை

பொய்யோடு கூடாத சொற்களைப் பலகாலுஞ் சொல்லா நின்ற பாணா! அவரது சுடர்மணித் தேர் தமது கற்புடைய

மனைவி மனையிலே சேருமாயிற் பொலிவினையுடைய பரத்தையர் முனியாரோ? தேனால் வண்டு மருவப்பட்ட தாரானின்புறுந் தகையமல்ல; நல்வயலூரனாகிய தலைவற்கு நாங்கள் நஞ்சோ டொவ்வோமோ தீண்டுமிடத்து.

இச்செய்யுளின் மூன்றாமடியில், வஞ்சி, நகர், சேர், இல், நற மா, மருது, ஆர், ஆல், மகிழ் என்னும் பத்து மரப் பெயர்கள் ஒற்றுப் பெயர்ந்து வந்தன.

(எ-டு) 2

(நேரிசை வெண்பா)

தீதிலா முத்தமிழ்தேர் சண்முகத்தின் தேர்பரத்தை
வீதிவழி செல்வதுகாண் மெய்த்தோழி-ஓதக்கேள்
மாமருதார் வாகைபுனை வேலான் மகிழ்வொடுவேய்
பூமனைவந் தாற்றாளைப் போடு.[1]

(இ-ள்) மா-பெருமையான
மரு-வாசனை பொருந்திய
தார் வாகை புனை-வெற்றிமாலையைத் தரித்த
வேலான்-வேலாயுதம் தாங்கிய நம் தலைவன்
மகிழ்வொடு-சந்தோஷத்தோடு
வேய்-வேயப்பெற்ற (அலங்கரிக்கப் பெற்ற)
பூமனை-அழகிய நமது அரண்மனைக்கு வந்தால்
தாளைப்போடு-(உள்ளே விடாமல்) தாழ்ப்பாளைப் போடு.

இது, 'குற்றமில்லாத முத்தமிழையும் தேர்ந்த, திரு. சண்முகத்தின் தேரானது பரத்தையர் வீதியில் செல்வதைப் பார் தோழி' என்று தோழிக்குத் தலைவி காட்டி, ஊடலோடு கூறியது.

இச்செய்யுளின் மூன்றாவது அடியில் பத்து மரங்களும் (மா, மருது, ஆர், (ஆத்தி), வாகை, புனை (புன்னை), வேல், ஆல், மகிழம், ஒடு (கடுக்காய் மரம்), வேய் (மூங்கில்) வந்துள்ளதை அறியலாம்.

---

1. பி. வி. அப்துல்கபூர், சித்திர கவிமாலை. பா. 33.

# 17. ஒரு பொருட்பாட்டு

ஒரு பொருட்பாட்டாவது, ஒன்றனையே வருணித்துப் பாடுவது என யாப்பருங்கலம் விளக்குகிறது. மற்ற இலக்கண நூல் களில் இதுபற்றிய விளக்கமேதும் கிடைக்கவில்லை. ஆயின்' ஒன்றனையே வருணித்துப் பாடுவதும் ஒரு சித்திரக்கவி வகை என அறியலாம்.

(எ-டு)

(நிலை மண்டில ஆசிரியப்பா)

''மனங்கனிந் தன்ன மண்மிசைத் தோன்றிப்
பனங்கனி நிறத்த பரூஉத்தாள் முழுமுதல்
நார்பொதி வயிற்றி னீர்பொதி மென்முளை
தந்துநிறுத் தன்ன தோற்றமொடு கவின்பெறத்
திரிந்துவிட் டன்ன திண்கெழு நுண்சுருள்
ஊழி நூழிலை யுயரிய வரைபுரை
கலிங்கம் மய்ப்ப [1]வாகிய நெகிழ்ந்து
வாளினங் கருக்கின் அவ்வயி றழுங்கச்
சூல்சுமந் தெழுந்த செம்மூக் கணிகுலை
மூங்கா மூக்கெனத் தோன்றியாங் கெய்தி
[2]அலரங் கோதை யாயிழை மகளிர்
பரிசர மேய்ப்பப் பலபோது பொதுளி
நாய்சிரித் தன்ன தோற்றமோ டுடும்பின்
தோலுரித் தன்ன பூழ்படு பட்டைக்
கிளிச்சிற கேய்க்கும் பாவையம் பசுங்காய்
இழுதி னன்ன இன்கனி ஏந்தி
வாழைதன் னகலிலை மறைக்கும் ஊரன்
முரண்கொள் யானை முத்துப்படை அழுங்க;
அரண்சொள் மாக்களிற் றோன்றும் நாடன்
அன்புதர வந்த என்புருகு பசலை
தணிமருந் தறியாள் அன்னை உருவுகிளர்
அந்தளி, ரென்னுமென் றடமென் றோளே''

---

(பா.வே.)

1. வாய. 2. அதிரலங்கன், ஆலரங்

# 18. சித்திரப்பா

சித்திரக்கவி வகைகளில் சித்திரப்பாவும் ஒன்று. இதை யாப்பருங்கலமும் வீரசோழியமும் மட்டுமே குறிப்பிடுகின்றன. மற்ற நூல்கள் விளக்கவில்லை. சித்திரப்பா என்பது, நான்கு கூடின எல்லாம் பத்தாகவும், மூன்று கூடின வெல்லாம் பதினைந் தாகவும், பிறவாற்றானும் எண் வழுவாது பாடுவது. இதனைச் சித்திரக்கா என்றும் கூறுவர்.

எ-டு)

(நேரிசை ஆசிரியப்பா)

''ஒருதிரட் பிண்டிப் பொன்னெயில் மூன்றின்
ஈறம் பயந்த நான்முக அண்ணல் (10)
மூவகை உலகிற்கும் ஒருபெருங் கடவுள்
நால்வகை யோனியுள் இருவினை கடிந்து (10)
முந்நெறி பயந்த செந்நெறி ஒருவன்
நால்வகை அளவையும் இருவகைப் பண்பும் (10)
ஒன்ற உரைத்த முக்குடைச் செல்வன்
ஈரடி பரவினர் என்ப
பேரா நானெறி பெறுகிற் போரே''[1] (10)

இது நான்கு புணர்ந்து கூடியவெல்லாம் பத்தாகிய சித்திரப்பா.

(நேரிசை வெண்பா)

''இருவரமாம் ஏழுநாள் ஆறமர்ந்தான் கோயில்
ஒருவனையே நாடிய போந்தேம்-ஒருவனும்
என்கையான் முக்கணான் நான்முகத்தான் ஒன்பானோ
டைந்தலைய நாகத் தவன்''[2]

இஃது இணைந்து மூன்று கூடினவெல்லாம் பதினைந்தாகிய சித்திரப்பா இதனை ஈசானன் திசை முதலாக எட்டுத் திசை மேலும் நிறுத்தி, நடுவே பின் ஐந்து நிறுத்தி விடுவது.

| 15 | 15 | 15 | |
|---|---|---|---|
| 2 | 7 | 6 | = 15 |
| 9 | 5 | 1 | = 15 |
| 4 | 3 | 8 | = 15 |

1, 2. யாப். வி. மேற். திருப்பாமாலை.

## 19. விசித்திரப்பா

சித்திரக்கவி வகைகளில் ஒன்றான விசித்திரப் பாவை யாப் பருங்கலம் மட்டுமே குறிப்பிடுகின்றது. அது, விசித்திரப்பாவின் விளக்கத்தையும், எழுத்து நிறுவுதற்கு இலக்கணத்தையும் பின் வருமாறு கூறக்காணலாம்.

விசித்திரப்பா என்பது, எங்கும் ஏழறையாகக் கீறி, மேலை ஒழுங்கினுள் மொழிக்கு முதலாயின எழுத்து ஒரு பொருள் பயக்க நிறுவி அவ்வெழுத்துக்களை ஒழுங்கும் கண்ணறையும் படாமே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாக வானும் ஒரு சீராகவானும் முற்றுப் பெறப் பாடுவது.

எழுத்து நிறுவுதற்கு இலக்கணம். ஒருவன் பாண்டவர் யானைக் கொம்பே புள்ளித்தாய்க் கண்ணன்றொடு திசையே எனக் கொள்க. நான்காவது முதலா நான்கிறுதியாக அதன் மூன்று முதலாக முடிவது எனவும் கொள்க. அமிதபதி கவி என வரும், பிறவும் அன்ன.

இதனை விசித்திரக்கா என்றும் கூறுவர்.

## 20. வினாவுத்தரம்

இதனை விகற்ப நடைய வினாவுத்தரம் என யாப்பருங்கலம் கூறுகிறது.

விகற்ப நடைய வினாவுத்தரமாவது, வினாவினார்க்கு வினாக் குறையாகிய ஒரு மொழியும் தொடர்மொழியும் புணர்ப்பது வினா-கேள்வி, உத்தரம்-மறுமொழி.

(எ-டு) (நேரிசை வெண்பா)

> ''பூமேலாள் ஆரென்பார்? பூம்போர்வை என்செய்யும்
> தீமேல் படின்? கொடுத்தார் கொள்வதெவன்?—ஆமே
> நலந்திகழும் செங்கை நயதீரன் எங்கோன்
> சிலம்பின் திருவேங் கடம்''[1]

இது தொடர்மொழி வினாவுத்தரம். பூமேலாள்திரு. தீமேல் படின்வேம். கொள்வது, கடம் இவற்றை இணைக்கத் திரு வேங்கடம் ஆம்.

''வினா வுத்தரம் என்பது வினவினதொரு சொற்றொடரைப் பிரித்து அப்பதந்தோறும் வினாயதற்கு உத்தரமாகப் பதப் பொருள் உரைத்துக் கடைக்கால் அவ்வினாயதற்கு உத்தரமான அச்சொற்றொடர் முழுவதும் ஒரு பொருளாக்கி உரைப்பது. அப்பதம் விரிக்குங்கால் செவ்வன் விரியாது அருமை தோன்ற விரித்துக் காட்டுவது'' எனத் தண்டியலங்காரம் இதனை விளக்கு கிறது.

> ''துதித்திடும் ஒருபொருள் தொடர்ச்சொலைப் பிரித்து
> மதிப்பட வினாய வகைக்கெதிர் மொழியாய்
> விதிப்பட உரைப்பது வினாஉத் தரமே''[2]

என்பது மாறனலங்காரம்.

---

1. யாப். வி. மேற்.பா.
2. மாறன். 280

''வினாவொடு விடையும் விரிந்து வருவது
வினாவுத் தரமென விளம்பப் படுமே''[1]

என்பது முத்து வீரியம்.

'அங்கு வினாச் சொற்றொடரைப்
பிரித்து வெவ்வேறு வினா
அதற்குவிடை பொருளாகச் சொலல்
வினாவிடையாம்'[2]

எனச் சுவாமிநாதம் இதனை 'வினா விடை' என்றே அழைக்கிறது

(எ-டு) (இன்னிசை வெண்பா)

''பூ மகள் யார்? போவானை யேவுவா னேதுரைக்கும்?
நாமம் பொருசரத்திற் கேதென்பர்? தாமழகின்
பேரென்? பிறைசூடும் பெம்மா னுவந்துறையுஞ்
சேர்வென்? திருவேகம் பம்''[3]

(இ-ள்) இதனுள், 'பூமகள் யார்?'—'திரு' எனவும்;
'போவானை ஏவுவான் ஏதுரைக்கும்? 'ஏகு' எனவும்;
'நாமம் பொருசரத்திற் கேதென்பர்?' 'அம்பு' எனவும்;
'அழகின் பேரென்?' 'அம்' எனவுங் கூட்டித்
'திருவேகம்பம்' எனக் கொள்ளலாம்.

திரு + ஏகு + அம்பு + அம் = திருவேகம்பம்.

இனி வினாவே விடையாக அமையும் வியத்தகு பாடல்களை யும் இலக்கியங்களில் காணலாம்.[4]

(எ-டு)

''இல்லறத்தா னல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன் நாயினேன்—சொல்லறத்துள்
ஒன்றேனும் இல்லேன் உயர்ந்ததிருப் போரூரா
என்றேநான் ஈடேறு வேன்''

இதில் வினாவே உத்தரமாக (விடையாக) அமைந்திருக்கிறது. 'திருப்போரூரா' என்று விளியாக்கி, 'என்றே நான் ஈடேறுவேன்?' என்பதை வினாவாக்கி முடித்து, 'திருப்போரூரா என்றே நான் ஈடேறுவேன்' என ஒரு தொடராக்கி உத்தரமாக முடித்துக் காட்டுவது.

---

1. மு வீ.சொ. 15
2. சுவா. 199-1
3. தண்டி மேற். பா.
4. சிதம்பர சுவாமிகள், திருப்போரூர் முருகன் சன்னிதிமுறை

# 21. சருப்பதோபத்திரம்

அரசர் மாளிகைகளிலுள்ளதோர் கட்டிடத்திற்கு, சருப்பதோ பத்திர மென்று பெயர்; அந்தக் கட்டிடம் நாற்புறமும் வாயி லுள்ளதாய் நினைத்த பக்கத்தில் மேலேறவும், கிழிறங்கவும் கூடிய தாயிருக்கும். இச் சித்திரக்கவியும் அதே போன்றிருத்தலால் அப் பெயர் பெற்றுள்ளது.

எப்பக்கத்திலே தொடங்கிப் படித்தாலும் அச்செய்யுளே யாகும்படி எவ்வெட்டெழுத்துடைய நான்கடிகளுடையதாய் அறுபத்து நான்கு அறைகளிலே முதலறை தொடங்கி ஒரு முறை யும் இறுதியறை தொடங்கி ஒரு முறையுமாக இருமுறை எழுதி இயையுமாறு பாடப்படுஞ் செய்யுள் சருப்பதோ பத்திரம் எனப் படும்.

'ஸர்வதோபத்ரம்' என்பது சருப்பதோ பத்திரம் எனத் தற் பவமாய் நின்றது. ஸர்வதஸ்-எப்பக்கத்தும்; பத்ரம்-வாயில்; என் பது அவயவப் பொருள்!

''இருதிறத் தெழுதலு மெண்ணான் கெழுத்துடை
யொருசெய்யு ளெண்ணெண் ணரங்கினு ளொருங்கமைந்
தீரிரு முகத்தினு மாலை மாற்றாய்ச்
சார்தரு மாறியுஞ் சருப்பதோ பத்திரம்''[1]

என இதனை மாறனலங்காரம் விளக்குகிறது.

சருப்பதோ பத்திரமாவது, எட்டு எழுத்தான் இயன்ற நான்கு வரியாம். அவை மாலை மாற்றும், சுழிகுளமுமாய் ஒருங்கு வரச் சொல்வது என யாப்பருங்கலம் விளக்குகிறது.

---

1. மாறன். 292

''ஒருபதம்எட் டெழுத்தாய்நான் கடிக்கவியை எட்டெட்டு
ஒருநிறையாய் மேல்கீழ்கீழ் மேல் எட்டெட்டு
அறையின்
தரவவெழுதி நான்முகமுஞ் சொல்லினும்பாட் டாதல்
சருப்பதோபத் திரம்;''

என்பது சுவாமிநாதம் (196).

மாலை போன்று, முன்னிருந்து பின்னோக்கினும், பின்னிருந்து முன்வரினும் ஒரே விதமாக அமையும் மாலை மாற்று எனும் சித்திரக்கவி போன்று, நான்கு முகமாகவும் வாசிக்கும்படிக் கோட்டில் அமைப்பது சருப்பதோபத்திரம் எனப் பிரபந்தத் திரட்டு விளக்குகிறது.

''எண்ணுறு கோட்டி விழைத்துச் சுழிபோலு
நண்ணல் சுழிகுளமந் நற்றமிழ்போற்—கண்ணி
மருத்தாழு மாலைமாற் றாய்க்கோட்டில் வைத்தல்
சருப்பதோ பத்திரமெனச் சாற்று''[1]

என்பது பாடல்.

(எ-டு)

''மாவா நீதா தாநீ வாமா
வாயா வாமே மேவா யா வா
நீவா ராமா மாரா வாநீ
தாமே மாரா ராமா மேதா''[2]

(இ-ள்) மாவா - பெருமையையுடையவனே
நீதா - நீதியை'புடையவனே
தா நீவா மாவா - வலிமை நீங்காத செல்வமுடையவனே
யாவாமே மேவா யாவா (மே வாயாவா யா ஆமே) - சேரக்கடவாய் வாயா தனவாக எவை தாமாகும்?
நீ வா - நீ வருதி;
ராமா மாரா - இராமனை யொப்பவனே மன்மதனை யொப்பவனே (அன்றி இடபம் போன்றவனே)
ஆமா - ஒழுங்குடையவனே
மேதா - நல்லுணர்வுடையவனே! .
மே மார் ஆர் - மேன்மை பொருந்திய நின் மார்பிலுள்ள ஆத்தி மாலையை
நீதா - நீ தருதி

1. பிரபந்தத்திரட்டு 1. திரட்டியல் பா..59
2. தண்டி. மேற். பா.

## சருப்பதோ பத்திரம்



மா வா நீ தா தா நீ வா மா
வா யா வா மே மே வா யா வா
நீ வா ரா மா மா ரா வா நீ
தா மே மா ரா ரா மா மே தா
தா மே மா ரா ரா மா மே தா
நீ வா ரா மா மா ரா வா நீ
வா யா வா மே மே வா யா வா
மா வா நீ தா தா நீ வா மா


 

ஆமன் - ஒழுங்குடையவன்
மேதன் - அறிவுடையவன்
நீதன் - நீதியையுடையவன்
தா - வலிமை
மார் - 'மார்பு' என்பதன் கடைக்குறை விகாரம்.

**கருத்துரை:**

பெரியோனே! நீதியுடையோனே! மிக்க நீங்காத செல்வத்தை யுடையோனே! என்னாகக் கடவது, பொருந்துவாயாக. இப்படி யென்னைச் சேர்ந்தால் வாயாதன யாவை? நீ வருவாயாக. இராமனை யொப்பாய்? காமனுமா யுள்ளாய்! மழையை யொப் பாய்! நீ யாதலால் பெரிய மேம்பாட்டையுடைய நின் மார்பி னிறைந்திருக்கப்பட்ட ஆராகிய தாரினைத் தருவாயாக.

இச்செய்யுள், சருப்பதோபத்திர சித்திரத்தில் எட்டு வழி யாகப் படிக்கத் தக்கதாய் எழுத்துக்கள் அமைந்து நிற்கும். நந்நான்கு வரிகளாக முதலறை தொடங்கி வலப்பக்கமாக வாசித் தும், வாசித்தவாறே இறுதியினின்று முதல்வர வாசித்தும், முதல றையினின்று கீழிழிய வாசித்தும், வாசித்தவாறே மேலேற வாசித் தும், முதல் வரியினிறுதியினின்று கீழிழிய வாசித்தும், வாசித்த வாறே மேலேற வாசித்தும், இறுதி வரியின் முதல் தொடங்கி இடப் பக்கமாக வாசித்தும் முடிக்கலாம்.

இப்பெற்றியே எல்லா எழுத்தும் மொழிக்கு முதலாயினவே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாகப் பாடிப் பொருள் முடிப்பனவும் சருப்பதோ பத்திரம் என யாப்பருங்கலம் கூறுவதையும் இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

## 22. எழுத்து வருத்தனம்

எழுத்து வருத்தனம் என்பது ஓர் எழுத்தான் ஒரு மொழியாய்ப் பொருள் பயந்து, பின் ஓர் எழுத்து ஏற்றுப் பிறிது ஒரு மொழியாய்ப் பொருள் பயந்து, அவ்வாறே முறையானே ஏற்ற ஏற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள் பயப்பப் பாடுவது. அதாவது, யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு மொழியை எடுத்துக்கொண்டு அது தானே வெவ்வேறு சொல்லாய் வெவ்வேறு பொருள்படுமாறு எழுத்துக்களை ஒவ்வொன்றாகச் சேர்த்து வளர்ப்பதாகும். வர்த்தநம் - வளர்த்தல். இதை,

> ''ஒருதொடர் மொழியீற் றோரெழுத் தினைப்பிரிந்து
> ஒருபொருள் தரவைத்து ஓரோன் றாக
> மிக்கபல் பொருள்தர மேல்வைப் பனவே
> அக்கர வருத்தனை ஆகும் என்ப''[1]

என மாறனலங்காரமும்,

> ''பதங்களின் அக்கரங் களைப்பகுத்து ஒன்றற்கு
> உரியஅக் கரங்களை மற்றொரு பதத்தொடு
> புணர்த்திநூ தனப்பொருள் புதுக்குவது எழுத்து
> வருத்தனம் ஆம்என வழுத்தப் படுமே''[2]

என முத்து வீரியமும்,

> ''காதையின்ஓ ரெழுத்து, ஒருசொல் வேறு ஒவ்வோர் எழுத்தைக்
> கண்டு சொல்லாய்ப் பொருளுறலே எழுத்துவருத் தனமாம்''[3]

எனச் சுவாமிநாதமும் விளக்குகின்றன.

(எ.டு) ''ஏந்திய வெண்படையும் முன்னா ளெடுத்ததுவும்
பூந்துகிலு மாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த
உலைவி லெழுத்தடைவே யோரோன்றாச் சேர்க்கத்
தலைமலைபொன் றாமரையென் றாம்''[4]

---

1. மாறன். 278
2. முத்து. சொ. 16
3. சுவாமி. 195
4. தண்டி. மேற். பா

(இ-ள்) மால் - திருமால்

ஏந்திய வெண்மை படையும் - கையிலேந்திய படைக்கல மாகிய வெள்ளிய சங்கும்

முன் நாள் எடுத்ததுவும் - முற்காலத்தில் (இந்திரன் பொழிந்த மழையைத் தடுக்க) மேலே குடை யாக உயரத் தூக்கிப் பிடித்ததும்,

பூதுகிலும் - அழகிய ஆடையும்

உந்தி பூத்ததுவும் - நாபியில் மலர்வித்ததும் (என்ற இவற்றில்)

வாய்ந்த - பொருந்திய

உலைவு இல் எழுத்து அடைவே ஓர் ஒன்றா சேர்க்க - குற்றமற்ற எழுத்துக்களை முறையே ஒன்றன் மேலொன்றாகச் சேர்க்க. (அது)

தலை மலை பொன் தாமரை என்று ஆம் - தலை, மலை, பொன், தாமரை என்று பொருள் படுவதாகும்.

## குறிப்பு

திருமால் ஏந்திய வெண்படை சங்கு; அது கம்பு; அதினின்றும் எடுத்துக் கொண்டது கம்; இதன் பொருள் தலை. இதனுடன் 'ந' என்னும் எழுத்தை முன்பு சேர்க்க நகம் என்றாகும்; இதன் பொருள் மலை. இனி இதனுடன் 'க' என்ற எழுத்தைச் சேர்க்க 'கநகம்' என்றாகிப் பொன் என்று பொருள்படும். முடிவில் இக் 'கநகம்' என்னுஞ் சொற்கு முன்பு 'கோ' என்ற எழுத்தைச் சேர்க்கக் 'கோகநகம்' என்றாகித் தாமரை என்று பொருள்படும். கம், நகம், கநகம், கோகநகம் என்று எழுத்து வளர்தலைக் காணலாம்.

மாலை மாற்று முதல் எழுத்து வருத்தனம் வரையிலான சித்திரக்கவிகளை விளக்கிய யாப்பருங்கலம்,

''மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே''

என முடிக்கிறது.

'ஆரியம்' என்னும் பாரிரும் பௌவத்துக் காட்டிய அக்கரச் சுதகமும், மாத்திரைச் சுதகமும், பிந்து மதியும், பிரேளிகையும் முதலாக வுடையனவும், இப்பெற்றியே தமிழாகச் சொல்லும் மிறைக் கவிகளும் அறிந்து கொள்க, என விருத்தி உரைக்கிறது. அவற்றுள் சிலவற்றிற்கு உதாரணமும் விளக்கமும் யாப்பருங்கல விருத்தி உரை தருகிறது.

# 23. பிந்துமதி

ஒரு செய்யுளில் எல்லா எழுத்தும் புள்ளியுடையனவே வருவது பிந்துமதி எனப்படும்.

(எ.டு)

(குறள் வெண்பா)

"நெய் கொண்டெ னெற்கொண்டெ னெட்கொண்டென் கொட்கொண்டென்
செய்கொண்டென் செம்பொன் கொண் டென்?"[1]

இதில் எல்லா எழுத்தும் புள்ளியுடையனவே வந்தமையால், இது பிந்துமதி.

'முன்னே எகர ஒகரங்களும் புள்ளி பெற்றன வாகலில் எல்லா வெழுத்தும் புள்ளியுடையனவே[2]' என்னும் நன்னூலார் கருத்து இவண் அறியத் தக்கது.

1. யா. வி. மேற். பா
2. நன். 269

## 24. பிரேளிகை

பிரேளிகை என்பது விடுக்கும் பிதிர் (அ.ஃ. தாவது விடுகவி) என உரையாசிரியர் கூறுவர்.

(எ.டு)

(அறுசீர் விருத்தம்)

"தறியும் இரண்டு தையலார்
அணியும் இரண்டு தார்வேந்தர்
அறிய அரசர் வீற்றிருக்கும்
அணையும் இரண்டென் றுடையராய்ச்
செறிய வல்லான் றேய்த்தமையாற்
செழும்பூர் சோலை தாமுடையர்
வெறிகொள் தொண்டை யார்வேந்த
னவையுள் விரவா ரொருவரே"[1]

வரலாறு: பொத்தகம்

## 25. அலகிருக்கை வெண்பா
## 26. முண்டப் பாட்டு

அலகிருக்கை வெண்பா மற்றும் முண்டப்பாட்டு என்பவை யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப்படினும் அவை பற்றிய விளக்கங்கள் தெளிவாகவில்லை.

---

1. யா. வி. உரை. மேற். பா

## 27. தேர்கை

குறைத்தலைப் பிணங்கண்டு 'காவிப்பல்லன்' என்றான் என்பதும், 'குதிரை பட்ட நிலமிது' எனச் 'செத்தது பெட்டைக் குதிரை என்றான் எள்பதும் முதலாவுடையன. 'விரலும் கண்டகமும் கண்டறிந்தான்' என்பதும் பிறவும் அன்ன.

கண்டகம் - வாள்

## 28. கண்ட கட்டு

'கண்டகட்டு' என்பது, 'பசுக்கொண்டு போ்து,' என்று சொல்லப் போயினான், சென்று மீண்டு வந்து, 'அவையுள்ளாயின' என்னிற் 'போதாவாயின', என்று அவிழ்ப்பது. பிறவும் அன்ன.

## 29. கல்லவல்

கல்லவலாவது, நாடறி சொற்பொருள் பயப்பப் பிழையாமை வாசகம் செய்வது.

(எ.டு) 'மனையிற்கு நன்று'
'முதுபோக்குத் தீது'
'முதுபோக்கே அன்று'
'பெருமூர்க்குத் தீது'

என்பனவாம்.

மேற்கண்ட வகைகளுக்கு வேறு மேற்கோள்களோ, உரையோ கிடைக்காததால் இவற்றைத் தெளிவாக அறிய இயலவில்லை.

## 30. நாக பந்தம்

பாம்புகள் ஒன்றோடு ஒன்று பின்னிப் புணர்ந்து விளையாடுவன போலச் சித்திரம் வரைந்து உபதேச முறைப்படி அப்பாம்புருவங்களில் கணக்கிட்ட அறைகள் வகுத்துச் சந்திகளில் நின்ற அறைகளிற் பொதுவாக எழுத்துக்கள் அமைய ஒரே எண்ணிக்கை கொண்ட எழுத்துக்களால் ஆன கவிகள் சித்திரத்திற் பொருந்தப் பாடுவது நாக பந்தமாம். இங்ஙனம் அமைக்குங்கால் கவிகளின் மொத்த எழுத்துக்கள் சித்திரத்திற் சுருங்கித் தோன்றும்.

நாகம் - பாம்பு. பந்தம் - கட்டு, தளை.

தண்டியலங்காரம் முதன் முதலாக இவ்வகையைக் குறிப்பிடுகின்றது. பின்னர் மாறனலங்காரம் போன்ற நூல்கள் இதை விளக்குகின்றன.

"அரவுஇரண்டு கலந்துஇனிசை நேரிசைவெண் பாவின்
ஆண் பெண்மேற் சொலு(ம்) நாகபெந்தம்; மறை தலைவால்
இருவயிறு, நால்மூலை, நாள்இசைவும், ஐந்தைந்து;
இடைநான்குளவ் வெட்டாய்த் தொண் ணூற்றிரண்டன் பான்ஏழ்
ஒருகவிக்காய்; நூற்றுப்பன் னான்குஎழுத்துத் தலைவால்
உற்றநாலிசை வில்ஒவ் வொன்றிடைநான்கு ஈரெட்டாய்
மருவுசந்தி யிரட்டுமற்ற சந்திஅட்ட நாகம்
வகுப்பதும்வால் கறைபதினொன்று இடுவதுஞ்சில் விடத்தே"[1]
எனச் சுவாமிநாதம் நாகபந்தத்தை விளக்குகிறது.

---

1. சுவாமி, 201.

## இரட்டை நாக பந்தம்

இரண்டு பாம்புகள் பின்னிப் புணர்ந்து விளையாடுவன போல அமைந்த சித்திரத்திற் பொருந்த இரண்டு செய்யுள்களில் உள்ள எழுத்துக்களை அமைத்துப் பாடுவது. இதை,

''வாலு ளிருமூன்றும் தலையி லிரண்டெழுத்தும்
மூலைக ணான்கும் வயிறிரண்டும் ஐவைந்தாய்
நாலெட்டு நாலைந்தே ழாகி நடைபெறுமே
சேலிட்ட கண்ணரவின் சீர்''

என்னும் வெண்பாவாலும்,

''வரியரவு இரண்டாய் வால்வயிறு இரண்டாய்த்
தெரிமுலை நான்காய்ச் சிறந்துமும் மூன்றுடன்
நிலைபெறும் ஒருபான் இருபான் நிறீஇத்
தலைஇரண் டெழுத்தாய்ச் சார்தரச் சந்தியின்
கவினுறத் தெழுத்துக் கலந்துறுப் பாக
நவிலிரு பாவே நாக பெந்தம்''

என்னும் மாறனலங்கார நூற்பாவாலும்,

''.........தலைவயிறு - மானவிடை
யச்சுவா லைந்தெட்டொன் பான்மவைவெண் பாவிரண்டு
மெச்சிரட்டை நாகபந்தமே''[1]

என்னும் பாடலடிகளாலும் அறியலாம்.

(எ.டு.) (நேரிசை வெண்பா)

1. ''அருளின் றிருவுருவே யம்பலத்தா யும்பர்
தெருளின் மருவாச்சீர்ச் சீரே[2] - பொருவிலா
வொன்றே யுமையா ளுடனே யுருத்தரு[3]
குன்றே தெருள வருள்''

---

1. தண்டி. மேற். பா. (பா.வே.)
2. மருவாருசீர்ச் சீரே.
3. யுறுதிதரு

2. ''மருவி னவருளத்தே வாழ்சுடராய் நஞ்சு[1]
பெருகொளியான்[2] மேயபெருஞ் சோதித்-திருநிலா
வானஞ் சுருங்க மிகுசுடரே சித்த
மயரு மளவை யொழி''

(இ-ள்)

1. அருளின் திரு உருவே- கருணையின் அழகிய வடிவமாக உள்ளவனே.

அம்பலத்தாய் - திருச்சிற்றம்பலத்தில் நடனம் புரியும் நடராச மூர்த்தியே

உம்பர் தெருளின் மருவாச் சீர்ச் சீரே - தேவர்களின் அறிவுக்கும் எட்டாத சிறப்பினையுடைய புகழை உடையோய்.

பொருவிலா ஒன்றே - நிகரற்ற ஏக மூர்த்தியே.

உமையாள் உடனே உருதரு குன்றே - பார்வதி தேவியோடு கூடிய உருவத்தைப் பக்தர்களுக்குக் காட்சியளிக்கும் மலை போன்றவனே.

தெருள அருள்- (யாங்கள்) தெளிந்த ஞானத்தைப் பெற அருள் செய்வாயாக.

## கருத்துரை

அறத்தினது அழகிய மேனியாய்! திருச்சிற்றம்பலத்தினையுடையாய்! தேவர்கள் அறிவிற்கும் எட்டாதாய்! அழகிய புகழையுடையாய்! குற்றமில்லாத ஏகரூபத்தை யுடையாய்! உமையோடு பொருந்தின மலை போல்வாய்! யாங்கள் தெளிய அறிவை அருள்வாயாக.

2. மருவினவர் உள்ளத்தே வாழ் சுடரே-அடைந்தவர்மனத்திலே குடிகொண்டிருக்கும் ஒளியுருவமானவனே

நஞ்சு பெருகு ஒளி யான் மேய பெருமைசோதி-(திருமிடற்றில்) விடத்தாலுண்டாகிய மிக்க ஒளியுடன் பொருந்திய பெருஞ்சோதியே,

திருநிலா வானம் சுருங்க மிகும் சுடரே—அழகிய மதியின் கிரணம் பரந்த ஆகாயமும் சுருங்கும் படி மேலோங்கிய ஒளியே திருமேனியாக வாய்ந்தோய்,

சித்தம் மயரும் அளவை ஒழி—மனமயங்கும் காலத்தை எமக்கு நீக்கியருள்வாயாக.

---

1. ரே நஞ்சு.
2. றேயபெருஞ்சோதி. எனவும் பாடம்.
இப்பாடங்கட்கேற்பவும் நாகபந்தம் அமைத்துக் கொள்ளலாம்,

## கருத்துரை

அடைந்தவருள்ளத்தே கெடாத விளக்கமாயுள்ளாய்! நஞ்சின்கணுண்டாகிய பெருகிய நிற நிறைந்து பொருந்தின திருமிடற்றையுடைய பெரிய சோதியாயுள்ளாய்! அழகிய மதியை யுடைய ஆகாயமானது சிறுகப் பெருகிய வொளியே திருமேனியா யுள்ளாய். எனதுள்ளம் நினதடியை மறக்கு மெல்லையை யொழிப் பாயாக.

## குறிப்பு

இக்கவிகளிரண்டும் இரண்டு பாம்புகள் பின்னிப் புணர்ந்து விளையாடுவன போல அமைந்த சித்திரத்திற் பொருந்த வரையும் போது இரண்டு செய்யுட்களிலுமுள்ள 118 எழுத்துக்களும் 96 ஆகச் சுருங்கி அமையும். இவ்விரு செய்யுட்களிலுமுள்ள முதலெழுத் துக்கள் இரண்டும் ஒவ்வொன்றாக இரண்டு தலைகளிலும், ஐயைந் தாக 20 எழுத்துக்கள் நான்கு மூலைகளிலும், ஐயைந்தாக 10 எழுத்துக்கள் இரு வயிறுகளிலும், 9 எழுத்துக்கள் இரண்டு வால் களிலும், எஞ்சிய எழுத்துக்கள் நடுவிலுள்ள உறுப்புகளிலுமாக எழுதப்படும். 22 எழுத்துக்கள் சந்திகளிலே நின்று இரு கவிகளுக்கும் பொதுவாக அமைவனவாம். இவை 44 எழுத்துக்களாகும். சந்திகளுக்கிடையிலும் ஒவ்வோரெழுத்து நிற்கும்.

# இரட்டை நாக பந்தம் (வேறு)

(குறள் வெண்பா)

''வைய முழுதீன்றாள் வைணவிச் செல்வியவள்
துய்யளென் நெஞ்சின் துணை.''[1]

(இ—ள்) உலகங்கள் முழுமையையும் ஈன்றவள், வைணவி யாகிய செல்வி. அவள் பரிசுத்தமானவள். என்னுடைய நெஞ்சத்திற்குத் துணையாவாள்.

(குறள் வெண்பா)

''வண்டார் குழலாள் வயிணவித் தேவியவள்
கொண்டாளென் நெஞ்சிற் குடி''[2]

(இ—ள்) வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடையவள் வைஷ்ணவி தேவி; அவள் என் உள்ளத்திற் குடி கொண்டனள்.

1. வைஷ்ணவி சந்நதி முறை பா. 538
2. ,, ,, ,, பா. 539

## இரட்டை நாகபந்தம் (வேறு)

(குறள் வெண்பா)

''முல்லை வடவன வைணவியே! மூவுலகு
ணல்லைநீ! நல்லுறவி! நன்கு,''[1]

(இ-ள்) வடமுல்லை வாயில் வைஷ்ணவியே! மூன்று உலகங்களிலும் நல்லவள் நீ (எனக்கு) நன்கு, அடியார்களுடைய சேர்க்கையாம் நல்ல உறவை, (ஈ) கொடுப்பாயாக!

(குறள் வெண்பா)

''உத்தரமுல் லைவை ணவியே!மற் றுண்ணமுத
மொத்த பதவீ டுதவு,''[2]

(இ-ள்) வடமுல்லை வாயில் வைணவியே! உண்ணப்படுகின்ற தேவாமிர்தம் போன்ற பதமாகிய மோட்ச வீட்டை (எனக்கு) உதவியருளுக! (மற்று-அசை)

### குறிப்பு

தண்டியலங்காரத்தில் காணப்படும் இரட்டை நாகபந்தம் போல் பல வளைவுகளுடன் கடினமாக இல்லாமல் எளிய வகையில் இவை பாடப்பட்டுள்ளன. படத்தில் பாம்பின் வயிற்று நடுப் பொது எழுத்துக்களைக் கூட்டிப் படிக்க. ''வைணவி'', என வரும்.

இலக்கண விளக்கம் இரட்டைநாக பந்தத்திற்கு எழுத்து நிலை கூறுவதைப் பின்வருமாறு காணலாம்.

இதற்குரிய வெண்பாப் பாடல் 63 எழுத்துக்களையுடைய தாகும். இதில், 6ம் 8ம், 14ம் 40ம், 16ம் 18ம், 20ம் 46ம், 22ம் 24ம், 26ம் 28ம், 30ம் 48ம், 32ம் 50ம், 34ம் 55ம், 42ம் 44ம், 58ம் 60ம் ஒரே எழுத்துக்களாக வருதல் வேண்டும்.

### இதை விளக்கும் பாடல்

எட்டினுக்கு ஆறாகும் எண்ணைந் தினுக்கே
இயைந்த பதினாலதாகும்
ஈரெட் டினுக்குவரு பதினெட்டு நாலைந்
தினுக்குநாற் பத்தாறுதான்

---

1. வைணவி சந்நதி முறை பா. 540
2. ,, ,, ,, பா. 541

தொட்டஇரு பத்திரண்டு எண்மூன்று நாலேழ்
துலங்கும் இரு பத்தாறதாம்
தோன்றும் எண்ணாறுக்கு முப்பதாம் பத்தைந்து
தூயமுப் பத்திரண்டாம்
திட்டமுறு முப்பத்து நான்கினுக்கு ஐம்பத்து
இரண்டதாம் ஆறேழுடன்
செப்புநாற் பத்தினால் ஐம்பத்திற்று எட்டுடன்
சேர்வதோர் அறுபதாகும்
கட்டமில் லாமலறு பத்துமூன்று அக்கரங்
களையுடைய் வெண்பாஇது
கமழ்விசித்ர உபய நாக பந்தனமாம்
கனிந்துருகு செஞ்சொல் மாதே'[1]

## குறிப்பு

இப்புதுமுறை இரட்டை நாகபந்தத்திற்கான பாடலும் பட வடிவும் கிடைக்கவில்லை.

பிரபந்த தீபிகை இரட்டை நாகபந்தத்திற்கு எழுத்து நிலை கூறுவதைப் பின்வருமாறு காணலாம்.

''ஆதியிடை மூலைவயி றையைந்து நாலெட்டு
மாகும்வா லரையொன்பதா
மாணரவ மாணைந்து சந்திபெண் பெண்ணைந்தி
னாண்பெணீ ராறதாகும்
பாதிநே ரசையுமாண் பெண்ணாகு மின்னிசைவெண்
பாவுரைத் திடிலெழுத்தின்
பகர்சந்தி நான்குமுப் பத்தெட்டு வெட்டுவைம்
பதுபன்னி ரெண்டினுக்கு
ஓதுபதி னெட்டாகு மிருபதைம் பத்தினா
லொக்குமிரு பத்திரண்டுக்
குறுமஃது விருபத்தி நாலுவைம் பத்திரண்
டுறுமிருப தாறுபத்தா
மோதுமுப் பத்திரண் டுக்குநாற் பத்தெட்டு
முப்பத்தி நாலாறா
முப்பத்தி யாறஃது நாற்பதே நாற்பதறு
மொழிபெணர வுக்குமிவையே,''

---

1. இலக்கண விளக்கம். பின் இணைப்பு

(இ-ள்) முதல், இடை, மூலை, வயிறு எனும் இடங்களில் ஐந்து, நான்கு, எட்டு என எழுத்து ஆகும்; வால், அரை என்பன ஒன்பது எழுத்தாம். ஆண் பாம்பிற்கு: ஆண் பாம்பு ஐந்திடங்களில் பெண் பாம்பைச் சந்திக்கும்; பெண் பாம்பும் ஐந்திடங்களில் ஆண் பாம்பில் இணையும்; பெண்ணுக்கு ஈராறெழுத்து ஆகும்: முதற் பாதியான நேரசை வெண்பா ஆண்; இரட்டை நாக பந்தத்தின் பின்பாதியான இன்னிசை வெண்பா பெண் பாம்பு ஆகும். இவ்வாறு கூறும் போது, எழுத்துக்கள் ஒன்றாகச் சந்திக்கும் போது, நான்கும் - முப்பத்தெட்டும் எழுத்துக்கள் ஒன்றாகவும், அவ்வாறே எட்டும்-ஐம்பதும், பன்னிரண்டும் - பதினெட்டும், இருபதும் - ஐம்பத்துநான்கும். இருபத்து இரண்டும் இருபத்து-நான்கும், ஐம்பத்து இரண்டும்-இருபத்து ஆறும், பத்தும்-முப்பத்து இரண்டும், நாற்பத்தெட்டும்-முப்புத்து நான்கும், ஆறும்-முப்பத்து ஆறும், நாற்பதும் - நாற்பத்துஆறும் ஒன்றாகவும் வரும்படியாகக் கூற வேண்டும். பெண் பாம்புக்கும் இவ்வாறே.

(வி-ரை) இது இன்னும் தெளிவுபடல் வேண்டும். தண்டியலங் காரம் (98), சித்திரக் கவிப் பட்டியலில் நாகபந்தம் எனக் கூறுவது உரையில் இரட்டை நாக பந்தமாக விளக்கப்படுகின்றது. 'இரண்டு பாம்புகள் தம்முள் இணைவனவாக உபதேச முறையா னெழுதி, ஒரு நேரிசை வெண்பாவும், ஓர் இன்னிசை வெண்பாவு மெழுதிச் சந்திகளினின்ற எழுத்தே மற்றையிடங்களினு முறுப்பாய் நிற்கப் பாடுவது, மேற் சுற்றுச் சந்தி நான்கினும் நான்கெழுத்தும், கீழ்ச் சுற்றுச் சந்தி நான்கினும் நான்கெழுத்தும், இரண்டு பாம்பிற்கு நடுச்சந்தி நான்கினும் இரண்டு பாட்டிற்கும் பொருந்த நான் கெழுத்துமாகச் சித்திரத்தி லடைப்பது'. தீபிகையின் விளக்கம் இதனினும் விரிவாக அமைவது தெரிகின்றது. தண்டியலங்கார உரையில் தரப்படும் வெண்பாக்களை, தீபிகையின் விளக்க அடிப் படையில் பார்க்கும்போது ஓரளவே எழுத்தமைப்பு நிலை பொருந்துகின்றது.

## அட்டநாக பந்தம்

இஃது ஒரு சதுரத்தின் நான்கு பக்கத்தின் புறத்திலும் இவ் விரண்டு பாம்பின் தலைகள் பொருந்த நான்கு கோணங்களிலும் கோணம் ஒன்றில் இவ்விரண்டு வால்கள் பொருந்த எட்டுப் பாம்புகள் பின்னிக் கிடப்ப உபதேச முறைப்படிச் சித்திரம் வரைந்து, எடுத்துக் கொண்ட கணக்கின்படி எழுத்துக்கள் நிற்பக் கவிகள் அமைப்பதாகும்.

பிரபந்தத் திரட்டு ஆறு வெண்பாக்களில்[1] இதன் இலக்கணத்தை விளக்குகிறது. அவை,

"தளையுடனே சொன்னவண்ணச் சந்தம் பிசகா
தளகுநெறி வெண்பாவண் ணத்துக்—குளதிகழா
தேற்றுக்கோட் டிற்பாட்டுக் கேற்றவெழுத் துக்கூட்டிச்
சாற்றலட்ட நாகபந் தம்"

"ஆனபனி ரண்டுபதினா றச்சிற புத்தியுத்திக்
கானபடி வெண்பாவண் ணம்படித்து—மேனிலத்தோர்
மானிலத்தோர் பேரூர்நா மம்பிறநா மந்திகழ்த
றானட்ட நாகபந் தம்",

"வண்ணநெறி போகாமல் வாழ்துறையா தேனுமுற
வுண்ணிறைபேர் மூன்றடியி னுங்குலவ-நண்ணுவண்ண
மோனை யெதுகை வெண்பா மோனை யெதுகைகோட
றானட்ட நாகபந்தம்"

"நெடிலைக் குறிலாய் நிகழ்த்து குறிலை
நெடிலாக் குயிர்மெய்யொற்றாய் நேர்ந்து—படியொற்
றுயிர்மெய்யாய் நாட்டுவா லொன்றிற் பதியெண்
பயிலேழ் பணிக்கும் பதி"

"நன்மைபெறு சந்தியுட னானூற்றெட் டாங்கோடு
முன்னிவிடின் முந்நூற்று முப்பானோ—டுன்னிரண்டா
மூவையி னான்கு முடியிடையைந் தஞ்செட்டு
வாலிருபா னாலாறா வை.

"நூலிடையிர் சந்தியினா னூற்றெண்ப தாகுங்கோ
டேல்சந்தி தள்ளிமுந்நூற் றெண்பத்து—நாலாம்
வயிறிடை சென்னியைந்தாம் வால்பத்தொன் பானச்
சியனூற் றிருபத்தெட் டே"

தளை பிழையாத வெண்பாவும், சந்தமும் அளவும் தவறாத வண்ணச்செய்யுளும் வடிவாகக் கொள்ளப்பட்டு எட்டுப்பாம்புகள் பிணைந்த சித்திரத்திற்கு ஏற்ப எழுத்துக்கள் அமைத்துப் பாடப் படுவது அட்டநாக பந்தம்.

1. பிரபந்தத் திரட்டு. திரட்டியல் 60—65

பன்னிரண்டும் பதினாறும் எழுத்துக்கள் ஒத்து வரும்படி, அறிவுக்கும், உத்திக்கும் ஏற்ப வெண்பாவோ வண்ணமோ பாடி, அதில் இறைவர் அல்லதுமனிதரின் பெயரும், ஊரும், பிறவும் விளங்க அமைப்பர்.

எழுத்து ஒத்து வரும் வண்ணச் செய்யுளின் நெறி முறையாத துறைவடிவம் மூன்றடியிலும் பெயர் ஒப்புமை கொண்டு அமைதலும், வண்ணத்திலும் வெண்பாவிலும் எழுத்து ஒத்துவரும் மோனையும் எதுகையும் வாய்ப்பாகக் கொள்ளப்படும்.

எழுத்து ஒத்து வருவதற்காக, நெடிலைக் குறிலாக்கலும், குறிலை நெடிலாக்கலும், உயிர்மெய்யை ஒற்றாய் மாற்றலும், அவ்வாறே ஒற்றினை உயிர்மெய்யாக்கலும் இதன்கண் உண்டு.

ஒரு பாம்பின் வாலில் முடியும் எழுத்தின் எண்ணிக்கைக்கு ஏற்ப மற்ற ஏழு பாம்பிலும் அமைத்தல் வேண்டும். தலை தொடங்கி வால்வரை நோக்கும்போது தத்தம் உடலிலும், பிறிது பிறிதுடலிலும் பொருந்துகின்ற இடங்களையும் இணைக்க, மொத்தம் நானூற்றெட்டு எழுத்தாம். கோட்டிலமையும் எழுத்துக்களை மட்டும் நோக்க முந்நூற்று முப்பத்திரண்டாக அமையும். மூலைகளில் நான்கும், தலையில் ஐந்தும், இடையில் நாற்பதும், வாயில் இருபதும், இருபத்து நான்குமாக அமையும்.

பிறிதொரு வகை, நானூற்று எண்பது எழுத்துக்களாலாகி ஒத்துவரும் எழுத்துக்கள் நீங்க, முந்நூற்றெண்பத்து நான்கு எழுத்துப் பெற்று, வயிறு, இடை, தலை ஆகியவற்றில் ஐந்தும் வாலில் பத்தொன்பதும், எழுத்துடன் நூற்றிருபத்தெட்டெழுத்தில் அமையும்.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

(எ-டு) ‘தாதா டி.கே. சண்முகம் வாழி
நாவில் வாணிமா நாடக மாவிசை
தரமா வகமேவ வேதயை கேண்மை
வண்கவி மேவநீ மாண்போ டினிதே’[1]

(இ-ள்) வாணி - கலை மகள், மா - பெருமையான,
மா - மிகுந்த, தர - கொடுக்க,
மா - இலக்குமி, அகம் - மனையில்,
மேவ - வாழ, கேண்மை - நட்பு

1. பி.வி. அப்துல்கபூர். சித்திரகவி மாலை. பா. 9

வண் - வளமையான, மேவ - பொருந்த
மாண்பு - மாட்சிமை

## கருத்துரை

நாவில் கலைமகள் பெரிய நாடகமாகிய இசைக்கலையைத் தரவும், இலக்குமி நின் மனையிற் பொருந்தி வாழவும், தயவும் நட்பும், வளமையான கவிகளும் மாட்சிமையுடன் இனிதாக நின்னிடம் பொருந்த நீ வாழ்க.

இலக்கணவிளக்கம் அட்டநாக பந்தத்திற்கு எழுத்து நிலை கூறுவதைப் பின்வருமாறு காணலாம்.

இதில் 4ம் 41ம், 6ம் 45ம், 8ம் 20ம், 12ம் 18ம், 22ம் 47ம், 24ம் 39ம், 33ம் 51ம், 37ம் 49ம் ஒரே எழுத்துக்களாக வரும்படி 51 எழுத்தினால் அட்ட நாகபந்தம் அமைய வேண்டும்.

## இதை விளக்கும் பாடல்

ஒருநான்கு அக் கரத்தொடுநாற் பத்தொன்றாம்
ஆறுடன்நாற் பத்தைந்தாம் எட்டுடன் ஐந்நான்காம்
இருள்அறு பன்னிரண்டுடனே பதினெட் டாகும்
இருபத்தி ரண்டுடனே நாற்பத் தேழாம்
பரவும் இருபத்து நான்குடன் முப்பத்தொன்
பானாம்முப் பான்மூன்றோடு ஐம்பத் தொன்றாம்
அருமுப்பத் தேழுடனே நாற்பத் தொன்பானாம்
அட்டநாக பந்தமாம் செய்யுட்கே.[1]

## மற்றொரு வகை

49 எழுத்தினால் அமைக்கப்படும் அட்டநாக பந்தமும் ஒன்றாகும். இதில் 4ம் 34ம், 6ம் 38ம், 8ம் 20ம், 12ம் 18ம், 22ம் 40ம், 24ம் 32ம், 26ம் 44ம், 30ம் 42ம் ஒன்றாக வரும்படி எழுத்துக்கள் அமையும்.

## இதற்குப் பாடல்

"முப்பத்து நாலுக்கு நாலாகும் ஆறுக்கு
முப்பதிற் றெட்டாகும்
மொழியும் எட்டுக்கு இருபதாம் பன்னிரண்டுக்கு
மூவாறு இலக்கம் எனலாம்

---

1. இலக்கண விளக்கம், பின் இணைப்பு

ஒப்பற்ற இருபத்தி ரண்டுக்கு நாற்பதாம்
ஒரும் இருபத்து நாலுக்கு
உயரும் முப்பத்திரண்டு இருபதோடு ஆறினுக்கு
உரிய நாற்பத்து நாலாம்.
தப்பற்றிடச் சிறந்திடு முப்பதுக்குத் தழைத்த
நாற்பத் திரண்டாம்
சார்தர உரைத்திட்ட இவ்விலக்கங்களில்
தவறாமல் அக்கரங்கள்
செப்பிநாற் பத்தொன்பதாம் எழுத்தினால் செய்த
செய்யுள்எண் ணாகபந்தம்
செங்களப குங்கும மணங்கமழ் தரும்படி
திரண்டிலகு கொங்கை மாதே[1]

## குறிப்பு

இப்புது முறை அட்டநாக பந்தத்திற்கான பாடலும் படவடிவும் கிடைக்கவில்லை.

1. இலக்கண விளக்கம், பின் இணைப்பு

# 31. வல்லினப் பாட்டு

வல்லின எழுத்துக்களான க, ச, ட, த, ப, ற என்னும் ஆறு எழுத்துக்களும் அவற்றின் இனவெழுத்துக்கள் மட்டுமே அமைந்து, வேறு இன எழுத்துக்கள் வாராமற் பாடுவது வல்லினப் பாட்டாகும்.

''வல்லினமுழுதுறல் வல்லினப் பாட்டே''[1]
என்பது நூற்பா.

(எ. டு.) (நேரிசை வெண்பா)

''பொற்றொடி கற்சட்ட கத்தைப் போக்கிப் புறத்திறுத்த
கற்புறத்தற் காட்சிக் கதிகொடுத்த—சிற்றடிப்போ
துச்சிப் பதிக்கத்தா கூற்றச் சுறுத்தாது
கச்சிப் பதிக்கத்தா கை.''[2]

இதனுள் வல்லின வெழுத்தாறும் வந்து பிற இனவெழுத்துக்கள் வாராததைக் காணலாம்.

(இ-ள்.) திருக்கச்சிப் பதிக்குக் கத்தனே! என்னை யமன் வந்து அச்சமுறுத்தாது, நீ பொன்னினாற் செய்த தொடியினை யுடையாள் கற்படிவத்தைப் போக்கி அவளை விட்டுப் புறமாறின கற்பு மீட்டும் அவளிடத்தெய்தவும் பண்டை உடலினதழகெய்தவுங் கூட்டும் சாபவிமோசனத்தைக் கொடுத்த சிறிய திருவடிகளாகிய தாமரைப் போதை என் சென்னியிலே சூடத் தருவாயாக. அதனோடும், அஞ்சாதே என்னும் அபயஅத்தமுந் தருவாயாக. துறை—கடவுள் வணக்கம்.

---

1. மாறன். 271
2. ,, மேற். பா. 767.

# 32. மெல்லினப் பாட்டு

மெல்லின எழுத்துக்களான ஞ, ங, ந, ன, ம, ண என்னும் ஆறு எழுத்துக்களும் அவற்றின் இன எழுத்துக்கள் மட்டுமே அமைந்து, வேறு இனவெழுத்துக்கள் வாராமற் பாடுவது மெல்லினப் பாட்டாகும்.

"மெல்லின முழுதுறன் மெல்லினப் பாட்டே"[1]
என்பது நூற்பா.

(எ. டு) (நேரிசை வெண்பா)

"மனமே நினைஞான மன்னாமை மீன
மனமேன மெங்ஙனெனி னங்ஙன்—முனமானா
னேமிமான் மாமானினி நீண்மன மான
நேமிமா னன்னாம நீ."[2]

இது, மெல்லினவெழுத்துக்கள் ஆறினாலும் வந்த பாட்டு.

(இ-ள்.) மனனே! மீனமும் அன்னமும் ஆமையும் ஏனமும் எப்படியே யிருக்குமென்னில் அப்படியே முன்னற் திருவவதார மானவன், பூமி தேவியாகிய மான் போலும் விழியை யுடையாளுக்குந் திருமகளாகிய பெண்ணுக்கும் அவர்கள் மனமெப்படி அப்படியான ஞான மன்னன், சக்கரத்தையுடையான், அவனது நல்ல திருநாமங்களை இடைவிடாது நீ நினைப்பாயாக.

துறை—கடவுள் வணக்கம்.

---

1. மாறன். 272.
2. ,, மேற். பா. 768.

# 33. இடையினப் பாட்டு

இடையின எழுத்துக்களான ய, ர, ல, வ, ழ, ள என்னும் ஆறு எழுத்துக்களும் அவற்றின் இன எழுத்துக்கள் மட்டுமே அமைந்து, வேறு இன எழுத்துக்கள் வாராமற் பாடுவது இடையினப் பாட்டு ஆகும்.

'இடையின முழுதுற லிடையினப் பாட்டே''[1]
என்பது நூற்பா.

(எ.டு) (நேரிசை வெண்பா)

''வேயா லவையால்வில் வேளா லயலவரால்
யாயாலு யிர்வாழ்வார் யாவரே—யோய்விலராய்
வாழ்வா ருயிர்வழியே வாழ்வா ரருளாள
ராழ்வா ரருளிலரே யால்.''[2]

இது, இடையினவெழுத்துக்கள் ஆறும் வந்த பாட்டு.

(இ-ள்.) ஒழிவில்லாத வாழ்வினையுடையார், உயிரின் கண்ணே நீங்காது வாழும் வாழ்வினையுடையார், கிருபையை ஆட்சியாகவுடையார், அவர் யாரெனில், ஆழ்வாரென்னுந் திருநாமத்தையுடையார் (எமக்குத் தாரு மார்புந் தரவேணு மென்னுங்) கிருபையிலர்; எனவே தோழீ! வேய்ங்குழல் முதலாகிய பகைகளாற் புமான்களை யெய்தாது தனியிருந்தவரு ளுயிர் வாழ்வார் ஒருவருமில்லை.

திணை - பெண்பாற் கூற்றுக் கைக்கிளை.
துறை - மெலிவொடு கூறல்.

---

1. மாறன். 273.
2. „ மேற். பா. 769.

# 34. நிரோட்டியம்

இதழ் முயற்சியாற் பிறப்பன வாகிய உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ என்னும் எழுத்துக்கள் வாராமற் பாடப்படுஞ் செய்யுள் நிரோட்டியம் ஆகும். இது நிரோட்டம், நிரோட்டகம் என்றும் கூறப்படும்.

நிரோட்யம் என்பது நிரோட்டம் என நின்றது. நிர்— இன்மை; ஒட்டியம்—ஒட்டம்—தொடர்புடையது. ஒட்டம்— உதடு. உதடு ஒட்டம் தொடர்பு இல்லாதது.

"இதழ்குவிந் தியையாது இயல்வது நிரோட்டியம்"[1]
என மாறனலங்காரமும்,

"இதழ்குவி யாஎழுத்து எடுத்துப் பாடுவது
அதுநிரோட் டகமென் றறையப் படுமே"[2]
என முத்து வீரியமும்,

"உஊஒஓ ஔபம வவிவற் றியைபு
சேராநி ரோட்டத் திறத்து"[3]
என்னும் தண்டியலங்கார உரை மேற்கோள் உரை சூத்திரமும்

"ஆறிரண்டாம் ஆவியும் ஐயிரண்டாம் ஆவியும்
மாறிகந்த உஊவும் ஓனமும்—கூறில்
வகர பகரமஃகான் வந்தணையாச் செய்யுள்
நிகரில் நிரோட்டி எனல்"[4]
என்னும் யாப்பருங்கல விருத்தி மேற்கோள் உரைப்பாடலும்,

---

1. மாறன். 274
2. முத்துவீ. சொ. 19.
3. தண்டி. மேற். சூ.
4. யா. வி. மேற். பா.

"பாதம் உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ, விசை நூற்று
பத்தொன்பான் எழுத்தில் நிரோட் டகங்கரந் திசையே"[1]
என சுவாமிநாதமும் இதை விளக்குகின்றன.

உ, ஊ, ஒ, ஓ, ஔ ஆகிய 5 உயிரெழுத்துக்களும், ப, ம, வ நீங்கிய 15 மெய்யெழுத்துக்களால் உண்டான 75 உயிர்மெய் எழுத்துக்களும், ப, ம, வ என்ற மூன்று மெய்யெழுத்துக்களுப் இம் மூன்று மெய்யெழுத்துக்களால் உண்டான 36 உயிர்மெய் எழுத்துக் களும் சேர்த்து மொத்தம் 119 எழுத்துக்கள் (5+75+3+36) இல்லாமல் பாடுவது நிரோட்டம் என்று அழைக்கப்படும்.

(எ-டு) (நிலைமண்டில ஆசிரியப்பா)

"சீரார் செகத்தில் திகழ்சரா சரத்தைத்
தேரார் கரத்தாற் செய்தளித் தாண்ட
தண்ணளித் தடங்கடற் றனியிணை யடிதனை
எண்ணி ஏத்தி இறைஞ்சினன் சித்திரஞ்
சேரணி இலக்கணம் செழித்திட யானே"[2]

(இ-ள்) சீர் - சகல நன்மைகளும். ஆர் - நிறைந்துள்ள.
செகத்தில் - உலகத்தில். திகழ் - பிரகாசிக்கும்.
சரம் - அசையும்பொருள். அசரம் - அசையாப்பொருள்.
செய்து - படைத்து. அளித்து - காத்து.
ஆண்ட - ஆட்கொண்ட. தண் - குளிர்ந்த.
அளி - அருளாகிய. தடங்கடல் - விரிந்த கடல்.
தனி - ஒப்பில்லாத முழுமுதற் கடவுளின்,
இணை - இரண்டு. அடிதனை - திருவடிகளை.
எண்ணி - நினைத்து. ஏத்தி - வாயால் துதித்து.
இறைஞ்சினன் - வணங்குகின்றேன். (ஏனெனின்)
சித்திரம் சேர் - ஓவியம் சேர்ந்த
அணி இலக்கணம் - சொல்லணி இலக்கணம்
செழித்திட - தழைத்திட. யான் நான்.

## கருத்துரை

சித்திரஞ் சேர்ந்துள்ள அணியிலக்கணம் செழிப்புற வேண்டி, புகழ் மங்களம் நிறைந்துள்ள உலகின்கண் விளங்கும் சரமாகிய அசையும பொருள். அசரமாகிய அசையாப் பொருள் யாவும் படைத்து உணவளித்து ஆட்கொள்ளும் குளிர்ந்த அன்புள்ள, கருணைக் கடலாகிய ஏகப்பிரமத்தின்ஒப்பில்லாத இரண்டு திருவடி களையும் நினைத்துத் துதித்து நான் வணங்குகின்றேன்.

---

1. சுவாமி. 198.
2. பி.வி. அப்துல்கபூர். சித்திரகவிமாலை. 1. கடவுள் வாழ்த்து.

# 35. ஓட்டியம்

அதரமும் அதரமும் குவிந்தும் கூடியும் நடப்பதுவே ஓட்டியம் எனப்படும்.[1] ஒட்டம் - உதடு ஒட்டியம் - ஓட்டம், தொடர் புடையது.

'இதழ் குவிந்தியைந்தியல்வதுவே யோட்டியம்.'[1]

## இதழ் குவிந்த ஓட்டியம்

(எ-டு) குருகு குருகு குருகொடு கூடு
குருகுகுரு கூருளூறு கோ.[2]

(இ-ள்) மனனே! சங்கு சங்கொடுங் குருகென்ற பறவைகள் குருக ளோடுந் திரண்டியங்குங் குருகா புரியுட்கோவை நினையென்ற வாறு. மூன்றாம் உருபின் மேல் உம்மை தொக்கு விரிந்தன. ஒடு இடைநிலைத் தீபகம். பா - குறள் வெண்பா. துறை - கடவுள் லணக்கம்.

## இதழ் இயைந்த ஓட்டியம்

(எ-டு) பம்மும்பம் மும்பம் மும்மம் மைமைமாமை
பம்முமம்ம மும்மேமம் பாம்.[3]

(இ-ள்) மைபம்மும்- (வலவனே உனது தேரைப் பின்னிட்டு விரைந்த) மேகம், (இதன் முன்சென்று தேர்வரும் வழிமேல் விழி வைத்த இல்லறக் கிழத்தி இருந்த நகரின்கட்) படியும். பம்மும் பம்மும் - அதனால், வான்மீன்கணங்களும் மறையும். இருள் செய்யும் என்றபடி. (அங்ஙனம் இருள் செய்யுமிடத்து) அம்மம்ம - ஐயோ! ஐயோ!மாமை பம்முமம்ம மும்மேமம்பாம்-அழகிய முலை பசலை தழைவதாம் என்றவாறு. எனவே, என் சத்தியவசன மென்னா மென்பது பயனிலை, அடுக்கு அவலப் பொருள் நிலைக் கண்வந்தன, பகுதி- பொருள் வயிற் பிரிதல். துறை - வலவனொடு கூறல், பா - குறள் வெண்பா.

## இருவகையும் வந்த ஓட்டியம்

குருகு மடுவூடு குழுமுகுரு கூரு
ளொருபெரு மானோவா மையூறு-முருகொழுகு
பூமாது வாழும் புவிமாது மேவுமொரு
கோமா னுவாவோது கோ.[4]

அவன் திருவடிகளே கதியென்பது பயனிலை.
துறை - கடவுள் வணக்கம்.

---

1. மாறன். 275
2. மாறன். மேற். 771.
3. ,, ,, 772.
4. ,, ,, 773.

# 36. ஓட்டிய நிரோட்டியம்

ஓட்டியம், நிரோட்டியம் என்னும் இரண்டு தன்மையும் ஒரு செய்யுளகத்தான் இரண்டு கூறு பாட்டான் நடைபெறுவது ஓட்டிய நிரோட்டியம் எனப்படும்.

''இருமையு மொன்றி னுளிருவகைத் தாயுறும் பெருமித
மோட்டிய நிரோட்டிய மெனப்பெறும்''[1]

என்பது நூற்பா.

ஓட்டியமும் நிரோட்டியமும் முறை தடுமாறாது முறையே வந்த ஓட்டிய நிரோட்டியம்:-

(எ-டு) மதிமடவார் வேலைவேய் மாரவேள் சோலை
பதிகுயி லோ டேவன் பகைகூர்—விதியுங்
குறிதோநா கூரா குறிதுளவக் கோதை
முறிகூ யருளே முற,[2]

இதனுள், குறிதோ - ஓரொன்று குறியதுன்பத்தைச் செய்வதோ வென்க,

ஒகாரம் - எதிர்மறை. முறி - தளிர்.

திணை - பெண்பாற் கூற்றுக் கைக்கிளை

துறை - துயரறிவுறுத்தல்.

முன்னடி இரண்டும் ஓட்டியமும், பின்னடியிரண்டும் நிரோட்டியமுமாக வந்த ஓட்டிய நிரோட்டியம்:-

வதுவையொரு போது வழுவாது வாழும்
புதுவைவரு மாதுருவம் பூணு—முதுமைபெறு
நாதன ரங்கனையே நன்றறிந்தார்க் கேயடியேன்
றாதனென நெஞ்சே தரி.[3]

---

1. மாறன் 276
2. மாறன் மேற். 774.
3. மாறன் மேற். 775.

திணை - பாடாண். துறை - சமய வணக்கம்.

உறுமென்ற விதப்பினானே நிரோட்டிய ஒட்டியமும் உள. அவை வருமாறு.

கற்றைச் சடையார் கயிலைக் கிரிகளைந்தான்
செற்றைக் கரங்கள் சிரங்கணிறைந்—தற்றழிய
வேவேவு மெவ்வுளுறு மேமமுறு பூமாது
கோவே முழுதுமுறு கோ.[1]

இது முதலிரடியுந் தனிச் சொல்லும் நிரோட்டியமும் பின்னிரண்டடியும் ஒட்டியமுமாக வந்த நிரோட்டிய ஒட்டியம். இவற்றின் வேறுபாடுகளெல்லாம் வந்தவழிக் கண்டு கொள்க. துறை-கடவுள் வாழ்த்து.

## நிரோட்ட வோட்டியம்

(நேரிசை வெண்பா)

"மாக மழைவண மாக மரைமாதா
வாக மணிமுடிவான் மீனமென—வாகவணி
மாதவா காவலா வாகவிதை பாடவணி
போதமே தாமாதா போல்,"[2]

(இ-ள்) மாகம் - ஆகாயத்திலுள்ள
மழை வணமாக - மேக நிறம் பொருந்த
மரை - தாமரை மலரில் வசிக்கும்
மாதா - இலக்குமியாகிய அன்னை
ஆகம் - மார்பிடத்தே விளங்கவும்
மணிமுடி - துளப மணியாலாகிய கிரீடம்
மீனமென - நட்சத்திரம் போல் ஒளிவீசும்படி
அணி - அணிந்திருக்கும்
மாதவா - மாதவனே
காவலா - காவற் கடவுளே
வா - நீ என்னுள்ளத்தில் வந்து
கவிதை பாட - நாற்கவியும் நான் நலமாகப்பாட
அணி போதமே - அழகிய ஞான போதத்தை
மாதா போல் தா - அன்னை சேய்க்கிரங்குதல் போலத் தரவேண்டும்.

### கருத்துரை

மாதவனே! காவற் கடவுளே! மேகம் போன்றவனே! இலக்குமி உறையும் மார்ப! நான், ஆசு, மதுரம், சித்திரம் வித்தாரம் என்னும் நாற்கவியும் நலமாகப் பாட அணிபெற அளிப்பாயாக.

---

1. மாறன். மேற்-776.
2. பி. வி. அப்துல்கபூர். சித்திரகவி மாலை 3. திருமால்துதி.

# 37. அக்கரச் சுதகம்

முழுவதும் நின்று ஒரு பொருள் பயப்பதாயும், ஒவ்வோரெழுத் தாக நீக்க வெவ்வேறு மொழியாய் வெவ்வேறு பொருள் பயப்ப தாயுமுள்ள ஒரு சொல்லை எடுத்துக் கொண்டு பொருள்கள் காட்டிப் பாடப்படுவது அக்கரச் சுதகமாகும். அக்கரம்-எழுத்து; சுதகம் - குறைத்தல்,

இதை,

> "ஒருபொருள் பயந்த ஒருதொடர் மொழியாய்
> வருவதை ஓரெழுத் தாய்க்குறை வகுப்பில்
> சுருங்குபு பலபொருள் தோன்றுவ தாய
> அருங்கவி அக்கரச் சுதகம் ஆகும்"[1]

என மாறனலங்காரம் விளக்குகிறது.

> "ஒருபொருள் பயப்பது ஒருமொழி இருந்ததில்
> ஒவ்வோர் அக்கரம் ஒழிக்கவெவ் வேறு
> சொல்லும் பொருளும் தோன்றுவது எழுத்தழிவு
> ஆகும் என்மனார் அறிந்திசி னோரே"[2]

என முத்துவீரியம் விளக்குமிடத்து அக்கரச் சுதகத்தை 'எழுத் தழிவு' என்று கூறுகிறது.

> "......ஒருசொல்
> எழுத்து ஒரொன்று அறப்பொருள்வே
> றாம் எழுத்துச் சுதமே"[3]

என்னும் சுவாமிநாதம் பாடலடிகள் அக்கரச் சுதகந்தை எழுத்துச் சுதம் என்றே விளக்குகிறது.

---

1. மாறன். 277
2. முத்து வீ. சொ. 17.
3. சுவாமிநாதம். 197

(நேரிசை வெண்பா)

(எ-டு) 'தனக்கென வாழா ததற்குவமை யோர்பூ
மனக்கவலை கொண்டாரை மாற்றும்—பனிமொழி
தார்சேர்தோட் சண்முகம் தானம் கொடுப்பது
கார்கேத கைதகை கை.'[1]

(இ-ள்) தனக்கென வாழாத திரு. சண்முகத்திற்கு உவமை ஒரு பூ. அது தாழம்பூ. திரு. சண்முகம் தாழம்பூவைப் போல் தன்னை யணிவோருக்கு மணமீயாமல் பிறருக் கீவது போல் (தாழம்பூ அணிந்தவருக்கு மணந்தராமல் பிறருக்கே மணந்தரும்) தன் சுகம் கருதாமல் பிறர் சுகம் கருதுவது. தன்னைக் கவலை யோடு வந்தடைந்தாரை அன்பு மொழியால் உபசரித்து தான மாகக் கொடுத்துக் காப்பது மேகம் போன்ற கை.

## குறிப்பு

தாழம்பூவின் பெயர் - கேதகை. 'கேதகை' என்பதில் 'கே' என்பதைக் குறைத்தால் - தகை=அன்பு. மனக் கவலையோடு தன்னை யடுத்தவரை அன்பு மொழி கூறுதல். தலைவனியல்பு—தகை.' இதில்'த' என்பதைக் குறைத்தால்—கை=தானம் கொடுப் பது கை.

கேதகை - தகை - கை மூன்றும் பொருளுடன் அமைந்திருப் பதைக் காணலாம்.

---

1. பி.வி. அப்துல் கபூர். சித்திரகவி மாலை. பா. 35

# 38. வக்கிரவுத்தி

மாறனலங்காரம் குறிப்பிடும் புதிய சித்திரக் கவிகளில் வக்கிர வுத்தியும் ஒன்றாகும். வக்கிரவுத்தி என்பது, வெளிப்படையாக விளிக்குமிடத்தும், வினாவுமிடத்தும் முன்னின்ற பொருண்மையை மறைத்துப் பிறிதொன்றாக வெதிர்மொழி கொடுத்தவிடத்து மீட்டுந் தெளிவிப்பனவாய் நிரைத்த தொடர் மொழி தோறும் அம்முன்னின்றவ ரிரட்டுற விசைதிரி நிலைத்தாயுரைப்பதாகும். வக்கிரம் - மீள மடங்குதல், உத்தி - தந்திரஉத்தி.

> "வெளிப்படை விளியினும் வினாவினு மெய்ம்மை
> யொளித்துமற் றொன்றினை யுரைப்புழி மறித்து
> நிரைத்தபன் மொழிதொறு மிசைதிரி நிலைத்தா
> யுரைப்பது தானே வக்கிர வுத்தி"[1]

என்பது மாறனலங்காரம்.

(எ-டு) "ஏற்றமுறு மோதிமத்தா வென்றேன் விண்ணோர்க்
கின்னமுதன் றளித்தவன் பேரென்றான் வெற்பிற்
றேற்றமுறு மெகினவா கனத்தா வென்றேன்
றொன்மறையோன் பெயரென்றான் சுரந்து விண்ணோர்
போற்றவரு மன்னவா கனத்தா வென்றேன்
புரந்தரனார் பெயரென்றான் பொன்னே யென்னே
மாற்றமுறப் பகர்ந்தமகிழ் மாறற் கெந்தன்
மையலுரைத் தெவ்வாறு மருவு வேனே."[2]

இது வக்கிரவுத்தி.

---

1. மாறன். 279
2. ,, மேற். பா. 779

சி—13

(இ-ள்) பொன்னை யொப்பாய்! நமது வீதியி லுலாப் போந்த மகிழ்மாறரைத் தொழுத யான், ஒருதலை பற்றிய காதலாலே யேறுதற் குண்டான வோதிமத்தை யுடையவனே யென்றேன்; அப்பொழுது மலையை மத்தாகவுடையவனெனும் பெயரென் பெயரன்று, திருப்பாற் கடலைக் கடைந்து இனிய அமிர்தத்தைத் தேவர்கள் உண்ணும் படிக்குக் கொடுத்த திருமால் பெயரென்றான். மீட்டும் வெள்ளிமலை போன்று பிரகாசிக்கும் எகினவாகனத்தா வென்றேன்; அப்பொழுது அதற்குமிமவானிடத்துப் பிறந்த அன்னம் போலு நடையையுடைய உமையை வாம பாகத்திலுடைய சிவனது அத்த னென்னும் பெயர் பழைய மறையையுடைய பிதாமகன் பெயரென்றான். மீட்டும் சுரந்து விண்ணோர் போற்ற வரும் அன்னவாகனத்தா வென்றேன்; அதற்குத் திரண்டு தேவர்கள் போற்று மன்னவனே! மேகத்தை யுடையவனே என்னும் இருபெயரும் புரந்தரனது பெயரென்றான்; ஆகையாலென்ன? யான் கொண்ட மையலை யவனொடு கூறி யவன்திரு மார்பைத் தழுவுவ தெவ்வாறு என்றவாறு. பொன்னே என்றது தோழியை. திணை - பெண்பாற் கூற்றுப் பெருந்திணை. துறை - மெலிவொடு கூறல்.

(எ-டு)2 ''அஞ்சக்கர னோவென் றேன்சங்
கரனாமென் றான்றனி யாழி
மிஞ்சத்தரித் ததிருத் தேர்வெய்
யவனோ வென்றேன் வெயிலென் றான்
செஞ்சொற் பரிதிவலம் பயில்விண்
டோவென்றேன்பொற் சிலம்பென் றான்
வஞ்சர்க் கிரங்கா வரங்கனுக்கென்
மாலெப் படியே மொழிவேனே.

இது வக்கிரவுத்தி

(இ-ள்) அழகிய சக்கரத்தையுடையானோ வென்றேன்; அப்பொழுது அஞ்சக்கரங்களையுடையவன் உருத்திர னாமென்றான். ஒப்பற்ற திருவாழியை வலது கையிற் தரித்தவனுமாய்த் திருமகளைச் சிந்திக்கிறவனுமாய்த் திருமகளாற் சிந்திக்கப்பட்ட விருப்பத்தை யுடையானோ வென்றேன்; அப்பொழுது மது வெயிலோனென்றான். மீளவுஞ் செம்மையோடு கூடிய கீர்த்தியையுடைய பரிதியை வலது கையிற் தரித்த விண்டுவோ வென்றேன்: அதற்கும் அது பொற்சிலம்பென்றான்; ஆகையால் வஞ்சத்தையுடையோரிடத்துக் கருணை செய்யாத் திருவரங்கேசனுக்கு யான் கொண்ட காதலை எப்படியே கூறுவேன் என்றவாறு.

துறை - மெலிவொடு கூறல்.

முன்னது வெளிப்படை விளியினும் பின்னது வெளிப்படை வினாவினும் அடைவே வந்தவாறு காண்க.

# 39. பதும பந்தம்

இதுவே, கமல பந்தம், தாமரைப்பூ பந்தனம் என்றும் கூறப் படும். பதும பந்தம் என்னும் வகையை மாறனலங்காரமே முதன் முதலில் விளக்குகிறது.

பதுமம் - தாமரை. பந்தம் - கட்டு, தளை

ஒரு தாமரையை எட்டு கோணினும் இவ்விரண்டாகப் பதி னாறு இதழ் எழுதி நடுவே ஒரு பொகுட்டினையுங் காண்பதாக்கிச் செய்தமைப்பது பதும பந்தம்.

''எண்ணிரண் டிதழாய்க் கோணிரு நான்கின்
கண்ணுற நடுவணப் பொகுட்டது காட்டிப்
பண்ணமைப் பதுவும் பதும பெந்தம்''[1]

என்பது நூற்பா.

(சிந்தடி விருத்தம்)

(எ-டு) ''மாதேவீ மாலா மாதேவீ
மாதேவீ டானா மாதேவீ
மாதேவீ யாளே மாதேவீ
மாதேவீ மாலா மாதேவீ''[2]

(இ-ள்)1. மா - லட்சுமிக்கு. தே - நாயகனாம்
வீ - பறவை (கருட) வாகனமுடைய,
மாலாம் - திருமாலாம். மாது - விரும்பத்தக்க
ஏவீ - அம்பை உடையவனே

2. மாதே - பெண்ணே
வீடானாம் - அழியாதவனாம்

---

1. மாறன். 283
2. வைஷ்ணவி சந்நிதிமுறை. பா. 529

## பதுமபந்தம்—1



மா - சிறந்த
தேவு - கடவுளை (முருக வேளை)
ஈ - பெற்றெடுத்த

3. மா - தாயே
தே - கிருபை
வீயாளே - நீங்காதவளே
மாதே - அசைச்சொல்
ஈ - தேனீக்களும்

4. மா - வண்டுகளும் நிறைந்த
தே - தெய்வத் தன்மை பொருந்திய
வீ – மலர்களாலான
மாலா - மாலைகளை அணிந்த
மாதேவீ - மகா தேவியே

## கருத்துரை

திருமாலாம் அம்பைக் கொண்டவனே! முருகனைப் பெற்றவளே! கிருபை நீங்காதவளே! தேனீக்கள் மொய்க்கின்ற மலர் மாலைகளை அணிந்த மகா தேவியே!

## குறிப்பு

சித்திரத்திலுள்ளவாறு,

| | | | |
|---|---|---|---|
| 1,2,3,4,5,1,6,7 | — கூட்டிப்படிக்க | முதலடி | முடியும் |
| 1,6,7,8,9,1,10,11 | — ,, | இரண்டாமடி | ,, |
| 1,10,11,12,13,1,14,15 | — ,, | மூன்றாமடி | ,, |
| 1,14,15,16,17,1,2,3 | — ,, | நான்காமடி | ,, |

## பதும பந்தம் (வேறு)

'வானவாரிசங் கோவளை வாரபாலதா மன்னவா
வானநீர வசலநேர் வாககித்தார மீனவா
வானமேவின மேருவே வாழிநாட்டும்ப ரானவா
வானராதிபா வாடினே னணையா னாகர்கோ மானவா'[1]

இப்பாடல் தஞ்சாவூர் கோபாலகிருஷ்ண பிள்ளையவர்களுக்கு சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் பாடியது.

---

1. சதாவதானம் சுப்பிரமணிய ஐயரியற்றிய பலபாடற் றிரட்டு (முதற்பாகம்) பா. 192.

இப்பதும பந்தத்தில் விளிம்பினின்று மூன்றாவது அடுக்கி லுள்ள எட்டு இதழ்களில் (கோபால கிருட்டினா) எனவும், ஐந்தாவது அடுக்கிலுள்ள எட்டு இதழ்களில் (சதாவதானம் பார்) எனவும் வந்துள்ளதைக் காணலாம்.

## பதும பந்தம் (வேறு)

மூன்று தனித்தனி வெண்பாக்களில் மூவர்மீது பாடிய பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தாமரை மலரில் அடங்கும் படியாகவும் பாடப்படும்[1].

இம்மூன்று பாடல்களும் மூன்று மலர்களில் அமைத்து, அம் மூன்று மலர்களும் இணைந்துள்ளது போல அமைப்பர்.

1. பி. வி. அப்துல் கபூர் - சித்திரகவி மாலை.

## 40. முரச பந்தம்

முரச பந்தமாவது, நான்கடிச் செய்யுளாய், மேலிரண்டடியும் தம்முட் கோமூத்திரியாகவும் சிறுவார் போக்கி, முதலடி முதல் தொடங்கி இரண்டாமடியினும் நான்காமடியினுங் கீழுற்று மீண்டு மேலே போய்க் கீழேயிறங்கி முடியவும், இவ்வாறே இறுதியடிமுதல் தொடங்கிமேலே போய்க் கீழேயிறங்கி மேலே போய்முடியவும்தக்க தாகப் பெருவார் போக்கி எழுத்துக்களமையப்பாடப்படுவதாகும்.

முரசம்-மிருதங்கம். பந்தம்-கட்டு, தளை.

''எழுதிய வரிநாலி னுள்முத வீறன
பழுதற மந்திரிச் செலவாய்ப் படர்ந்தயல்
ஒழுகியும் கீழ்மேற் றனதீற் றுற்றபின்
அறைதொறும் ஏனைய அடைவே பாதியின்
முறைதடு மாறுதல் முரச பெந்தம்''[1]

என மாறனலங்காரமும்.

''எந்தமனை நேர்ந்தாலுமேபாவி சைவதுதா
னந்த முரசபந்த மாகுங்காண்—முந்துகோ
மூத்திரியில் பந்தமனை முப்பான்மே லீரேழுஞ்
சேர்ந்தபதி னெட்டுமே செப்பு.''[2]

எனப் பிரபந்தத் திரட்டும்,

''உங்குவரி நான்கடிநான் காய்க்கோமூத் திரிபோல்
உயர்ந்தவரி இரண்டுசிறு வாராய்மேல் வரிகீழ்
இங்கு பிறவரியின்மேல் கீழ்மூக்காய்ப் பெருவார்
எனப்புகறல் முரசுபெந்தம்''[3]

எனச் சுவாமிநாதமும் இதை விளக்குகின்றன.

---

1. மாறன். 284
2. பிரபந்தத்திரட்டு 1. திரட்டியல். 57.
3. சுவாமி. 199.

(எ-டு)

"கான வாரண மரிய வாயினனே
தான வாரண மரிய வாயினனே
மான வாரண மரிய வாயினனே
கான வாரண மரிய வாயினனே"[1]

(இ-ள்) இனன் மான வாரணம் அரிய வாயினன்—சூரிய குலத்தவனாகிய சோழன் வலிய போர் புரிந்து தடுத்தலைப் பொருந்திய இடங்களையுடையவனாகிய பகையரசன்.

கானம் ஆரணம் அரியவாய்—இசையினையுடைய வேத முழக்கங்களுமில்லாதனவாய்,

இனன் ஏ தான வாரணம் அரியவாய்—கூட்டமாகப் பொருந்திய மதயானைகளின் முழக்கங்களு மில்லாதனவாய்,

கான வாரணம் அரிய வாயினன்—காட்டுக்கோழி சிங்கம் என்பவற்றின் ஒலிகளையுடைய இடங்களுடையவனாயினன்.

இனன்-சூரியன்; சோழன்; அரசன்,
வாரணம்-தடை, யானை, கோழி, வாய்-இடம்.

## கருத்துரை

சோழன் வலிய மிக்க போர் செய்த இடமானவை,இசையோடு கூடிய வேதம் அறியவாய்க் கூட்டம் பொருந்திய மதயானை யரியவாய்க் காட்டுக் கோழியையும் சிங்கங்களையுமுடையவாயின.

இப்பாடலில் உள்ள நாற்பத்தெட்டு எழுத்துக்களுள் நாற்பத்து நான்கு தம்முள் ஒத்தவை.

முரசத்தில் வேறொருவாறு வார்போக்கி எழுத்தமைப்பதை மாறனலங்காரத்தில் காணலாம்.

## முரச பந்தம் (வேறு)

ஏகபாதமாக அமையும் நான்கடிப் பாடலையும் முரச பந்தத்தில் அமைப்பதைப் பின்வருமாறு காணலாம்.

(ஏகபாதக் கலி விருத்தம்)

"பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா
பாத தாமரை தந்தனை யேகுகா"[2]

---

1. தண்டி. மேற். பா.
2. கந்தன் சித்திரபந்தன மாலை. பா. 38.

(இ-ள்)

1. பாதத்தா—செய்யுட்கள் தவராமல்.
மரு—(திருவருண்) மணமாகிய,
அனை—அன்—ஐ நன்மையை இன்மை செய்யும் கோழைத் தனத்தை,
யேகுகா—போகும்படி காப்பாய்.

2. பா—பரந்த உலகங்களை உண்டாக்கும்
த—பிரமன், தாமர்—கற்பகப் பூமாலையணிந்த தேவர்கள்
ஐ—பிதாவாகிய சிவன். (இவர்களுக்கு)
தந்து—கல்வி நூலைக் கொடுத்து,
அல்நை—அஞ்ஞானத்தை நசிப்பித்து,
ஏ—வியப்பையுடையவனே.
கு—பூலோகத்தில்
கா—கற்பகம் போல் பலிக்கத்தக்க,

3. பாத—(செய்யுளின்)—அடிகளை, தா—கொடுத்தருள்க.
மரை—வள்ளி மானிடத்தில்.
தந்தனை—கொம்புகளையுடைய யானையாகிய கணபதியை பயமுறுத்தும்படி
ஏ—செலுத்தியவனே
குகா—குகக்கடவுளே. (இருதய குகையிலிருப்பவனே)
பாத தாமரை—உன்னுடைய திருவடித் தாமரைகளில் வெளிப்படுகின்ற,
தந்து—நூல் போன்ற கருணையானது.
அனையே—என்னை மேல்வழிக்கேற்றுந் தாயொத்ததேயாம்.
குகா—ஆதலால் என்னைக் குற்றமில்லாது காப்பாய்.

## கருத்துரை

இன்மை செய்யும் கோழைத்தனத்தைப்போகும்படி காப்பாய். பிரமன், தேவர், சிவன் இவர்களுக்குக் கல்வி நூலைக் கொடுத்துக் காப்பவனே, கற்பகம்போல் பலிக்கத்தக்க செய்யுளடிகளைக் கொடுத்தருள்க. வள்ளியைப் பயமுறுத்தும்படி யானையாகிய கணபதியைச் செலுத்தியவனே. உன்னுடைய திருவடிக் கருணை யானது என்னைக் கடைத்தேற்றுவதாம் எனவே என்னைக் காப்பாயாக.

# 41. இரத பந்தம்

சதுரங்க வறையுட் தேர் செல்வது எனவும், மந்திரி செல்வ தெனவு ஒரு செய்யுட் குண்டான எழுத்துக்களைத் தேரின தறைக்கு நடுவே ஒரு திருநாமமாதல் ஒரு பழமொழியாதல் அழகு பெற்று நிற்க இரதத்தில் பந்திப்பது இரத பந்தமாகும்.
இரதம் - தேர். பந்தம் - கட்டு, தளை

"தேரென மந்திரிச் செலவெனச் செய்யுளை
யேர்தர வடக்குவதி ரத பெந்தம்"[1]

என்பது மாறனலங்காரம்.

இரத பந்தம் என்பது பல வகைகளில் அமைக்கப்படுகின்றது. எடுத்துக்காட்டாக.

1. வெண்பா, ஆசிரியப்பா போன்ற யாப்பு வடிவங்களைக் கொண்டு அமைப்பது.

2. ஒரு வெண்பாவிலேயே இரத பந்தத்தை முடிப்பது.

3. தேரின் மேல்தட்டு, கீழ்தட்டு என இரு தட்டுகளுக்கும் இரு பாடல்களை அமைப்பது,

4. தேரின் இருதட்டுகளுக்கிடையே தூண்களிலும் எழுத்துக் கள் அமையப் பாடுவது.

5. தேரின் சக்கரங்களில் எழுத்துக்கள் அமையும்படிபாடுவது.

6. தேரின் சக்கரத்தில் ஒவ்வொரு எழுத்து மட்டுமே அமைப் பது.

7. தேரின் நடு, இடைத் தட்டை ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று என இவ்வாறு அமைத்துப் பாடுவது என வெவ்வேறு வகைகள் அமைகின்றன.

---

1. மாறன். 286

## இரத பந்தம் - 1



## இரத பந்தம்

(நேரிசை வெண்பா)

(எ-டு) "ஆதி பதிபாக மாமாது பாலாவா
சேதிகாப் பாயினத் தீயகுல—ஏதியரை
முந்தவே வென்று முனிதவரை ஏந்து
கந்தவே லப்பா கதி."[1]

(இ-ள்) முதல்வனே! உமையம்மை பாலனே! தீய குண முடைய பகைவரை வென்றவனே! முனிவர்க்கு அருள்வோனே! உன்னையே கதியென அடைந்தேன். என்னைக் காப்பாயாக. ஏதியர் - பகைவர்

## குறிப்பு

இவ் ஒரே வெண்பா தேர் முழுவதும் அமையும்படி எழுத்துக் களைக் கொண்டுள்ளது. இதில் மொத்தம் 52 எழுத்துக்கள் உள்ளன. சித்திரத்தில் 43 எழுத்துக்களே அமையும். இவற்றுள் சில தம்முள் பொருந்தி அமைகின்றன. அவை, 2/4/52 ஒரே எழுத்தாக வும், 6/51, 10/50, 16/49, 24/48, 32/47, 38/46, 42/45 எழுத்துக்கள் பொருந்தி வருகின்றன.

ஆக, ஒத்த எழுத்துக்கள் ஒன்பது குறைய இப்பாடலின் 52 எழுத்துக்களும் 43 எழுத்துக்கள் என்ற அளவில் சித்திரத்தில் நின்று முழுப்பாடலையும் பொருளையும் தருகின்றன.

இடைத்தட்டில் 9 எழுத்துக்கள் அமைகின்றன.

## இரத பந்தம் (வேறு)

1. "நாராரா ராய நயனயணா விண்ண்
ணாரா மணாயனில மாயவா—சிராய
நன்கா நமநமநன்கா நமநம
மன்காமன் றாதாய் நம"[2]

2. "மாயவனே வேத மதியே வயநாக
பாயவனேதே நளினபா தாபராபரா
தூயவனே காரணா பூரணா தோணிலமா
னாயகனே சிராக நாராய ணாயநம"[3]

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 22
2. மாறன், மேற். பா. 791
3. ,, ,, 792

(இ-ள்)1. நாரார் - அன்பினையுடையார்

ஆராய் அநயன் - ஆராயப்பட்ட அந்தப் பேரின்பத்தி னிடத்து

அயணா - வியாபரிக்கப் பட்டவனே!

விண் - ஆகாயமும். ஆராம் - மிகுந்த செல்வமும்.

மண் - நிலமும். ஆய் - ஆகி. அனிலம் - காற்றும்

ஆயவா - ஆனவனே

சிராய - பொலிவினையுடைய நந்த கோபாலனே!

நன்காநமநம - நன்மையையுடையவனே!

மன்காமன் - மகளிராடவர்க்கரசனாகிய மன்மதன்

தாதாய் - தந்தையே

நம - உன்னை மீளவும் எனதான்மாவைக் காத்தற் பொருட்டு வணங்குகிறேன்.

இதனுள் நடுவும் இருபக்கமும் நாராயணாய நம வென நின்ற வாறு காண்க.

2. சீர் - திருமகள்

தோள் நிலமான் - பூமிதேவி

இதனுள், நடுவே நாராயணாய நம வென்னுந் திருநாமம் நின்றவாறு காண்க.

## இரத பந்தம் (வேறு)

(நேரிசை வெண்பா)

1. "நானே வலவேலை நம்பினேன் சண்டசமன்
தானேவு பாசமிலிச் சங்கிவிழத்—தானேப
மால்தனிமா மாப்பிளையே மால்கால் பழனிமலை
வேலவனே கந்தா விளம்பு."[1]

2. "ஆமாறு வீருதிகழ் ஆரணனே யாற்றுபவம்
போமாறு மாபதி பூரணி—கோமேலள்
சேயே குமாரகுல திப திருவீறு
மாயோன் மருகா மதி"[2]

(இ-ள்) திருமால் மருகனே! பழனிமலை யுறைவோனே! உன்னையே நம்பினேன். என் பந்த பாசங்களை நீக்குவாயாக.

மாயோன் மருகனே! இடபவாகனத்திலமரும் உமை பாலனே! குல விளக்கே! என் குறை போக்குவாய்.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 24
2. ,, ,, ,, பா. 25

# இரத பந்தம்-3


ர
மா கு யே
கோ மே ல ள் சே
ணி ர டூ தீ ப மா று
னே யா ற் று ப வ ம் யோ மா
ண ர ஆ ழ் க தி கு வீ று மா ஆ
பு ம் ள வி தா ந் க
யோ ன் ம ரு கா ம தி
நா னே வ ல வே லை ந ம் பி னே ன்
வு ளே நா ன் ம ச ட ன் ச
பா ச மி ணி ச் ச ங்
தா த் ழ வி கி
னே ப மா
ல்
மா ல் கா ளை யே
பி
தி ணி ப் மா மா

## குறிப்பு

1. கீழ் தட்டிலுள்ள பாடல்:- (64 எழுத்துக்கள்)

இதில் 2/57, 3/56, 4/55, 5/54, 6/53, 16/52, 24/52, 30/50, 34/49, 36/48 எழுத்துக்கள் பொருந்தியுள்ளன.

சக்கரத்தில் 5-5 ஆகவும், அச்சில் 1-ஆகவும் ஆக எழுத்துக்கள் 64-ம் பொருந்தியுள்ளன.

2. மேல் தட்டிலுள்ள பாடல் : (52 எழுத்துக்கள்)

இதில் 2/45, 3/44, 4/43, 5/42, 6/41, 16/40, 24/39, 30/38, 34/37 எழுத்துக்கள் பொருந்தி உள்ளன. ஆக எழுத்துக்கள் 52.

நடுவே, இடையிலுள்ள தட்டுக்களில் மட்டும் 11 எழுத்துக்கள் அமைகின்றன.

## இரத பந்தம் (வேறு)

(இன்னிசை வெண்பா)

1. "தான்தான் பணத்தினையித் தாரணியில் தேடிவைத்தின்
றேன்காணோ மீந்துவந் தின்கவிபெற் றோர்வாசச்
சிரார்ந்தா ரிச்சகத்தே தேமலிபூ மாராநீ
தாராமச் சந்திரத்தா தா."

2. "தாகவியை யச்சிட் டரங்கேற்று வியப்பின்சி
ராகவுல கந்தெய் விகதாரா மாமணியாப்
போற்றவே பூமனை மாதாநீ சேயேநான்
சாற்றினன்நீ தாமாரா தா."

(இ-ள்) 1. உலகில் அவரவர் பணந் தேடினார்கள். முன்பு அப்படித் தேடின பேர்களை இன்று ஏன் காணவில்லை. புலவருக் கீந்தவர்கள் உவந்து இனிய பாடல்களைப் பெற்ற வள்ளல்கள், இவ்வுலகில் புகழ் பெற்றுப் புகழுடம்போடு வாழ்கின்றனர். ஆத லால், தேன் நிறைந்துள்ள பூமாலையை மார்பிலணிந்தவனே. நீதி தவறாதவனே, தாதாவாகவுள்ள ராமச்சந்திர வள்ளலே, எனக்கு நீ தர வேண்டியது எதுவென்றால்,

2. உலகில் பரவும்படி என் கவிகளை அச்சிட்டு அரங்கேற்று வித்தால், உலகினம் சீரோடு உன்னைப் போற்றி, தெய்வீகமான கற்பகம், காமதேனு, சிந்தாமணி என்று புகழ்வார்கள். எனக்கு

---

1. 2. சித்திரகவி மாலை. பா. 16

## இரத பந்தம்--4


தா
மா ரா நீ
பூ லி ம தே தே
ந் தா ரி ச் ச க த்
ர் ரா சீ ச் ச வா ர் றோ ற்
ஸே மீ ந் து வ ந் தி ன் க வி வெ
கா ன் றே ன் தி த் வை ழ தே
யி த் தா ர ஸி யி ல்
னை தி த் ள ப
ன் தா ன்
தா
க ரா

அழகான மனையொன்று தரவேண்டும். வள்ளலான நீ தாய் போன்றவன். புலவனாகிய நான் சேய் போன்றவன். இஃதுண்மை யென்றறிந்து சொன்னேன். மன்மதன் போன்ற நீ தவறாமல் கொடுக்க வேண்டும் என்பதாம்.

## குறிப்பு

இந்த இரத பந்தத்தில் சக்கரங்களில் அதிக எழுத்துக்கள் அமைகின்றன.

1-எண்-தாவிலிருந்து மேலே மேலே படித்து உச்சியிலிருந்து இறங்கினால் முதல் வெண்பா முடியும்.

தா-என்பதிலிருந்து வலது சக்கரத்திலிறங்கி சுற்றிப் படித்து உள்ளே புகுந்து வந்த வழியாகவே வந்து, இடது சக்கரத்தி லிறங்கிச் சுற்றிப்படித்து மீண்டும் தாவுக்கு வர இரண்டாவது வெண்பா முடியும்.

# இரத பந்தம் (வேறு)

(நேரிசை ஆசிரியப்பா)

"பூவே வாவே புகழ்கமழ் வளம்பெற
வாணி நீவா வாக்கு விறலுற
வாசக் கற்போ ருருவாய் வந்தே
திருமா ஞானஞ் சிலந் தருமம்
இல்லறம் மிளிர வேபணி புரியும்
சுகுண மாது தூய மாட்சி
நீடூழி நிலவ வணிதார்
சீதா லட்சுமி சீருற வாழ்கவே."[1]

(இ-ள்) இலக்குமி போன்ற செல்வமுடையோளே! வாக்கும் வளமும் பெற்ற வாணியே! சிலமும் தருமமும் தூய குணமும் ஒருங்கே நிலை பெற அமைந்துள்ளவளே நீ நீடூழி வாழ்வாயாக.

இது திரு. டி. கே. சண்முகம் அவர்கள் துணைவியார் சீதா லட்சுமி அம்மை மீது பாடியது.

## குறிப்பு

இவ் ஆசிரியப்பாவை இரத பந்தமாக அமைக்க, ஒவ்வொரு சக்கரத்திலும் ஒரு எழுத்தும் தேர்த்தட்டுக்களில் ஒவ்வொரு

1. சித்திர கவி மாலை. பக். 109-110.

## இரத பந்தம்-5


சீ
ணி தா ர்
வ வ ல நி ழி
தூ ய மா ட் சி நீ டு
து மா ண கு சு ம் யு ரி பு
இ ல் ல ற ம் மி ளி ர வே ப ணி
ம் ம ரு த ந் ல சீ ஞ் ன தா மா ரு தி
க் க த் யோ ரு ரு வா ய் வ ந் தே
ச வா ற லு ற வி கு க் வா
ம் பெ ற வா ணி நீ வா
ள வ ழ் ம க
பு க ழ்
வே
பூ
வா

எழுத்துமாக அமையும். தேரின் நடுவே உள்ள தட்டு 13 எழுத்துக் களைக் கொண்டது எழுத்துக்களை முறையாகப் படித்து, மேலிருந்து கிழ் நோக்கிப் படிக்க, நடுக்கோட்டில் பாடலின் இறுதி யடி முடியும்.

## இரத பந்தம் (வேறு)

(நிலை மண்டில ஆசிரியப்பா)

''பூவே நாவே புகழ்திகழ் சண்முகம்
வாச மருகன் மண்ணுல கேத்தும்
கற்புள தாயார் மீனாட்சி கருவில்
நவமணி நல்ல கண்ணுப் பிள்ளை
மாசிலாத் தவமோ ருருவாய் வந்தோன்
துதிகொள் சங்கர தாசர் சொந்த
மாணவ னாகி முருகவேள் மலரடி
நம்பும் நம்பி ஒப்பிலா வரிய
சிரிப்பு வேந்து சிவதாணு வாழ்கவே''[1]

(இ-ள்) திருமிகு கண்ணுப்பிள்ளை - மீனாட்சி இவர்கள் பெற்ற தவப் புதல்வனே! சங்கரதாச சுவாமிகள் மாணவனே? முருகனடி யோனே! புகழ்மிக்க சண்முகத்தின் நண்பனே! ஒப்பற்ற சிரிப்பு வேந்தனே சிவதாணுவே நீ நீடுழி வாழ்க.

இது, தி. க. சண்முகம் அவர்கள் மருகரும் நடிகருமாகிய சிரிப்பு வேந்தன் சிவதாணு அவர்கள் மீது பாடிய இரத பந்தம். வாழ்த்து.

### குறிப்பு

இதுவும் முந்தைய இரத பந்தம் போன்றதே. ஆயின், இதில் இடையிலுள்ள எழுத்துக்கள் 15 ஆக இருப்பது குறிப்பிடத்தக்கது· முந்தைய பாடலை விட ஓரடி மிகையாகவும், நிலைமண்டிலமாக யும் (ஈற்றயலடிநான்கு சீர்) இப்பாடல் அமைந்துள்ளதும் அறியத் தக்கது.

## இரத பந்தம் (வேறு)

(நேரிசைக் கலி வெண்பா)

''பார்வந்து சேணாடர் பாவின்ப நன்றாய
வேர்தந்து பேருந்து மேணதாந்-தேர்தந்து 1



1. சித்திர கவிமாலை, பக். 111-113,

மெய்ம்மை நெறிபலமா மேவிடவே நாடியிருட்
பொய்ம்மாயம் போக்கும் பொருளதா-முய்யச் 2

சகமுற்றுஞ் சாற்றுசைவ மேனெறித்தா மோன
சுகமூறு பேரேய சூழ-லிகத்தே 3

திருஞான சம்பந்த தேசிகரா னேய்பார்
தருவன்ன தன்மபுரச் சிர்க்சொக்-கரையுன்னிச் 4

சார்வான்பேர்த் தற்பரனைப் பற்றுவயத் தூயபதச்
சிர்ஞான சம்பந்தன் சேர்.[1] 5

இப்பாடல் தருமபுர ஆதீன மடாதிபதி மீது திருத்தருப்பூண்டி தமிழ்ப்பண்டிதர் மு. இராமையா பாடியதாகும்.

இப்பாடலை இரத பந்தத்தில் அமைக்க, இரதத்தின் இடையிலுள்ளதட்டுக்களிலுள்ள எழுத்துக்கள் 17 ஆக அமையக் காணலாம்.

---

1. தோத்திரப் பாட்டுத்திரட்டு பக். 33.

# 42. பிரிந்தெதிர் செய்யுள்

ஒரு செய்யுள் முதலே முடிந்தால் அச்செய்யுளீற்றெழுத்துத் தொடங்கி எதிரேறாக நடந்து வேறோர் செய்யுளாக நிகழ்தல்.

இவ்வகையை மாறனலங்காரம் மட்டுமே குறிப்பிடுகிறது,

"பிரிந்தெதிர் வனவே பிரிந்தெதிர் செய்யுள்"[1]

என்பது நூற்பா.

(வஞ்சித்துறை)

(எ-டு) "நீர நாகமா
தார மாகமே
வார மாகமா
ணார ணாககா"[2]

இதனுள், பிரிந்தெதிர் செய்யுளாவது,
காக ணாரணா
மாக மாரவா
மேக மாரதா
மாக நாரநீ'!

என்பதாம்.

(இ-ள்) 1. நீர நாக - நற்குணத்தனே, அனந்த சயனத்தனே.
மா தாரமாக - திருமகளைப் பாரியாக.
மே வாரமாக - பொருந்து மாரங் கிடக்கும் மார்பனே.
மாணாரணாக - பெருமையையுடைய வேத சொருபனே!
கா - என்னைக் காப்பாயாக.

---

1. மாறன். 290.
2. ,, மேற். பா. 796.

2. மாக மாரவாம் - துறக்கத்துள்ளார் பெருக விரும்பும்.
நார - நற்குணத்தையுடையவனே.
மேகமா க - மேகத்தைப் போலுந் திருமேனியை
யுடையவனே.
மாரதா - சத்துருக்களை வெல்லு முழுத்த வீரனே.
நாரணா - நாராயண னென்னுந் திருநாமத்தவனே.
நீகண் - நினது சொரூப ரூபகுண விபூதிகளை மயக்க
மற அறிவதற்கு நீயே எமக்கு ஞானக்கண்
ணானதால்.
கா - எம்மைக் காப்பாயாக.

துறை - கடவுள் வாழ்த்து.

## 43. பிறிதுபடு பாட்டு

ஒரு செய்யுளைத் தொடையும் அடியும் வேறுபட உரைப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறு ஒரு செய்யுளாகப் பாடுவது பிறிதுபடு பாட்டாகும்.

''பிறிது ஒன்று ஆதல் பிறிதுபடு பாட்டே''[1]

என மாறனலங்காரமும்,

''பாவடி தொடைகளும் படுப்ப வேறு
மேவருஞ் சொற்பொருள் வேறு படாமல்
மற்றொரு பாவாய் வருவது பிறிது
படுபாட் டெனப்பெயர் பகரப் படுமே''[2]

என முத்துவீரியமும்,

''பாஎனினும் இனம் எனினும் ஓர் கவியாய்ப்
பதம் எதுகை பொருள்ஒப்பச் சொல் பிறிது கவியாம்''

எனச் சுவாமி நாதமும் இதை விளக்குகின்றன.

(எ. டு.) (கட்டளைக் கலித்துறை)

''தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும் பரிசுகொண்டு
வரியளி பாட மருவரு வல்லி யிடையுடைத்தாய்த்
திரிதருங் காமர் மயிலிய லாயநண் ணாத்தேமொழி
யரிவைதன் னேரென லாகுமெம் மையயா மாடிடமே''[3]

என்னும் இப்பாடலே பின்வரும் நேரிசை ஆசிரியப்பாவாக அமையும்.

---

1. மாறன். 291
2. முத்து வீ. சொ. 25
3. தண்டி. மேற். பா.

(நேரிசை ஆசிரியப்பா)

''தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும்
பரிசு கொண்டு வரியளி பாட
மருவரு வல்லியிடை யுடைத்தாய்த் திரிதருங்
காமர் மயிலிய லாய நண்ணாத்
தேமொழி யரிவைதன் னேரென
லாகுமெம் மைய யாமா டிடமே''

(இ-ள்) ஐய - ஐயனே!

தெரிவு அருமை பரிசு கொண்டு - அகத்தில் உள்ளார் புறத்தில் உள்ளார்க்குப் புலப்படாத தன்மையை யுடையதாய்,

காதலில் சேர்ந்தோர் விழையும் பரிசு கொண்டு - தன்னிடத்து விடாய்த்து விருப்பத்தோடு சேர்ந்தவர்கள் விரும்பும் தன்மையோடு,

வரி அளி பாட - இரேகைகளையுடைய வண்டினங்கள் ஒலிக்க,

மருவரும் வல்லி இடை உடைத்தாய்-மணம் பொருந்திய பூங்கொடிகளை இடையிடையே உடையதாய்,

எம் ஆடு இடம் - யாங்கள் விளையாடும் சோலையாகிய இடம்,

திரிதரும் காமர் மயில் இயம் ஆயம் நண்ணா - ஆண்டுச் சஞ்சரிக்கும் மயில்களாகிய விரும்பத்தக்க அழக மைந்த கூட்டம் பொருந்தப் பெற்று;

என்று சோலையை விசேடித்து, அது (அச்சோலை), தெரிவு அருமை காதலில் சேர்ந்தோர் - பிறர்க்கு இன்ன தன்மைத்தென்று புலன் ஆகாத மனம் ஒத்த காதலோடு புணர்ந்த தலைவன் தலைவியர்,

விழையும் பரிசு கொண்டு - விரும்புந் தன்மையை மேற் கொண்டு,

வரிஅளி பாட மருவரும் வல்லி இடையுடைய - வரிப் பாடல்களைப் பாடும் வண்டுகள் ஒலிக்கும் பொருந்துதற்கரிய பூங்கொடி போன்ற இடையினையுடைய.

திரிதரும் காமர் எயில் இயல் ஆயம் நண்ணாத் தேன் மொழி அரிவை தன் நேர் எனலாகும் - சோலையிற் றிரியும் விரும்பத்தக்க மயில் போன்ற சாயலை

யுடையளாய்த் தனது பாங்கியர் கூட்டத்தைச் சேராது தனிப்பட்ட இனிய மொழியினையுடைய பெண்ணாகிய தலைவிக்குச் சமானமாக விளங்கும்.

இச் செய்யுளிலுள்ள சிலேடையை அங்கமாகப் பெற்ற ஒப்பணியின் நயம் குறிப்பிடத்தக்கது.

### கருத்துரை

தலைவியிடத்து ஆசையால் ஈண்டுப் போந்த யாம் விரும்பும் தன்மைகளைக் கொண்டு, வண்டு பாட, இடை போன்ற கொடிகள் நுடங்க, ஆயத்தாரோடு கூட இன்று வாராத தலைவிக்கு ஒப்பாக அவளோடு நாம் விளையாடும் இடம் காட்சி வழங்குகிறது—என்று தலைவன் தன் நெஞ்சோடு கூறியவாறு.

## திருப்புகழ்

அருணகிரிநாதரின் திருப்புகழிலும் இத்தகைய பிறிதுபடு பாடல் அமையக் காணலாம்.

(எ.டு) ''தத்தித் தத்திச் சட்டப் பட்டுச்
சத்தப் படுமைக் கடலாலே
சர்ப்பத் தத்திற் பட்டுக் கெட்டுத்
தட்டுப் படுமப் பிறையாலே
சித்தத் துக்குப் பித்துற் றுச்சச்
சித்ரக் கொடியுற் றழியாதே
செப்பக் கொற்றச் சிற்பப் பத்திச்
செச்சைத் தொடையைத் தரவேணும்
கொத்துத் திக்குப் பத்துட் புக்குக்
குத்திக் கிரியைப் பொரும்வேலா
கொச்சைப் பொச்சைப் பொற்பிற் பச்சைக்
கொச்சைக் குறவிக் கினியோனே
சுத்தப் பத்தத் தர்க்குச் சித்தத்
துக்கத் தையொழித் திடும்வீரா
சொர்க்கத் துக்கொப் புற்றக் கச்சிச்
சொக்கப் பதியிற் பெருமாளே.[1]

(இப் பாடலின் ஒவ்வோரடியிலும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்கப் பின்வருமாறு பிறிதொரு பாடலாமாறு காண்க)

---

1. திருப்புகழ். 476

''சத்தப் படுமைக் கடலாலே
தட்டுப் படுமப் பிறையாலே
சித்ரக் கொடியுற் றழியாதே
செச்சைத் தொடையைத் தரவேணும்
குத்திக் கிரியைப் பொரும்வேலா
கொச்சைக் குறவிக் கினியோனே
துக்கத் தையொழித் திடும்வீரா
சொக்கப் பதியிற் பெருமாளே.

பிறிதுபடு பாட்டுக்களைக் கொண்டே ஒரு தனி இலக்கியத்தைப் 'பிறிதுபடு பாட்டுப் பிரபந்த'[1]மெனக் குமரகுருதாச சுவாமிகள் இயற்றியுள்ளமையைப் பின்வருமாறு காணலாம்.

இதில், கட்டளைக் கலித்துறை—7; நேரிசையாசிரியப்பா—6; நேரிசை வெண்பா—2; கலிவிருத்தம்—6; கலி நிலைத்துறை—3; அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்—1; வெண்கலிப்பா—2 என வெவ்வேறு வடிவங்களைப் பெற்ற 27 பாடல்கள் உள்ளன. அவை வருமாறு.

## பிறிதுபடு பாட்டுப் பிரபந்தம்

1 (கட்டளைக் கலித்துறை)

ஓமய வேலவ னோய்வறு சீர்த்திய னோமவுன
சீமய வுத்தமர் நாதன் மயின்மிசைச் சொல்லிளைஞன்
கோமய மின்னிய வீடேறு மிட்டர் குரவனென
தாமய வீறிறு மாறன கானந்த மார்கவன்றே.

(நேரிசை யாசிரியப்பா)

ஓமய வேலவ னோய்வறு சீர்த்திய
னோமவு னசிமய வுத்தமர் நாதன்
மயின்மிசைச் செல்லிளை ஞன்கோ மயமின்
னியவீ டேறு மிட்டர் குரவ
னெனதா மயவீ றிறுமா
றனகா னந்த மார்க வன்றே.

2 (கட்டளைக் கலித்துறை)

வாளவிர் தண்முக வள்ளி மணாளன்வில் வாளுடைய
கோளவிர் வஞ்சரைத் தேய்த்த பொருநன் குருகில்வரு
தாளவிர் தேமுரு கோன்வேலன் முத்தன் சரதநிறை
கேளவர் கானித முங்குறை யாக்கொன்னர் கேட்குமின்பே.

---

1. பத்துப் பிரபந்தம். பக். 11-14

(நேரிசை யாசிரியப்பா)

வாளவிர் தண்முக வள்ளி மணாளன்வில்
வாளுடைய கோளவிர் வஞ்சரைத் தேய்த்த
பொருநன் குருகில் வருதா ளவிர்தே
முருகோன் வேலன் முத்தன் சரத
நிறைகே ளவிர்கா னிதமுங்
குறையாக் கொன்னர் கேட்கு மின்பே.

3 (நேரிசை வெண்பா)

மாண்டாங்கும் வேலா மலர்குவளை மார்பாவாண்
டாண்டுதோ றுங்குறை யாதவத்தம்—வேண்டான்ற
கொன்பேண் விபுத குருவேநோய் தாண்டாண்மை
யின்பே தரவருதி யின்று.

(கலி விருத்தம்)

காய் மா காய் மா

மாண்டாங்கும் வேலா மலர்குவளை மார்பா
வாண்டாண்டு தோறுங் குறையாத வத்தம்
வேண்டான்ற கொன்பேண் விபுதகுரு வேறோய்
தாண்டாண்மை யின்பே தரவருதி யின்று.

4 (நேரிசை வெண்பா)

பாட்டாத்த சேந்தா பசுவெவையு நீதானாட்
டாட்டமரு ளென்றறி யார்வு கொள்ளென்—கூட்டாக்கை
நோய்தான் குலைய நுனியாது பீட்டாக்க
வாய்தான் பெருகவருள் வந்து.

(கலி விருத்தம்)

காய் மா காய் மா

பாட்டாத்த சேந்தா பசுவெவையு நீதா
னாட்டாட்ட மருளென் றறியார்வு கொள்ளென்
கூட்டாக்கை நோய்தான் குலையநுனி யாது
பீட்டாக்க வாய்தான் பெருகவருள் வந்து.

5 (கலிவிருத்தம்)

மாடுடைமா டிவரொருவன் மாவடிவோ டுலவோர்
பீடுடையா னயிலவன்மண் ணோர்பெருமான் மனமாம்
வீடுடைவிண் ணவனிமலன் வீரனடிக் களிசெய்
பாடுடையார் திருவினுய்வர் பாதமுற்றுய் குவரே.

(நேரிசையாசிரியப்பா)

மாடுடை மாடிவ ரொருவன் மாவடி
வோடுல வோர்பீ டுடையா னயிலவன்
மண்ணோர் பெருமான் மனமாம் வீடுடை
விண்ணவ னிமலன் வீர னடிக்களி
செய்பா டுடையார் திருவி
னுய்வர் பாத முற்றுய் குவரே.

(கட்டளைக் கலித்துறை)

மாடுடை மாடி வரொருவன் மாவடி வோடுலவோர்
பீடுடை யான யிலவன்மண் ணோர்பெரு மான்மனமாம்
வீடுடை விண்ண வனிமலன் வீர னடிக்களிசெய்
பாடுடை யார்தி ருவினுய்வர் பாதமுற் றுய்குவரே.

(கலிவிருத்தம்)

6 மாலணைமான் மருகனுயர் மாதவர்நூ லவர்தே
வாலணைவே னுவலருமெய் யாளனிறா மழவன்
வேலணைகை யழகனறை வீசடிக்கன் புளர்வன்
னீலணையா மதியினன்னர் நீடுநன்குய் குவரே.

(நேரிசையாசிரியப்பா)

மாலணை மான்ம ருகனுயர் மாதவர்
நூலவர் தேவா லணைவே னுவலரு
மெய்யா ளனிறா மழவன் வேலணை
கையழ கனறை வீசடிக் கன்புளர்
வன்னீ லணையா மதியி
னன்னர் நீடு நன்குய் குவரே.

(கட்டளைக் கலித்துறை)

மாலணை மான்ம ருகனுயர் மாதவர் நூலவர்தே
வாலணை வேனு வலருமெய் யாள னிறாமழவன்
வேலணை கைய ழகனறை வீசடிக் கன்புளர்வன்
னீலணை யாம. தியினன்னர் நீடுநன் குய்குவரே

(கலிநிலைத்துறை)

7 தானனந் தானந்த தானதனா தந்த தானதனா
வேரியஞ் சேரிண்டை வேய்சுரனே தொங்கன் மீதுறுமோர்
சூரியன் போல்வென்றி வேலரசே துன்பு சூலருளீ
யாரியந் தாவிஞ்சு சீர்பரமே யென்றுள் கார்வெழமா
பாரியண் டாதுந்த வாவிரவாய் வண்டில் பாவலனே.

(அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்)

தனனா தந்த தானதனா தான தந்தா தந்தனா
சுரனே தொங்கன் மீதுறுமோர் சூரியன்போல் வென்றிவே
லரசே துன்பு சூலருளீ யாரி யந்தா விஞ்சுசீர்
பரமே யென்றுள் கார்வெழமா பாரி யண்டா துந்தவா
விரவாய் வண்டில் பாவலனே வேரி யஞ்சே ரிண்டைவேய்

(கட்டளைக் கலித்துறை)

வேரியஞ் சேரிண்டை வேய்சுர னேதொங்கன் மீதுறுமோ
சூரியன் போல்வென்றி வேலர சேதுன்பு சூலருளீ
யாரியந் தாவிஞ்சு சீர்பர மேயென்றுள் கார்வெழமா
பாரியண் டாதுந்த வாவிர வாய்வண்டில் பாவலனே.

## குறிப்பு

7. இக்கவி நிலைத்துறை-அறுசிர்க்கழி நெடிலாசிரிய விருத்த மாதலை நோக்கப் பிறிதுபடுபாட்டாகவும், கட்டளைக் கலித்துறையாதலை நோக்கப் பகுபடுபாட்டாகவும் இருக்கின்றது. இவ்வித பேதம் முன்வந்த 5,6 விருத்தங்களிலும். பின்வரும் வெண்கலிப்பாக்களிலுமுள்ளவாறு காண்க.

(நேரிசையாசிரியப்பா)

(இதழ் குவிக்கும் உயிரெழுத்து மெய்யெழுத்துந் தீண்டாமற் பாடும்) நிரோட்டகம்.

8 நாரிணை நெஞ்சினர் நாயக னெஃகின
னாரியரி சீரிணை தங்கையெ னல்லா
டனதிளஞ் சேய்செறி தண்டா ரிணைசெங்
கனலா தார கண்டன் சகல
கலையே ரிணைகா னினையா
ரலலே யெய்த லாணை யன்றே

(கட்டளைக் கலித்துறை)

நாரிணை நெஞ்சினர் நாயக னெஃகின னாரியரி
சீரிணை தங்கையெ னல்லா டனதிளஞ் சேய்செறிதண்
டாரிணை செங்கன லாதார கண்டன் சகலகலை
யேரிணை கானினை யாரல லேயெய்த லாணை யன்றே.

(நேரிசையாசிரியப்பா)

நிரோட்டகம்

9 ஆறணி செஞ்சடை யந்தண னந்தன
னாறிடத் தனீறணி யாக்கையர் நேயன்
சிகண்டிய னித்தியன் செஞ்சே றணிநச்
சகந்தேர்ந் தியெ னாதி திறத்தண்
ணளியே றணிசார் தகையார்
களியேய் நெஞ்சக் கந்த னெஞ்சே.

(கட்டளைக் கலித்துறை)

ஆறணி செஞ்சடை யந்தண னந்தன னாறிடத்த
னீறணி யாக்கையர் நேயன் சிகண்டிய னித்தியன்செஞ்
சேறணி நச்சகந் தேர்ந்தியெ னாதி திறத்தண்ணளி
யேறணி சார்தகை யார்களி யேய்நெஞ்சக் கந்தனெஞ்சே

(வெண்கலிப்பா)

நிரோட்டகம்

10 தனநிறை தெரியறரி தகையணெறி யரசிகன
னனிநிகழ் நயனனிச நறியகதி கனினையென
தினியரி கனெடிலயி லிறையடியி னததரணை
நனரளி செயினியைத னயன்.

(கலிநிலைத்துறை)

தனதன தனன தனதன தனன தனன
தனநிறை தெரிய றரிதகை யணெறி யரசி
கனனனி நிகழ்ந யனனிச நறிய கதிக
னினையென தினிய ரிகனெடி லயிலி றையடி
யினதத ரணைந னரளிசெ யினியை தனயன்

(கலிவிருத்தம்)

தனனதனன தனன தனனதன தனன
தனநிறைதெரி யறரி தகையணெறி யரசி
கனனனிநிகழ் நயன னிசநறிய கதிக
னினை யெனதினி யரிக னெடிலயிலி றையடி
யினததரணை நனர ளிசெயினியை தனயன்.

(வெண்கலிப்பா)

11 நயமுள புதுநறவு கமழடியி னவையிறய
வியல்பெனை யுறவெணுக வினிமைதரு கவெயினக
ரயனரி வெருவவெழு கிரியதுபெ யரனடிக
ளுயரரி சுதைபிரிய முளன்.

(கலிநிலைத்துறை)

தனதன தனன தனதன தனன தனன
நயமுள புதுந றவுகம ழடியி னவையி
றயவியல் பெனையு றவெணுக வினிமை தருக
வெயினக ரயன ரிவெருவ வெழுகி ரியது
பெயரன டிகளு யரரிசு தைபிரி யமுளன்.

(கலிவிருத்தம்)

தனனதனன தனன தனனதன தனன
நயமுளபுது நறவு கமழடியி னவையி
றயவியல்பெனை யுறவெ ணுகவினிமை தருக
வெயினகரய னரிவெ ருவவெழுகி ரியது
பெயரனடிக ளுயர ரிசுதைபிரி யமுளன்.

## குறிப்பு

இதன் கண்ணேயுள்ள கட்டளைக் கலித்துறைகள், பண்—நட்டராகத்தினும் பாடவியையும்.

# 44. திரிபங்கி

யாதேனும் ஒரு செய்யுளாய் நின்றே ஒரு பொருள் பயப்பதன்றி, அதுவே மூன்று செய்யுளாய்ப் பிரிந்து முடிந்து வெவ்வேறு பொருள் பயக்கத் தக்கதாகவும் பாடப்படுவது திரிபங்கி யாகும்.

திரி—மூன்று; பங்கி—பங்கமுடையது.

''நனிஒரு பாவாய் நடந்தது தானே
தனிதனி மூன்றாம் சால்புறு பொருண்மையின்
பகுப்பநிற் பதுதிரி பங்கிய தாகும்''[1]

என மாறனலங்காரமும்,

''ஒருகவிக் குட்கவி மூன்றொழுகுவது
திரிபங்கி என்மனார் தெளிந்திசி னோரே''[2]

எனச் முத்து வீரயமும்,

''...ஒரு கவிமூன்று கவியாய்ப் போதல்திரி பங்கி''[3]

என சுவாமிநாதமும் இதை விளக்குகின்றன.

(எ.டு) (கட்டளைக் கலித்துறை)

''சங்கத் தமிழன் திசைபுகழ் சீராளன் தண்ணளிசேர்
மங்குற் கொடையான் வசைமொழி கூறாதான் வண்மைதன்
பொங்குந் தனவான் அசைவிலா மாவீரன் புண்ணியவான்
தங்கக் குணவான் இசைபொழி பூமாரி சண்முகமே''[4]

இக் கலித்துறைப் பாடல், பின்வரும் மூன்று வஞ்சி விருத்தங்களாகும்.

---

1. மாறன். 296.
2. முத்துவீ. சொ. 22.
3. சுவாமி. 198.
4. சித்திரகவி மாலை. பா. 30.

(வஞ்சி விருத்தம்)

''சங்கத் தமிழன்
மங்குற் கொடையான்
பொங்குந் தனவான்
தங்கக் குணவான்.'' 1

''திசைபுகழ் சீராளன்
வசைமொழி கூறாதான்
அசைவிலா மாவீரன்
இசைமொழி பூமாரி.'' 2

''தண்ண ளிசேர்
வண்ண மதன்
புண்ணி யவான்
சண்மு கமே.'' 3

(இ-ள்) சங்க முத்தமிழுங் கற்றவன், நாற்றிசையும் புகழும் கீர்த்தியுள்ளவன். குளிர்ந்த கருமை சேர்ந்த மேகம் போலக் கொடுப்பவன். ஒருவரையும் கெட்டமொழி பேசி வருந்தச் செய் யாதவன். அழகில் மன்மதன் போன்றவன். வளருகின்ற செல்வ முள்ளவன். சொற்போரில் அயர்வில்லாத பெரிய வீரன். மிகுந்த புண்ணியங்களைச் செய்பவன். தங்கம் போன்ற குணமுள்ளவன் சண்முகம் என்பதாம்.

இவ்வாறே, அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம் ஒன்றி னையே மூன்று வஞ்சி விருத்தங்களாகும் படியும் பாடுவர்.

(எ.டு) (அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

காவலர் சபையில் ஆங்கிலம் பொழிமுகில் காமுற்றுப் புவிசொல்
ஓவியத் தமிழில் ஓங்குரை தருபவன் ஓமத் தின்மறைதேர்
நாவலர் மொழியும் தீங்கனி எனமொழி ராமச் சந்திரனே
பாவலர் துணையே பாங்குயர் பசுமணி பாமெச் சிந்திரனே''[1]

இப்பாடலே, பின்வரும் மூன்று வஞ்சி விருத்தங்களாகும்,

(வஞ்சி விருத்தம்)

''காவலர் சபையில்
ஓவியத் தமிழில்
நாவலர் பொழியும்
பாவலர் துணையே'' 1

---

1. சித்திர கவிமாலை. 28.

"ஆங்கிலம் பொழிமுகில்
ஓங்குரை தருபவன்
தீங்கனி எனமொழி
பாங்குயர் பசுமணி" 2

"காமுற்றுப் புவிசொல்
ஓமத்தின் மறைதேர்
ராமச்சந் திரனே
பாமெச்சிந் திரனே" 3

## திரிபங்கி (வேறு)

ஒரு வெண்பாவே மூன்றாகித் திரிபங்கி எனப்படும்.

(எ.டு) (நேரிசை வெண்பா)

"சங்கந்தா பூணாரந் தாமே கலைதாநற்
புங்கவன்மால் காணாப் புலவுடைய—சங்கரா
கோணா கலாமதிசேர் கோடீர சங்கரா
சோணா சலாசலமே தோ"

இவ் வெண்பா,

"பூணாரந் தாமே கலைதாநற் புங்கவன்மால்
காணாப் புலவுடைய சங்கரா—கோணா
கலாமதிசேர் கோடீர சங்கரா சோணா
சலாசலமே தோசங்கந் தா"

என்று மற்றொரு வெண்பாவாகவும்,

"சலமேதோ சங்கந்தா பூணாரந் தாமே
கலைதாநற் புங்கவன்மால் காணாப்—புலவுடைய
சங்கரா கோணா கலாமதிசேர் கோடீர
சங்கரா சோணா சலா"

என்று இன்னொரு வெண்பாவாகவும் படிக்கப்பட்டுத் திரிபங்கி யாயிற்று.

(இ-ள்) நல்ல பிரமனும், திருமாலும் அடி முடியைத் தேடிக் காண முடியாதவனும், பகைவர் ஊன் தங்கிய மழுப்படையை யுடையவனுமாகிய அரனே! வளைவாகிய ஒற்றைக் கலையை யுடைய சந்திரன் சேர்ந்த சடையையுடையவனே! சங்கரித்தற் தொழிலையுடையவனே! அருணாசலத்திலுள்ளவனே! சங்கு வளையலைக் கொடு; அணியத் தக்க ஆரத்தைக் கொடு; மேகலா பரணத்தைக் கொடு; உனக்குச் [illegible]ம்,

இது பெண்பாற் கைக்கிளை; தலைவி கூற்று,

பாம்பன் சுவாமிகள் இயற்றிய 'பத்துப் பிரபந்தம்' என்னும் நூலில் 'பிறிதுபடு திரிபங்கி' என்றே ஒரு தனி இலக்கிய வகை அமைகின்றது. அது வருமாறு.

## பிறிதுபடு திரிபங்கி

(நேரிசை வெண்பா)

பத்துப்பா மேலாமோர் பாவோன் வரதாபல்
வித்துப்பார் மாலாம் விரகிலருள்—மத்தத்தா
வேலா மராமுடியா வெய்யமலா பத்தைத்தீர்
சீலா பராபரசீர் செய்,

பரசீர்செய் பத்துப்பா மேலாமோர் பாவோன்
வரதாபல் வித்துப்பார் மாலாம்—விரகிலருள்
மத்தத்தா வேலா மராமுடியா வெய்யமலா
பத்தைத்தீர் சீலா பரா.

மேலாமோர் பாவோன் வரதாபல் வித்துப்பார்
மாலாம் விரகிலருள் மத்தத்தா—வேலா
மராமுடியா வெய்யமலா பத்தைத்தீர் சீலா
பராபரசீர் செய்பத்துப் பா.

---

1. குமரகுருதாச சுவாமிகள் பத்துப் பிரபந்தம்.

# 45. திரிபாகி

திரிபாகி என்பது மூன்றெழுத்துக்கூட ஒரு மொழியாய், அதன் முதலெழுத்தும் கடை எழுத்தும் கூட மற்றொரு மொழி யாய். இடை எழுத்தும் கடை எழுத்தும் கூட மற்றொரு மொழி யாய்ப் பொருள் வேறுபடப் பாடுவது. திரி - மூன்று. பாகம் - பங்கு.

இத்திரிபாகியைத் 'திரிபதாதி' என்பர் மாறனலங்காரமுடை யார். திரி - மூன்று. பதம் - சொல்.

''மூன்றெழுத்து ஒருமொழி முதலீறு இடையீறு
ஆன்ற பொருள்பிற வாந்திரி பதாதி''[1]

என்பது நூற்பா.

''மூன்றெழுத்து ஒருபெயர் முதலிடை முறிக்கின்
முப்பெயர் எதிர்முளைப் பதுதிரி பாகி''[2]

என்பது முத்து வீரியம்.

''... மூன்று எழுத்துஒருசொல் முதல்பின்
புகல்இடையின் சேர்ந்துசொற்க ளாந்திரிப தாதி''[3]

என்னும் சுவாமிநாத விளக்கம் இதனைத் திரிபதாதி என்றே குறிப் பிடுகிறது.

---

1. மாறன். 299.
2. முத்துவீ. சொ. 23.
3. சுவாமி.

(எ.டு) (நேரிசை வெண்பா)

"மூன்றெழுத்து மெங்கே முதலீ றொருவள்ளல்
ஏன்றுலகங் காப்ப திடை கடை —யான்றுரைப்பிற்
பூமாரி பெய்துலகம் போற்றிப் புகழ்ந்தேத்தும்
காமாரி காரிமா ரி"[1]

மூன்றெழுத்து மெங்கோன் - காமாரி - சிவன்
காமாரி - மன்மதனுக்குப் பகைவனாகிய சிவன்.
காரி - வள்ளல்; மாரி - உலகத்தைக் காக்கும் மழை.

(எ-டு) "முன்னொரு வூரின் பேராம்
முதலெழுத் தில்லா விட்டால்
நன்னகர் மன்னர் பேராம்
நடுவெழுத் தில்லா விட்டால்
கன்னமா மிருகத் தின்பேர்
கடையெழுத் தில்லா விட்டால்
உன்னிய தேனின் பேரா
மூரின்பேர் விளம்பு வீரே"[2]

என்ற தனிப் பாடலும் இத்'திரிபாகி' வகையைச் சாரும். ஆயின், இதில் 'பெயர்' கொடுக்கப்படாமல் விளம்பப் பட்டுள்ளது.

விடை:— ஊரின் பேர் - மதுரை
மன்னர் பேர் - துரை
மிருகத்தின் பேர் - மரை
தேனின் பேர் - மது

## குறிப்பு

'நடுவெழுத்தலங்காரம்' என்று வழங்கப்படும் கவிகளும் இத் திரிபாகியைச் சோர்ந்தது என்றே கூறுவர்.

1. தண்டி. மேற். பா.
2. சித்திர கவி விளக்கம். பக். 56

## 46. மாத்திரைச் சுருக்கம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல்லின்கணுள்ள எழுத்தின் மாத்திரையைச் சுருக்குவதால் அச்சொல் வேறு சொல்லாகி வேறு பொருள் பயச்கும்படி பாடப்படுவது மாத்திரைச் சுருக்கமாகும். இதை,

> "மாத்திரை சுருங்க மறுபொருள் உணர்ந்துரை
> மாத்திரைச் சுருக்கம் எனவகுத் தனரே"[1]

என மாறனலங்காரமும்,

> "ஒருபொருள் தருஞ்சொலோர் மாத்திரை குறைய
> மற்றொரு பொருள்தரல் மாத்திரைச் சுருக்கம்"[2]

என முத்துவீரியமும்,

> "............சொற்
> பொருள்திரிய வளவறுமாத் திரைச்சுருக்கப் பாவே"[3]

எனச் சுவாமிநாதமும் இதை விளக்குகின்றன.

மாத்திரை - எழுத்து அளவு, சுருக்கம் - குறைவு

(அளவடி விருத்தம்)

(எ-டு) "அளபொன்று நீக்கிய உயிரை வணங்குவோன்
அளபொன்று நீக்கிய வாய்மைக் குபேரனாம்
அளபொன்று நீக்கிய குவளைகட் கிபவன்
வளமலி ராமச் சந்திர வள்ளலே"[4]

---

1. மாறன். 299
2. முத்துவீ. சொ. 20
3. சுவாமி. 199
4. சித்திரகவிமாலை. பா. 33

## குறிப்பு

உயிர் - சீவன், இதில் ஒரு மாத்திரை நீக்க - சிவன், சிவனை வணங்குவோன்.
வாய்மை - நீதி, இதில் ஒரு மாத்திரை நீக்க - நிதி நிதியில் குபேரன் போன்றவன்
குவளை - காவி, இதில் ஒரு மாத்திரை நீக்க - கவி கவிஞர்களுக்குக் கொடுப்பவன். யாரெனின் அவன் எல்லா வளமும் பெற்ற ராமச்சந்திரன் என்பதாம்.

(எ-டு)2 "நேரிழையார் கூந்தலின் ஓர் புள்ளிபெறின் நீள்மரமாம்
நீர்நிலைஓர் புள்ளிபெற நெருப்பாம்—சீர் அளவும்
காட்டொன்று ஒழிப்ப இசையாம் அதனளவு
மீட்டு ஒன்று ஒழிப்ப மிடறு"[1]

(இ-ள்) நேரிழையார் கூந்தல் - 'ஓதி'
இதன் கணுள்ள நெட்டெழுத்தாகிய 'ஓ'வின் மேற்புள்ளி வைக்க ஒரு மாத்திரை குறைந்து குற்றெழுத்தாகிய 'ஒ' கரமாய், 'ஒதி' என்றாகி, ஒரு மரத்தின் பெயராகும்.
நீர்நிலை - 'ஏரி', 'ஏ' காரத்தின்மேற் புள்ளிவைக்க, 'எரி'என்றாகும். எரி - நெருப்பு. காட்டில் ஒரு மாத்திரை குறைப்ப இசைப் பாட்டாகும்.
காடு - 'காந்தாரம்' - கந்தாரம் என்றாகி இசைப் பாட்டினை உணர்த்தும்.
இச்சொல் பின்னும் ஒரு மாத்திரை சுருங்கக் 'கந்தரம்' என்றாகி, 'மிடறு' என்று பொருள்படும்.

## குறிப்பு

மேற்கண்ட தண்டியலங்கார மேற்கோள் விளக்கப் பாடல் 'எகரவொகரங்களுக்குப் புள்ளி வைத்தெழுதுங் காலத்தில் இயற் றப்பட்டிருத்தல் வேண்டுமென அறிய முடிகிறது.

1. தண்டி. மேற்.

# 47. மாத்திரை வருத்தனம்

யாதேனும் ஒரு பொருள் பயக்கும் ஒரு சொல்லின் கணுள்ள எழுத்திற்கு மாத்திரையைக் கூட்டுதலால் வேறொரு சொல்லாகி வேறு பொருள் பயக்கும் படி பாடப்படுவது மாத்திரை வருத்தன மாகும்.

வர்த்தநம் - அதிகப்படல்.

"மாத்திரை பெருக மறுபொருள் உணர்த்துரை
மாத்திரைப் பெருக்கம் எனவகுத் தனரே"[1]

என மாறனலங்காரமும்,

"மாத்திரைச் சுருக்கம் மறுதலைப் படஒரு
மாத்திரை ஏற்றிடின் மாத்திரை வருத்தனம்"[2]

என முத்து வீரியமும்,

"..........ஓர்சொலின் ஒரளவு
புங்கமுறப் பொருள்வேறா மாத்திரை வர்த்தனம்" [3]

எனச் சுவாமிநாதமும் இதை விளக்குகின்றன.

(எ-டு) மாத்திரைச் சுருக்கத்திற்குக் கூறியதனையே மாறுபடக் கூறினாலும் அதே பொருள் தரும்.

"தருவொன்றை நீட்டிடில் தருணி கூந்தலாம்
மருவுதீ நீட்டிட மாண்புறும் நீர்நிலை
திருவுறு கழுத்தினை நீட்டத் தீம்பணாம்
உருவமேல் நீட்டிடின் உயர்ந்த காடுமாம்"

---

1. மாறன். 299
2. முத்துவீ. சொ. 21
3. சுவாமி. 199

தரு - ஓதி(மரம்) - ஓதி(கூந்தல்)
தீ - எரி(நெருப்பு) - ஏரி(நீர்நிலை)
கழுத்து - கந்தரம் (மிடறு) - காந்தாரம்(நிம்பண்)
காந்தரம் - காந்தாரம்(காடு)

(அளவடி விருத்தம்)

(எ-டு) "அளபொன் றேறிய செல்வத்தைச் சொல்பவன்
அளபொன் றேறிய விதந்தனைச் சூடுவோன்
அளபொன் றேறிய புரவிபோ லீபவன்
வளமொன்று முத்தமிழ் மாமணி சண்முகம்"[1]

(இ-ள்) செல்வம் - நிதி - இதில் ஒரு மாத்திரை கூட்ட - நீதி
நீதியைச் சொல்பவன்
விதம் - வகை, இதில் ஒரு மாத்திரை கூட்ட - வாகை
வாகை மாலை சூடுவோன்.
புரவி - பரி. இதில் ஒரு மாத்திரை கூட்ட - பாரி
பாரி போல் ஈபவன்
வளம் பொருந்திய முத்தமிழ்மணி திரு. சண்முகம் என்ப
தாம்.

1. சித்திரகவி மாலை, பா. 29.

## 48. சதுரங்கம்

பரிக்காலில் வேறுபாடு முதலில் வேறுபாடு இருப்பது சதுரங்கம் என இவ்வகையைச் சுவாமிநாதம் முதன் முதலாகக் குறிப்பிடுகிறது.

"எழும்பரிக்கால் முதல்பேதஞ் சதுரங்கம்"[1]

என்னும் அடி இதனை விளக்கும்.

"அறுபத்து நாலறுபத் திரண்டைம்பா னாற்பானான்கு
அடுத்தமுப்பத் தாறிருபத் தாறிருபத் திரண்டு
பெறுமக்க ரங்களொன்று முதலேழு வரைநிகர்ப்பப்
பின்னும் ஐம்பத் தேழைம்பான் மூன்றொடுநாற்
பான்மூன்று
உறுமுப்பத் தைந்திருபத் தொன்பதுபன் னேழ்பதினைந்து
உளஎழுபத் திரண்டுமுதல் எழுபத்தெட் டீறா
மறுவற்று வரப்பாடும் கவிதைசது ரங்கபந்தம்
வழுத்தியஅஃ தெழுபத்தெட் டெழுத்தின்
முடிகுவதே"[2]

### துறுவக் குறிப்பு

1+64, 2+62, 3+50, 4+44, 5+36, 6+26, 7+22
15+78, 17+77, 29+76, 35+75, 43+73, 43+74
53+75, 57+72. மொத்த எழுத்து 78.

"சதுரங்க வறையிற் சதிர்பெற வமைப்பது
சதுரங்க பெந்தமென் றறைதருந் தன்மைய"[3]

என்னும் மாறனலங்கார மூல சூத்திரமும் இதை விளக்குகிறது.

---

1. சுவாமி. 197.
2. இலக்கண விளக்கம். பின்னிணைப்பு.
3. மாறன். பக். 500. சூத்திர எண் 53.

இது, 64 எழுத்துக்களுடையதாய்ச் சதுரங்க அறை ஏதேனும் ஒன்றிலிருந்து தொடங்கிச் சதுரங்க அறைகளிற் குதிரை முதலிய வற்றின் நடை முறைப்படி அடைக்கும்போது சதுரங்க அறைகளுள், கவிகருதிய இடத்துக் கவி கருதியவாறு இடையீடின்றிப் பாட்டு டைத் தலைவன் பெயரேனும் கவி கருதிய பிறவேனும் அழகுற அமைந்து விளங்குவதாய் இயற்றப்படும் செய்யுளாம்.

இதுவே சதுரங்க துரக கதிபந்தம், சதுரங்க அசுவ கதி பந்தம் என்றும் அழைக்கப்பெறும்.

## சதுரங்க துரக கதி பந்தம்

பக்கத்திற்கு எட்டுக் கட்டங்களமைத்து அறுபத்து நான்கு கட்டங்களடங்கிய சதுரங்க சித்திரத்தில், ஒரு கட்டத்தினின்று புறப்பட்ட குதிரை ஒன்று குதித்த இடத்தில் மீளவுங் குதிக்காமல் அறுபத்து நான்கு கட்டங்களிலும் ஒன்றும் விடாமற் சொல்லுங் கால் செய்யுளிலுள்ள வரிசைப்படி எழுத்துக்களைக் கட்டத்திற்கு ஒரெழுத்தாக அமையுமாறும், நேர் வரிசையிலோ கோணாந்தரங் களிலோ, அன்றி வேறு விதமாகவோ விருப்பமான பெயர்களும் சொற்றொடர்களும் புலப்படப் பொருந்து மாறும் புலவனியற்றும் கவி சதுரங்க துரக கதி பந்தமாம்.

துரகம் - குதிரை; கதி - நடை.

(எ-டு)

"தேரினெந் நெஞ்சநீ திரித லென்கொலோ
நாரொடும் வியன்றமி ணயந்து தூவிய
காரெனும் பரிதிமால் கணங்கொள் பூவரா
ரீரடி யேழைசூட் டியையப் போற்றுவாம்"[1]

(இ-ள்)

தேரின் - ஆராயுமிடத்து,
எம் நெஞ்சம் - எமது நெஞ்சமே!
நீ திரிதல் என்கொலோ - நீ கண்ட இடங்கடோறும் சென்று திரிதல் யாது கருதியோ!
நாரொடும் - அன்போடும்,
வியன் தமிழ் நயந்து தூவிய - பெருமை வாய்ந்த தமிழனை விரும்பிச் சொரியும்,

1. வல்லீ பரிணய நாடகம். ஆசிரிய வணக்கம். சித்திர கவி விளக்கம், பக். 70-

## சதுரங்கம்-1

| தே | ஞ் | டி | நீ | த | யோ | யை | சூ |
|---|---|---|---|---|---|---|---|
| ர | ன் | ரி | த் | யே | ட் | ரி | ப் |
| நெ | ம் | ச | லெ | தி | ய | ழை | டி |
| கொ | ரீ | று | ளை | நா | வ | ப | ய |
| வா | ந் | லோ | ரா | ம் | வி | ரா | பூ |
| மி | ய | ய | க | கொ | மா | கா | ரி |
| ந் | ண | ற | வி | தூ | னு | ள் | டு |
| வ் | ண | து | ங் | ல் | ம் | தி | ரை |

கார் எனும் பரிதி மால் - மேகத்தினை யொத்த சூரிய நாராயணப் பெயர்கொண்ட ஆசிரியனது,

கணம் கொள் பூவர் ஆர் இரண்டு அடி - கூட்டமாகப் பொருந்திய உபய பாதங்களும்,

ஏழை சூட்டு இயைய போற்றுவாம் - எளியே மாகிய எமது உச்சியிற் பொருந்துமாறு அவற்றை வணங்குவோம்.

**கருத்துரை**

பலவேறு நற்பயன்களையும் அளிக்கும் செந்தமிழ் மழையினை மாணாக்கர்க்குச் சொரிந்த கைம்மாறு கருதாத மேகம் போன்ற சூரிய நாராயண வள்ளலினது பாத கமலங்கங்களை உச்சியிற் கொண்டு வணங்குவதே வேலையாதலின், நெஞ்சமே! நீ பல வழி களிலும் போய்ப் பயனின்றித் திரிவதை விட்டு எம்மோடு கூட வணங்க வருவாய்.

**குறிப்பு**

இச்செய்யுளைச் சதுரங்க துரக கதி பந்தத்தில் அமைத்து நோக்குங்கால் இடப்புறங் கீழிருந்து வலப்புறம் மேனோக்கிச் செல்லும் கோணாந்தரத்தில் ஆசிரியர்தம் இயற் பெயராகிய 'சூரிய நாராயணன்' என்னும் நாமம் பொருந்துவதைக் காணலாம். செய்யுளில் 'பரிதிமால்' என்னும் புனைவுப் பெயரும் சித்திரத்தில் 'சூரிய நாராயணன்' என்னும் இயற்பெயரும் அமைந்துள்ளன.

## சதுரங்க அசுவகதி பந்தம் (வேறு)

ஒரு வெண்பாவிலுள்ள எழுத்துக்களைச் சதுரங்க அறைகளில் அமைக்க, கீழிருந்து ஐந்தாவது வரியிலுள்ள எட்டு வீட்டில் ''மாதர்க்கினியது'' என்று அமையுமாறு பின்வரும் பாடல் பாடப் பட்டுள்ளது. அசுவம் - குதிரை. கதி - நடை. பந்தம்-கட்டு, தளை

(நேரிசை வெண்பா)

''சென்னைதனின் மேவுஞ் சிறப்பினார் மேயபுகழ்
மன்னியவிம் மன்றினினுள் வாழ்கின்றா-ருன்னைக்
கனமே கதுவக் கருதுவ ரேனீ
மனமே மிகவுறுவை மால்''[1]

மால் - பெருமை.

குறிப்பு:-

இச்செய்யுள் சென்னை நகரச் சபையார்களுக்குப் பாடப் பட்டதாக அறிய முடிகிறது.

இது போன்று மேலும் பல சதுரங்கக்கவிகள் இலக்கியங்களில் அமைந்துள்ளன.

---

1. சதாவதானம் சுப்பிரமணிய ஐயரியற்றிய பலபாடற் திரட்டு - பா. 196.

# சதுரங்கம்-2

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ன்<br>22 | வி<br>25 | ண்<br>28 | ன<br>43 | னை<br>40 | க<br>19 | ரு<br>38 | வா<br>33 |
| ம<br>27 | க<br>42 | ணி<br>23 | ழ்<br>20 | றி<br>29 | ழ்<br>34 | க<br>45 | பு<br>18 |
| ய<br>24 | ம<br>21 | ம்<br>26 | க்<br>41 | மே<br>44 | ன்<br>39 | ள்<br>32 | றா<br>37 |
| மா<br>63 | த<br>4 | ர்<br>15 | க்<br>48 | கி<br>35 | ணி<br>30 | ய<br>17 | து<br>46 |
| னா<br>14 | க<br>49 | வை<br>62 | னை<br>3 | மே<br>16 | வ<br>47 | ன்<br>36 | னு<br>31 |
| னி<br>5 | ல்<br>64 | மே<br>7 | ப்<br>12 | ஞ்<br>9 | மி<br>58 | ரே<br>53 | ன<br>56 |
| ரு<br>50 | பி<br>13 | ன்<br>2 | று<br>61 | வ<br>52 | ம<br>55 | சி<br>10 | க<br>59 |
| செ<br>1 | ன்<br>6 | து<br>51 | வு<br>8 | ற<br>11 | வு<br>60 | மே<br>57 | னீ<br>54 |

# 49. கடக பந்தம்

சுவாமிநாதமே இவ்வகையை முதன்முதலில் குறிப்பிடுகிறது. ஒரு வரி மறைந்து நான்கு வரி பிடியாக அமைந்தும் ஏற்கும் மறை வலமாகச் சுற்றி முனையில் பொருவது கடக பந்தம். கடகம்-கை வளை. பந்தம் - கட்டு, தளை.

''மாவலகில் ஏற்கு(ம்) மறை யொருவரியாய் நான்கு
வரிபிடியாய் ஏற்கு(ம்)மறை வலஞ்சுற்றி முனைமேல்
மேவல்கட கபெந்தம்''[1]

(எ-டு) (நேரிசை வெண்பா)

நாகமக ளாகமது ஞானமன மோனமொடு
போகமக லாதவகை பூணுபவா—தோகைமயி
லேறிவிளை யாடுமுரு காகுகவி வேழைபவ
மாறியிட வேகருணை வை.[2]

## கருத்துரை

தோகை மயில் வாகனனே! குகனே! முருகா! என் ஆசைத் துன்பங்கள் அனைத்தையும் அழித்துக் காப்பாயாக.

## குறிப்பு

இப்பாடலில் 2, 4, 6 ஆம் எழுத்துக்களும்; 10, 12, 14 ஆம் எழுத்துக்களும் தம்முள் பொருந்தி அமைந்துள்ளன. மொத்த எழுத்துக்கள் 57 ஆகும்.

---

1. சுவாமி நாதம் 200.
2. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 37.

## கடக பந்தம் (வேறு)

இது, பூட்டுவாயிலிருந்து மூன்று தடுப்புடைய வல இரண்டா மறை நடுத்தடுப்புச் சென்று கிழ்த்தடுப்பில் இறங்கி நடுத்தடுப்பு வழியே மேல்தடுப்புச் சென்று இடையிடையே உள்ள குண்டு களாகிய நான்கு அறைகளிலும் சென்று இறுதிவரையில் பாடல் முடியுமாறு அமைப்பது. பூட்டு வாயை அடுத்து இரண்டாம் அறை மூன்று தடுப்புடையதாகும், பந்தம்-கட்டல்.

(நேரிசை வெண்பா)

ஓதுமது மீதுவெகு நேசமொடு பூசைசெய
வோதுவதுன் பொன்னன்பே யுத்தமனே—யாதலினால்
வந்தாள்வாய் கந்தமுத லேபாலா வேலானே
கந்தாகு காகடம்பா கா[1]

### கருத்துரை

எல்லாவற்றிற்கும் மூலமுதலே! கந்தனே! எந்நாளும் உன்னையே பூசித்து வணங்குகின்றேன். என்னைக் காத்தருள்க.

### குறிப்பு

இப்பாடலில் 2,4,6 ஆம் எழுத்துக்களும், 18/20, 23/25, 45/47 50/52 ஆம் எழுத்துக்களும் தம்முள் பொருந்தி அமைகின்றன. மொத்த எழுத்துக்கள் 63 ஆகும்.

## கடக பந்தம் (வேறு)

(நேரிசை வெண்பா)

'காரேகா வேகாந்தி யாமணியாக் கைதருகை
பேரேபே சும்புவனி பீடுமிகப்—பாரார்சீர்
பெற்றடிகே சண்முகமே பெட்பார்பா மாலைநீ
பெற்றுமே வாழி பெரிது.'[2]

(இ-ள்) கார்—மேகம், கா—கற்பகம்.
காந்திமணி—பிரகாசிக்கும் சிந்தாமணி,
ஆ—பசு, காமதேனு.
புவனி—உலகம் பீடு—அழகு
பார் ஆர்சீர்—உலகு நிறைந்த புகழ்,
பெட்பு ஆர்பாமாலை—அழகு நிறைந்த செய்யுள்மாலை.

### கருத்துரை

மேகம், கற்பகம், சிந்தாமணி, காமதேனுவைப்போலக் கையிற் கொடையுள்ளதால் உன் பேரை அழகாகப் பேசுகிறது உலகம். இத்தகைய புகழ் பெற்ற வள்ளலே அழகிய பாமாலையைப் பெற்று நீ வாழ்வாயாக.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 39.
2. பி.வி. அப்துல்கபூர்-சித்திர கவிமாலை பா. 13.

# 50. தேர்க்கவி

பதின்மூன்று வரியும் பதினொரு வரியும் ஒன்பது வரியும் தட்டு உடையதாய்க் கீழ்த்தட்டு முதலாக இடமாகவும் வலமாகவும் சுற்றி வந்து மேலே போய் நேரே கீழ் இறங்கி வந்து ஒத்துக் கீழ்த் தட்டில் முடிவது தேர்க்கவி எனச் சுவாமிநாதம் விளக்குகிறது.

"...பன்மூன்றுப தினொன்று
வியன்ஒன்பான் தட்டுஉடைத்தாய்க் கீழ்த்தட்டு முதலே
ஓவலிடம் வலஞ்சுற்றி மேல்போய்நேர் இழிந்தே
ஒத்துக்கீழ்த்தட்டின் இறும் தேர்க்கவியின் அரணே".[1]

என்பது சுவாமிநாதம்

இச்சித்திரக்கவி முன்னர்க் கூறிய இரத பந்தம் போன்றதே. ஆயினும் இதில் 9 முதல் 13 வரையிலான வரியுடைய தட்டுக்கள் மட்டுமே கூறப்படுகின்றன. இரத பந்தம் என்னும் வகையில் 9 முதல் 17 வரையிலான வரியுடைய தட்டுக்கள் கூறப்படுகின்றன. மற்றபடி இவ்விரு வகைகளும் ஒப்புமையுடையன என்பதை இரத பந்தத்தில் கூறப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளால் அறியலாம்.

மேற்கண்ட ஐம்பது வகையான சித்திரக்கவிகளே இலக்கண ஆசிரியர்களாலும் உரையாசிரியர்களாலும் கூறப்படுகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்ட பல வகைகள் பின்னால் எழுந்துள்ளன. இத்தகு புதிய வகைகளைப் பின்வருமாறு காண்போம்.

---

1. சுவாமி 200.

## உருத்திராக்க கண்டிகா பந்தனம்



## 1. உருத்திராக்க கண்டிகா பந்தனம்

உருத்திராக்க மாலை வடிவிலான சித்திரத்தில் உருத்திராக்க மணி ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு எழுத்து அமையுமாறு பாடப்படுவது உருத்திராக்க கண்டிகா பந்தனமாகும். இது மாணிக்க மாலை பந்தம் போன்ற அமைப்பினது. உருத்திராக்க கண்டிகை-உருத்திர மணிமாலை.

(எ-டு) (குறளடி வஞ்சி விருத்தம்)

முத்திதரு கந்தனின்
சித்திரசு பந்தனைக்
கத்திமுக முந்தனைத்
துத்தியது தந்தனே.'[1]

**கருத்துரை**

முத்திக்கு வித்தான முருகப்பெருமானின் அண்ணனே! அழகும் நன்மையும் பொருந்திய யானை முகத்தோனே! உன்னை வணங்குகின்றேன்.

**குறிப்பு**

பாடலிலுள்ள எழுத்துக்கள் 39. சித்திரத்தில் 38 எழுத்துக்கள் அமைகின்றன. 4ஆவது எழுத்தும் 36ஆவது எழுத்தும் தம்முள் பொருந்தியுள்ளன.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. கணபதி காப்பு. பா. 16.

# 2. சங்க பந்தனம்

திருமால் கையிலேந்திய ஊது சங்கின் வடிவமைப்பில் எழுத்துக்கள் அமையுமாறு பாடப்படுவது சங்க பந்தனமாகும். இதில், நடுச்சுழியில் பாடலின் முதல் எழுத்து தொடங்கி வளை கோட்டில் சுற்றிவந்து மேலேறிக் கீழிறங்கி, மீண்டும் சுழித்து மேலேறிச் சென்று தொடங்கிய எழுத்திலேயே முடிவதைக் காணலாம்.

சங்கம்—சங்கு. பந்தனம்—கட்டம்

(நேரிசை வெண்பா)

(எ - டு)

தேவற்குத் துன்பத்தைத் தீர்த்தசத்தி வேலவன்மீ
தேவைத்த பக்தி திகழ்ந்தோங்கப் —பாவொத்த
வித்தாரன் கல்யாண சுந்தரனா மேலோன்செய்
சித்திரப்பா மெத்ததிறத் தே.[1]

## கருத்துரை

தேவர்கள் இன்புறும்படி சூரனை அழித்து, பெருமை பெற்ற முருகப்பெருமான்மீது சித்திரப்பா பாடிய கல்யாண சுந்தரன் என்பார் மேன்மேலும் சிறக்க வாழ்த்துகின்றேன்.

## குறிப்பு

பாடலில் உள்ள 74 எழுத்துக்கள் சித்திரத்தில் 69 ஆக அமைகின்றன.

---

1. கந்தன் சித்திரபந்தன மாலை. திரு. ரகுநாதையரியற்றிய சாற்றுக்கவி பக். XIV.

## சடாக்கர பந்தனம்



## 3. சடாக்கர பந்தனம்

ஓம் சரவணபவ என்னும் மந்திர மொழியின் உருவில் அமைந்த சித்திரத்தில் எழுத்துக்கள் அமையுமாறு பாடுவது சடாக்கர பந்தனம் என்பர்.

சடாக்கரம் - குமரன் மந்திரமாகிய ஆறெழுத்து (சரவணபவ)

(நேரிசை வெண்பா)

(எ-டு) பூசமுர மேவகுண திபநவ பூர்வமொழி
நேசவள்ளிக் காப்புனத்தில் நின்றகுகா—பாசமொடு
காலதண்ட காலனொண்ட ஆலமுண்ட நீலகண்ட
பாலதண்ட பாணியென்னைப் பார்.[1]

(இ-ள்) பூசமுரமேவ - பூசநட்சத்திரம் சிறப்படைய

### கருத்துரை

பூச நட்சத்திரம் சிறப்படையும்படி தைப்பூச நாளில் அன்பர்கள் விழாக் கொண்டாட, வள்ளியை மணந்து மகிழ்ந்த குகனே! காலனுக்குப் பகையானவனே! ஆலகாலவிடமுண்ட சிவன் மைந்தனே! என்னைக் காத்தருள்வாயாக.

### குறிப்பு

நடு அறுகோணத்தில் 'சரவணபவ' பொருந்தும்படி 2,4,6,8 10,12 எழுத்துக்கள் முறையே சரவணபவ ஆகவும், 49,54,56,61 எழுத்தாகவும், ஓங்காரத்தில் பத்து இடமாகவும், ஆறு ஆறு எழுத்துக்களாகவும் வரும்படிப் பாடப்பட்டுள்ளது;

ஆக எழுத்துக்கள் மொத்தம் 72

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை, பா. 2

## 4. சிவலிங்க பந்தம்

தேர்ப்பந்தத்தில் காணும் இரண்டு தட்டுகளும் தம்மில் ஒன்றுடன் ஒன்று மாறி அமைந்த அமைப்புடையது. அடிப்பகுதியின் வலமிருந்து இடமாகவும், இடமிருந்து வலமாகவும் மாறி மாறி எழுத்துக்கள் அமையுமாறும் பாடலின் இறுதி அடியிலுள்ள சொற்கள் சித்திரத்தின் நடுப்பகுதியில் மேலிருந்து கீழாகச் செங்குத்துக் கோட்டில் அமையுமாறும் இது பாடப்படும்.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

(எ-டு) 'காப்பவ ணீயே காமாட்சி தாயே
அணிபுரி காஞ்சியி லறம்வளர் தேவி
கச்சை யணிமேனி காசணி வாமி
வெண்மண லிலிங்கம் வேண்டி நிறுவிக்
கோனிறை தழுவத் தனமது குழைத்த
காமக் கண்ணி காமேச் வரியே'[1]

### கருத்துரை

அழகிய காஞ்சி நகரில் அறம் வளர்க்கும் தேவியே! வெண் மணலில் லிங்கம் வேண்டி நிறுவி, தனங்கள் குழையுமாறு இறைவனைத் தழுவிய காமாட்சி தாயே! நீயே இவ் அகில உலகங்களையும் காப்பவளாவாய்.

### குறிப்பு

சிவலிங்க பந்தமாக அமையும் பாடலில் 'லிங்கம்' என்ற சொல் அமைவதும், காமாட்சி அம்மை தாமே லிங்கம் சமைத்து இறைவனை வழிபட்ட புராணக்கதை அமைவதும் குறிப்பிடத்தக்கன.

---

1. தேவி காமாட்சி தாசன், ஸ்ரீகாமாட்சி அம்மன் அலங்காரப் பஞ்சகம், பா. 27

# 5. சொக்கட்டான் பந்தனம்

சொக்கட்டான் என்பது ஒருவகை விளையாட்டு. நடுவில் ஒரு கட்டமும் அதைச் சுற்றி நான்கு கட்டங்கள் அமைந்து, இவ்வாறு ஏழு கட்டங்கள் அமைந்து காய்களை உருட்டி ஆடுவதாகும். அவ்வாறே ஒரு பாடலிலுள்ள எழுத்துக்கள் இக்கட்டங்களில் அமையவும், காய்களை மாற்றுவதைப் போல எழுத்துக்களை மாற்றி மாற்றிப் படிக்சவும் பாடல் முடிவடையும்

(ஒற்றில்லாத நிரோட்டக நேரிசை வெண்பா)

(எ-டு) ''தாயனைய சேயனே தாகனக யேகனே
தாயநய ஞேயனே நேயரிய—லாயனே
ஈதாநா தாநீதானே சாலநல சீலனே
காதாதே தாசீதா கா''[1]

(இ-ள்) தா கனகயேகனே-தருவாய் பொன்போன்ற ஒப்பற்றவனே,
தாய் - முதன்மை, நயம் - வேதசாத்திரம்
ஞேயன் - அறியப்படுத்தினவன்,
நேயரியலாயனே - நேயர்களுக்கு இயல்பானவனே,
ஈதா - இலக்குமி கடாட்சம் கொடு,
கா தா - கற்பகத்தை தா, தே தா - கிருபை தா,
சீ தா - திருவைத்தா, கா - காப்பாற்று

**கருத்துரை**

பொன்போன்ற ஒப்பற்ற முதல்வனே! அளவற்ற செல்வமுடன் நின் அருளையும் தந்து காப்பாயாக.

**குறிப்பு**

இப்பாடலில் எழுத்துக்கள் 2-4-6ம், 9-11-13ம், 16-18-20ம், 23-25-27ம், 30-32-34ம், 37-39-41ம், 44-46-48ம் தம்முள் பொருந்தி வந்துள்ளன. ஆக, பாடலிலுள்ள எழுத்துக்கள் 49 எனவும், இவையே சித்திரத்தில் 35 எனவும் அமைகின்றன.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 27

## சொக்கட்டான் பந்தனம்



## 6. திருக்கைப் பந்தம்

ஒரு வட்டத்தின் நடுவே அமைந்த ஒரு கையில் எழுத்துக்கள் பொருந்தும்படிப் பாடுவது திருக்கைப் பந்தம் ஆகும். திருவடிப் பந்தத்தைப் போலவே இதிலும் எழுத்துக்கள் அமையும்.

(நேரிசையாசிரியப்பா)

(எ-டு) 'சண்முகம் திருவார் வாருதி மான
ஞாதி ஞான மாரி பாரி
காரி பாரிலே மாகை யீகை
மாலே போல வேதா வேலவா
நாடகச் சரப ரவியவிர் சீர்பேர்
பேசு தேசு கவிகள் வள்ள
லுளனிவ னிதிமதி மனைசுக
விகமி சைமிக வாகவளி வரமே'[1]

(இ-ள்) திருவார் - மங்களம் நிறைந்த
வாருதி - கடல்
மாரி - மேகம், காரி - வள்ளல்
பாரி - வள்ளல், ரவி - சூரியன்,
சரபம் - சரபப்பட்சி

### கருத்துரை

முருகப் பெருமானே! நாடக உலகில் சிறந்த சண்முகனின் சுற்றம் தழைக்கவும், ஞானம்மிக்க இவன் கொடையில் மேகம், பாரி, காரி இவர்களைப் போலவும் கருணையில் திருமாலைப் போலவும் வாழ வரந்தந்தருளுவாயாக.



1. பி.வி. அப்துல் கபூர் சித்திரகவி மாலை, பா. 17

## திருக்கைப் பந்தம்



# 7. திருவடிப் பந்தம்

ஒரு வட்டத்திற்குள் அமைந்த இரு பாதங்களில் பாடலின் எழுத்துக்கள் அமையுமாறு பாடப்படுவது திருவடிப் பந்தமாகும். இது, உட்புறம் கீழே உள்ள வட்டத்திலிருந்து வலது பாதத்தில் வலப்புறமாக மேலேறி, சுண்டு விரலில் ஏறி இறங்கி, அடுத்த விரலில் ஏறி இறங்கி, மூன்றாவது விரலிலும் ஏறி இறங்கி, கீழ் வட்டத்துக்கு வந்து, மறுபடி இடப்பாதத்தில் மேலேறி, முன் போலவே விரல்களில் ஏறி இறங்கிக் கீழேயுள்ள வட்டத்திலிறங்கி, வெளிவட்டத்தில் ஏறியும் இறங்கியும் வாசிக்கும்படி எழுத்துக்கள் அமைத்துப் பாடப் பெறும்.

(நேரிசை ஆசிரியப்பா)

(எ-டு) ‘திருவடிச் சேவை தாபோ தந்தா
வேதாந்த மேதா மேதகுங் கொங்கு
நிலைகலை நிதிமலி மதிதா வழிகிளை
நீள வாருதி நீர்போற் பெருகிட
வேதா சபை சதா முதலித முரைமன
மறைமுக யோக முளவண வளராமச்
சந்திரன் நீதிசீர் சீல முலக
மிகவே நாவே பேசு பேர்தார்
வாகை வாழ வழகா குகாவே
ளேவேலா மேலா வணிவர
மார நிலைநிதி யாதி தாவே’[1]

---

1. பி.வி. அப்துல் கபூர், சித்திரகவி மாலை, பா. 13

(இ-ள்) கொங்கு - வாசனை,
வழி - மக்கள்
கிளை - சுற்றத்தார்
வாருதி - கடல், மரை - தாமரை
வணம் - அழகு, வளம் - செல்வம்
தார்வாகை - வெற்றிமாலை, அணி - வரிசையாக
ஆர - நிறைய
ஆதி தாவே - மேலே கூறிய எல்லாம் தரவேண்டும்.

## கருத்துரை

முருகனே! நல்லமனமும் மொழியும், அழகும் யோகமும் செல்வமும் பொருந்திய ராமச் சந்திர வள்ளலின் நீதி, புகழ், ஒழுக்கம் இவற்றினை உலகோர் பேசும்படி நீ வரம் தரவேண்டும். தலைவனுக்கு நின் திருப்பாத சேவை தர வேண்டும். ஞானமும் வேதமும் தரவேண்டும். கலை, கல்வி, செல்வம், அறிவாற்றல் போன்றவற்றையும் அவர்களுக்கு அளிப்பாயாக.

# 8. ஏக நாகபந்தம்

இலக்கண நூல்களில் இரட்டை நாகபந்தம் மற்றும் அட்ட நாகபந்தம் என்னும் இரண்டு மட்டும் கூறப்படுகின்றன. ஆயின், இவற்றின் அடிப்படையாக ஏகநாகபந்தம், சதுர நாக பந்தம் போன்றனவும் கிடைக்கின்றன. அவற்றைப் பின்வருமாறு காண லாம்.

ஒரே ஒரு பாம்பு த்ன்னுடலைப்பல வளைவுகளுடன் அமைந் திருக்கும் படியும். அதன் தலைமுதல் வால் வரையிலும் எழுத்துக் கள் அமையும் படியும் பாடப்படுவது ஏக நாகபந்தமாகும். ஏகம் - ஒன்று.

(எ-டு) (நேரிசை வெண்பா)

> 'என்ராமச் சந்திரன் இன்ப மலிசத்தி
> என்னவே தன்பேர்சிர் மன்னவே—வன்புவியிற்
> பல்லூழி வாழிகவி யேற்றல்மா வாணியவள்
> நல்கல்பூ வாகையருள் நன்கு'[1]

(இ-ள்)

என் ராமச்சந்திரன் என்றும் இன்பமிக்க செல்லப் பெயர் சத்தி யென்றும் யாவரும் கூறக்கூடிய தனது பேரும் புகழும் நிலைபெற, வலிமையான பூமியின் கண்ணே கவிகளையேற்றலால், இலக்குமி யும் சரசுவதியும் அழகிய வெற்றிமாலையும் நன்றாகக் கொடுக்க அருள் தங்கித் தலைவன் பல்லூழி வாழ்க.



1. பி. வி. அ ப்துல் கபூர்-சித்திரகவி மாலை. பா. 5.

## ஏக நாகபந்தம்



# 9. சதுர நாகபந்தம்

நான்கு பாம்புகள் தம்முள் பின்னிப் பிணைந்து விளையாடும் படியும் அவற்றின் உடல் முழுதும் எழுத்துக்கள் அமையுமாறும் பாடப்படுவது சதுரநாகபந்தமாகும். ஒரே வெண்பாவிலுள்ள எழுத்துக்கள் நான்கு பாம்புகளின் உடலிலும் ஒன்றாகப் பொருந்தி அமைவதைக் காணலாம். சதுரம் - நான்கு.

(எ-டு) (இன்னிசை வெண்பா)

சண்முக மாலே தமிழறி தாதாவே
விண்புவி யோதுவான் மேகமே மேவிசை
மேனெறி யாலேநீ வாகு கவிதாரே
மேவு புயாவாழ்க வே.[1]

(இ-ள்) மால் - திருமால், விண் - தேவலோகம்,
மேவு இசை - பொருந்திய புகழ்.
மேல் நெறி - உயர்வாகிய நீதி.
வாகு - அழகிய.
கவிதார் - பாமாலை.
மேவுபுயா - உள்ள தோளைப் பெற்றவனே.

## கருத்துரை

தமிழறியும் தாதாவே! வானவரும் மானிடரும் புகழக்கூடிய மேகம்போற் கொடுப்பவனே! பொருந்திய இசையாலாகிய உயர்வான நீதியாலே, திருமாலைப் போன்ற கருணையுள்ள திரு சண்முகமே! நீ அழகிய பாமாலையும் பூமாலையும் தோளின் கண் மேவப்பெற்று வாழ்க.

1. பி. வி. அப்துல் கபூர், சித்திர கவிமாலை, பா. 8.

## சதுர நாக பந்தனம் (வேறு)

இது, நான்கு பாம்புகள் தம்முள் பின்னிப் பிணைந்து விளையாடும் போது நடுவில் சதுரங்கம் போலவே கட்டங்கள் அமைய அவற்றுள் பாடல் எழுத்துக்கள் பொருந்தப் பாடுவதாகும்.

(எ-டு) (நேரிசை வெண்பா)

மேலா பகவா குகனே வெகுகன
வேலா வவாவை வெலுகவே — கோலா
கலாப சுகனேகா வாயே கதிசேர்
கலாப மயில்வா கனா![1]

(இ-ள்) கோலா - அழகா,
கலாபம் - அரைப்பட்டிகை, தேரிகைt

### கருத்துரை

பெருமை மிக்க வேலவனே! மயில்வாகனா! உலக ஆசைகளை வெல்லும்படி என்னைக் காத்தருள்வாயாக.

### குறிப்பு

இப்பாடலில் 5/43, 7/28, 9/18. 11/13, 16/31, 20/37, 26/39 என்னும் எழுத்துக்கள் தம்முள் பொருந்தி அமைந்துள்ளன. ஆக, எழுத்துக்கள் 45 ஆகும்.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை, பா. 35.

# 10. மயில் வாகனப் பந்தம்

மயில் போன்ற சித்திரத்தில் எழுத்துக்கள் பொருந்துமாறு பாடுவது மயில் வாகனப் பந்தமாகும். இது, மயில் தோகைக் கண்ணில் கீழிருந்து முதலெழுத்து தொடங்கி மேலேறி ஒவ்வொரு கண்ணிலும் எழுத்துக்கள் அமைத்து வாசித்து உச்சியிலிருந்து நடுவே இறங்கினால் பாடல் முடிவாகும்படிப் பாடப்படுவதாகும்

(எ.டு) (நேரிசை யாசிரியப்பா)

வேற்கர மகிழ்சிகி மேலாம் வாசவன்
மகளும் நீள்புன வள்ளி யுடனே
பிறங்கும் முருக னருளவும் பிரபலக்
கல்வி செல்வ மதிநலங் கைக்கொடை
சொற்கொடை தூயபே ரவையி லியும்
புனிதனே இந்திர போக யோகனே
தாதா தந்தை தாயைப் பேணியே
சற்சனர் மெச்சிய நாமனே
ராமச் சந்திர நம்பிநீ வாழ்கவே[1]

(இ-ள்) சிகி - மயில், வாசவன் - தேவேந்தின்.
பிறங்கும் - பிரகாசிக்கும், மதி - அறிவு.

## கருத்துரை

வேலாயுதக் கையுடன், மகிழ்வுடன் நடனமிடும் மயில்மேல், இந்திரன் மகளான தெய்வ யானை, நீண்ட தினைப்புன வள்ளி யோடு பிரகாசிக்கும் முருகப்பிரான் அருள் செய்வதால் கல்வியும் செல்வமும் அறிவாற்றலும் நலமான கொடையும் அவைகளில் சொற்கொடை தரக்கூடிய புனிதமுள்ளவனே! இந்திர போக

1. பி. வி. அப்துல் கபூர். சித்திரகவி மாலை. பா. 19.

முள்ள யோகம் பெற்றவனே, தாதாவே, சற்சனர் மெச்சக்கூடிய பேர் பெற்றவனே! இராமச்சந்திரனே நீ நீடூழி வாழ்வாயாக!

## மயில் வாகனப் பந்தம் (வேறு)

இதில், மயிலின் தலைமுதல் தோகை ஈறாக எல்லா இடங்களிலும் பாடலின் எழுத்துக்கள் பொருந்தும்படி பாடப்படும். மேலும், பாடலில் 100 எழுத்துக்கள் அமைய, அவையே சித்திரத்தில் 64 ஆக அமைவதையும் காணலாம்.

(எ-டு) (அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்)

தனதன தனதன தனதன தனதன தனதன தனதன

வரதந திபநக ரசுமுக வொருகுக வறிதுத புவிரிவிதி
மரகத வரிபர மதுகளி லசலவி மலமழ வெனவிரிய
மரபுறு குறுமுனி வருதிம யலசர மதிவிரி விபுதகுரு
சுரபதி நவரச பரததி நகரம துகமழு முனிவருதி 1

(இ-ள்)

வரதந - (விரும்புநர்க்கு இல்லையெனாதளிக்கும்) வரத்தையுந் தனத்தையுமுடைய,
திப நகர - பிரகாசமான நகரத்தானே,
சுமுக - நன்முக முடையானே,
ஒருகுக - (ஆன்மாக்களின் இருதய குகையின் கணிருத்தலின்) ஒப்பற்ற குகனெனுங் காரணப் பெயருடையானே.
வறிது தபு - குறைவற்ற,
விரிவிதி - பெருஞ் சொழிலுள்ள,
மரகத அரி-பச்சை நிறமுள்ள தேராகு மயில் வாகனத்தின்
பரம - கடவுளே, துகள் இல் - குற்றமில்லாத
அசல - மலையனைத்தையும்[1] தனக்குக் கோயிலாகக் கொண்ட
விமல - அழுக்கில்லாதவனே,
மழ என் அல் - அறிவு முதிர்ச்சி யில்லாத வெனது ஆணவ இருளானது.
இரிய - கெடும்படி,
மரபு உறு - பாரம்பரியமான பெரியார் தன்மையுற்ற,
குறுமுனிவர் - அகத்திய மா முனிவர்,

---


1. பாம்பன் சுவாமிகள், பத்துப் பிரபந்தம், பக். 2, 3.

உதிமயல்—உதித்த மயக்கத்தையும்
அசரமதி—சுவாசமில்லாத யோக அறிவையும்
விரி—விளங்கச் சொல்லியருளிய
விபுதகுரு - பேரறிவாளனான ஆசாரியனே,
சுரபதி—தேவர்கள் தலைவனே,

நவரச பரத—சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, ரெள்ளத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம் பயமெனும் ஒன்பது இரசமுள்ள நாடக நாயகனே.

திநகர—உலகை நோக்குமுயிர்க் கண்ணுக்கு ஒளியாக நிற்கும் வான சூரியனாகவும் அச்சூரியனை உடம்பாக உடையானாகவும் ஆன்ம வறிவாகிய கண்ணுக்கு ஒளியாக நிற்கும் ஞான சூரியனாகவும் விளங்குவோனே.

மதுகமழுமுனி—இனிமையான மாறா விளநலமுள்ள முனிவடிவுடையானே.

வருதி—வந்தருள்வாயாக.

## கருத்துரை

குகனே! குறுமுனிக்கு அறிவூட்டிய குமரனே! தேவர் தலைவ சூரியனே! என்னைக் காத்தருள விரைந்து வந்தருள்வாயாக.

## குறிப்பு

இப்பந்தத்தில் மயிலையும் அதன் தலைவனையும் உணர்த்தாநின்ற ''மரகதவரிபரம'' எனுஞ் சொல் இயைந்தமை மிகவும் சிறப்பாகும்.

# 11. மலைப் பந்தம்

கீழிருந்து மேலேறிச் செல்லும்படியும், வரவரக் குறுகி அமையும் (9, 7, 5, 3 என) கட்டங்களில் எழுத்துகள் அமையுமாறும் இடமிருந்து வலமாகப் படித்து மேலேறி நேரே படித்துச் சிகரத்திலிருந்து நடுவே கீழிறங்கினால் செய்யுள் முடியுமாறு அமைப்பது மலைப்பந்தமாகும்.

(நேரிசையாசிரியப்பா)

(எ-டு) "சீரக மேவிய தென்குமரி யணித்தே
நாஞ்சி நாட்டினில் வாழ்மாண் நற்குடி
காசினி காக்கும் வேளிர் நந்தமிழ்
மரபின் மணியென்ன வந்தனன் மருமலி
செந்தமிழ் நாடகஞ் சீர்பெற் றோங்கவேள்
பகவதி யிளவல் பாங்கினில் நடிக்க
மன்னு பேருள வளவன் ராச
ராசன் மலிகவி ஔவையார் முதலணி
வண்பல கூத்துயர் வாகவே அரசனேர்
நடிக்கமா நிலமே நயம்பெற மாச்சபை
வாழ வானேர் கொடைபொழிந்து முதவி
முருகனை யேத்தியே வாய்மை தனமெனப்
பொன்னா ரகமுங் கனகம் பொலிய
மாரி கவிஞரல் மீள யுத்தி
யீகை கருணை யோங்க
மங்கள மாக வாழியர் மகிழ்ந்தே."[1]

(இ-ள்) சீர் அகம் மேவிய—சகல புகழும் தன்னுள் உலவப்பெற்ற. அணிந்து—சமீபத்தில்; மாண்—மாட்சிமையான,

---

1. [illegible]

வேளிர்—வேளாளர், மரபு—குலம், மரு—வாசனை,
மலி—மிகுந்த, வேள்—மன்மதன் போன்ற,
இளவல் —தம்பி,பாங்கு—பக்கத்தில், மன்னு-நிலைபெற்ற,
வளவன்—சோழன், முதலணி—முதலாக அழகிய,
வண்—வளமான, நேர் -ஒப்பாக, மாச்சபை—பெரிய சங்கங்கள்
பொன் ஆர் அகம்—இலக்குமி நிறைந்த வீடு.
மாரி—மேகம்போல். அல்—வறுமை.

## கருத்துரை

நாஞ்சில் நாட்டில் பிறந்தவனும், ஔவையார் போன்ற பல நாடகங்களை இயற்றி நடித்தவனும், புலவரின் வறுமையைத் தீர்த்தவனுமாகிய சண்முகன் நீடுழி வாழ்வாராக!

## குறிப்பு

இப்பாடலில் பாட்டுடைத் தலைவன் பெயர் இல்லை. ஆயினும், இப்பாடலில் கரந்துள்ள ஒரு குறள் வெண்பாவில் அப் பெயர் உள்ளது. அது எவ்வாறெனின், 'சீரக' என்பதில் உள்ள 'க' எழுத்து முதலாக மேலேறிக் கீழிறங்கினால் (சித்திரத்தில் காண்க) வரும் குறள்வெண்பாவின் ஆறாவது சீரில் பெயர் அமையும், அது வருமாறு.

(குறள் வெண்பா)

'கன்ன னுளனே கவியே கலியுகமீ
கன்னனே சண்முகங் காண்'

(இ-ள்) கன்னன் இப்போது இல்லையே என்று வாடிய புலவனே, கலியுகத்தில் ஈயக்கூடிய கன்னன் ஒருவன் இருக்கின்றான். அவன் திரு. சண்முகம், அன்னவனைக் காண உன் வறுமை நீங்கும்.

# 12. மாணிக்கமாலை பந்தம்

மாணிக்க மாலை போன்ற சித்திரத்தில் ஒவ்வொரு மணியிலும் எழுத்துக்கள் அமையுமாறும், பாடலில் உள்ளதைவிடச் சித்திரத்தில் குறைந்த எழுத்துக்கள் அமையவும் பாடப்படுவது மாணிக்கமாலை பந்தமாகும்.

(நேரிசையாசிரியப்பா)

(எ-டு) "சீரார் ராமச் சந்திரன் கன்னன்
கொடைதரு மாமணி மன்மத தேகன்
மேதகு தனத னிதியுளான் மதிமலி
மறையோ னங்கில மலகில கற்றோன்
நீதி யதிபதி தமிழிலே தென்னன்
பொன்மொழி பேசிப் புவிபுனை புகழ்பெறு
மன்பன் இன்னவன் மக்க ளிகசுக
மனைவி துணைவர் வணவள மேவச்
சீர்பேர் பார்மிசைச் சேர
வாழி வாழி வாழி மகிழ்ந்தே."[1]

(இ-ள்) சீர்—கீர்த்தி; தரு—கற்பகம்; மணி—சிந்தாமணி; தனதன்—குபேரன்; மலி—நிறைந்த; அலகில—கணக்கில்லாமல்; தென்னன்—பாண்டியன்; புவிபுனை—உலகோர் புனைந்துரைக்கும்; வணவளம்—அழகிய பல செல்வமும்; பார்மிசை—உலகின் கண்ணே.

**கருத்துரை**

கீர்த்தி பெற்ற ராமச்சந்திரன் என்னும் தலைவன் கொடையில் கர்ணன்; கற்பகத்தரு; சிந்தாமணியைப் போன்றவன்; அழகில் மன்மதன்; ஆங்கிலம் கற்ற நீதியதிபதி; தமிழில் தென்னன்; அன்புடையோன். ஆதலால், அவனும் அவன் மனைவி மக்கள் அனைவரும் எல்லா வளமும் பெற்று வாழ்க!

---



1. பி.வி, அப்துல்கபூர். சித்திரகவி மாலை. பா. 1.

## மாணிக்க மாலைப் பந்தம்



# 13. அறுமீன் பந்தனம்

ஆறுமீன்கள் ஒன்றையொன்று சந்திக்கும்படியாக அமைந்த சித்திரத்தில், மீன்களின் உடல் முழுதும் பாடலின் எழுத்துக்கள் அமைக்கப்பாடுவது அறுமீன் பந்தனமாகும்.

(எ-டு) (நேரிசை ஆசிரியப்பா)

"சங்கர தனையா சாரங்க மருகா
ஐங்கரன் றம்பீ காரணி புதல்வா
மணிமுடி யவனே மலரணி நவிரா
திணியுறு பகனே சேணவிர் மார்ப
கவினுறு பாதா காத்திடும் பரனே
தவித்திடா தாளே சாமீ கோனே
தொழுதிவ னுனையே நானே
பாடினேனே பாப்புனைந் தேனே."[1]

(இ-ள்) பரமசிவன் மகனே! திருமால் மருமகனே! விநாயகன் தம்பியே! சிவத்தன்மையோனே! உன்னையே தொழுது இப் பாடலைப் பாடுகிறேன். நவிரம்—தலை. பகம்—சிவத்தன்மை.

## குறிப்பு

இச்செய்யுளில் உள்ள எழுத்துக்கள் 102 ஆகும். இவற்றுள் 1-ம் எழுத்து ச, 6/99, 14/23-ம், 18-ம் எழுத்து ர, 31/40-35-ம் எழுத்து வ. 48/57-52-ம் எழுத்து ண. 65/74,69 ம் எழுத்து ப. 82/91 86ம் எழுத்து வ பொருந்தி வரக் காணலாம்.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 40.

## அறுமீன் பந்தனம்



# 14. மும்மீன் பந்தனம்

மூன்று மீன்கள் ஒன்றையொன்று சந்திக்கும்படியாக அமைந்த சித்திரத்தில், மீன்களின் உடல் முழுதும் பாடலின் எழுத்துக்கள் அமைக்கப்பாடுவது மும்மீன் பந்தனமாகும்.

(நேரிசை வெண்பா)

(எ-டு)

"வாருலவு மாவேர்சேர் செந்திற்க திர்வேல
வாரணவி லோதனனே வாமிமகா—ஏரகா
வாதணவா காவேநீ நாடக மாகிவல
வாதர வாகிடவே வா."[1]

(அ.கு.) வாது அணவா—வாதுநடுவா?
நாடு அகம் ஆகி—நாடும் மனத்திடமாகி.

## குறிப்பு

இச்செய்யுளிலுள்ள எழுத்துக்கள் மொத்த 55. இவற்றுள், 1-19-37-55ம் ஒரே எழுத்தாகவும், 3/18, 6/17, 9/16, 12/15, 21/36, 24/35, 27/34, 30/33, 39/52, 42/52, 48/51 எழுத்துக்கள் பொருந்தியும் வரக் காணலாம்.

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை, பா. 26.

# 15. விருச்சிக பந்தம்

தேளின் உருவம் போலமைந்த சித்திரத்தில் முன்புறத்தி லுள்ள இடுக்கிகள் ஒவ்வொன்றிலும் நந்நான்கு எழுத்துக்களும், தலையிலொன்றும், முதுகில் நான்குமாக ஐந்தெழுத்துக்களும், ஒரு பக்கத்திற்கு நான்கு கால்களாக இரு பக்கத்திலுமுள்ள எட்டுக் கால்களுக்கும் எட்டெழுத்துக்களும், மணியொன்றனுக்கு ஒரெ ழுத்தாகக் கொடுக்கிலுள்ள ஆறு மணிகளிலும் ஆறெழுத்துக் களும் அமைய, வலப்புற இடுக்கியில் ஏறியிறங்குமாறு எழுத்துக் கள் மாலை மாற்றாய்ப் பொருந்தப் பாடுஞ் செய்யுள் விருச்சிக பந்தமாம். விருச்சிகம் - தேள்.

(குறள் வெண்பா)

(எ-டு) ''திங்கண் முக மானேதே னேமாகச் செங்கமல
மங்கைதிற நின்வாய் மலர்.''[1]

(இ-ள்) திங்கள் முகம் மானே - சந்திரன் போன்ற முகத்தை யுடைய மான் போன்றவளே!

தேனே - தேன் போலினிப்பவளே.

மாகம் செம்மை கமலம் மங்கை திறநின் வாய் மலர்— விண்ணிலுள்ள சிவந்த தாமரை மலர்மே லுறையும் மங்கை யாகிய திருமகள் போன்றவளே, நீ நினது மலர் போன்ற வாய் மலர்ந்தருள்வாய்.

## கருத்துரை

நிலவு போன்ற முகமுடையாய்! மானே! தேனே! திருமகளே! உனது மலர் போன்ற வாய் திறந்து பேசுவாயாக.

## குறிப்பு

இச்செய்யுளில் 'கமானே தேனேமாக' என்ற பகுதி மாலை மாற்றாய் அமைந்து வலப்புற இடுக்கியில் ஏறி இறங்குவதைக் காணலாம்.

---

1. கலாவதி நாடகம். பா. 215.
சித்திர கவி விளக்கம். பக். 65-67

## விருச்சிக பந்தம்



## 16. விளக்குப் பந்தம்

இது சிவலிங்க பந்தம் அமைப்பினையே அடிப்படையாகக் கொண்டது எனலாம்.

'காமாட்சி அம்மன் விளக்கு' அமைப்பில், கீழே அடிப்பகுதி 17 கட்டங்களுடன் அமைந்து, அதற்கு மேலே 15,13,11,9,7 என்னும் கட்டங்களும், மீண்டும் 9,11,13,15,17 என்னும் கட்டங்களும் அமைந்து, மேற்பகுதியில் அரை வட்டமாக உள்ள விளிம்பினைப் பக்கத்திற்கு 12 பிரிவாகப் பிரித்து அவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு எழுத்து அமையும்படியும், இறுதியடியின் முதல் எழுத்து விளக்கின் மேல் நுனியிலும் அடுத்துள்ள எழுத்துக்கள் கீழே இறங்கி இறுதிவரை உள்ள கட்டங்களில் அமையுமாறும் பாடப் படுவது.

(நேரிசை ஆசிரியப்பா)

(எ-டு) தாயின் மணிவிளக் கேந்தித் தருமந்
தழைக்கமனை செழிக்க மாடத் திருத்திநன்
மங்கள மஞ்சட் குங்கும மப்பி
விரைசெறி மாலை வேய்ந்தன் புடனே
மணநிறை மடுவென ஆநெய் யோம்பித்
தாமரை நூற்றிரி யமர்த்தித் தண்ணளி
யாட்சி யாக அருளொளி யேற்றிச்
சிவ சாட்சியே தேவ காட்சியே

மாதாவே தாதாவே காமாதே
காவாயே தாயே நீதா
நீயே தாயே வாகா தேமா
காவே தாதா வேதா மாயே
எனதின மனமுற அறுநான் மனையின்
தேவிஸ்ரீ காம கோடி நாலெண்
ணறமரு ணன்றென் றன்னை
ஸ்ரீகா மாட்சி யம்மன் விளக்கே.[1]

## கருத்துரை

முப்பத்திரண்டு அறங்களையும் அருளும் காமாட்சியே உன் அருளொளியே விளக்கொளியாக ஏற்றி வழிபடுகின்றேன்.

---

1. தேவி காமாட்சி தாசன். ஸ்ரீ காமாட்சி அம்மன் அலங் காரப் பஞ்சகம், பா. 18.

## விளக்குப் பந்தம்



## 17. வேலாயுத பந்தம்

வேலாயுத ஓவியத்தில் பாடல் அமையுமாறு பாடுவது வேலாயுத பந்தமாகும். இது வேலின் தண்டுப் பகுதியில் ஒன்று அல்லது மூன்று வரிசைகள் அமைத்து, பாடலின் எழுத்துக்கள் கீழிருந்து மேலாகப் படித்து வந்து மேலிருந்து நடுக்கோட்டிலுள்ள கட்டங்களின் வழியே கீழேயிறங்கி இறுதிக் கட்டத்தில் முடிவது.

(நேரிசை யாசிரி யப்பா)

(எ-டு) 'வேண கலைவாழ் வேத வாயான்
துணைவேந்து சூழ்மணி கிருபை மனதொடு
விள்ளொ ணாடக மேவக் கவிமழை
தூவி வாசனை தூரம் மலியவே
நம்பும் புகழே நாமுறை காவண்
சாது ஞானச் சற்குண நீதிக்
கேயுரு வேகொண் டிலகு முதாரி
தாதா டி.கே. சண்முகம்
மனைவி மக்களொடு மகிழ்ந்து வாழ்கவே'[1]

(இ-ள்) வேண - வேண்டிய,
துணைவேந்து - அரசர் போன்ற சகோதரர்கள்,
விள் ஒண் - மொழியப் பெறும் பிரகாசமான,
நா முறைகா - நாவைத் தவறாமற் காக்கும்,
வண் - வளமையான,
உதாரி - உதாரகுண முள்ளவன்,

---

1. பி.வி. அப்துல்கபூர்—சித்திர கவிமாலை. பா. 4


தா
ரி தா மு
னொ ன் டி ல கு
வே ரு யு கே க் தி நீ
தா ள ச் ச ற் கு ண
து சா ன் வ கா
நா மு றை
ழே க பு
வே ந ம் பு ம்
ய லி ம ம் ர
ச ளை தூ
வா வி தூ
வி ம ழை
க க் வ
ட க மே
ணா ளொ ள்
த்தொ டு வி
ன ம யை
ணி கி ரு
ம ழ் சூ
வே ந் து
னை து ன்
த வா யா
வே ழ் வா
ண க லை
வே

வேலாயுத பந்தம்

### கருத்துரை

வேண்டிய பல கலை வாக்கும், கவிமழையும் மிக்கவன். கருணை மனமுள்ளவன், ஞானமும் சற்குணமும் மிக்க சண்முகம் மனைவி மக்களோடு மகிழ்ந்து வாழ்கவே!

## வேலாயுத பந்தனம் (வேறு)

வேலாயுதத்தின் கூர்மையான உச்சிமுனையிலிருந்து பாடலின் முதல் எழுத்து தொடங்கி உள்ளுக்குள் இரண்டு சுற்றுச் சுற்றி, நடுத்தண்டின் வழியே கீழிறங்கி முடிவது.

(வஞ்சி விருத்தம்)

(எ-டு) வேலவா குக நாதனே
வாலவே தமு மோதியே
காலவே தயே நாசுற
நீலமா மயி லூர்வையே.[1]

### கருத்துரை

வேதங்களை ஓதி உணர்த்திய வேலனே! அசுரர்களை வென்றவனே! நீலமா மயில் மீதேறிவந்து எம்மைக் காத்தருள்வாயாக.

### குறிப்பு

பாடலிலுள்ள எழுத்துக்கள் 33. சித்திரத்தில் 29 ஆக அமைந்துள்ளன. 1/11, 6/23, 12/20, 16/22 ஆம் எழுத்துக்கள் தம்முள் பொருந்தியுள்ளன.

## வேலாயுத பந்தம் (வேறு)

(நேரிசை வெண்பா)

(எ-டு) வாலவே தாந்தபா வாசம்போ கத்தன்பா
மாலைபூ ணேமதிற மால்வலர்தே—சாலவ
மாபாசம் போக மதிதேசார் மாபூதம்
வாபாதந் தாவேல வா.[2]

(இ-ள்) வால - தூயவனே
வேதாந்த பாவா - வேதாந்த விலாசக் கடவுளே
சம்போகத்து அன்பா - பேரின்பமெனுஞ் சுவானுபவத்திற்கு நாயகனே

---

1. கந்தன் சித்திர பந்தன மாலை. பா. 41
2. பாம்பன் சுவாமிகள், [illegible] பிரபந்தம் [illegible]

# வேலாயுத பந்தனம்



மாலை பூண் - மாலைகளை யணியும்
ஏம - செம்பொன் னெனத் திகழ்வோனே.
திறமால் - வன்மை சான்ற திருமாலுக்கும்
வலர் - (மற்ற) வல்லவர்களுக்கும்
தே - கடவுளே
சால் அவம் - (என்னகத்தே) மிகுந்துள்ள பயனின்மையும்
மா பாசம் - பெரிய ஆணவாதி பந்தங்களும்
போக - ஒழிய
மதி தேசு ஆர் - ஞானமும் புகழுமுள்ள
மா பூதம் - பரமான் மாவே
வா - (நீ என்முன்) வந்தருளுக
பாதம் தா - திருவடிச் செல்வத்தைத் தந்தருளுக
வேலவா - வேலிறைவனே, என்றவாறு.

## கருத்துரை

வேலவனே! வல்லவர்க்குக் கடவுளே! நின் திருவடிச் செல்வத்தைத் தந்தருள்வாயாக.

## குறிப்பு

இப்புதிய வேலாயுத பந்தத்தில் பாடலின் முதல் எழுத்து கீழிருந்து தொடங்கி மேலேறக் காணலாம். அத்துடன், பாடலிலுள்ள 55 எழுத்துக்கள் சித்திரத்தில் 30 ஆக அமைகின்றன.

## 18. பிந்துசி யுதகம்

இது, ஒரு ஒற்றெழுத்தை நீக்கினும், யாப்புக்கு இயைந்து நின்று அத்தொடருக்கு இயையப் பொருள் தருவது.

(நேரிசை வெண்பா)

(எ-டு) 'அண்ணலிடப் பாலமர்ந்தா யாறுமுக னுக்கன்னாய்
மண்ணையிடந் தாற்கிளைய மாதங்காய்—நண்ணியசீர்
மாமலைக்குச் சேயான மாதங்கத் தைப்பெற்றாய்
வாமசம யத்தாய்தீர் மாசு'[1]

இதில், மாதங்கத்தை என்றதில் ஙகர ஒற்றை நீக்க, மாத கத்தை என்றாகும். அதனை மாது அகத்தை எனப் பிரித்து மாமலைக்குச் சேயான மாது, அகத்தைப் பெற்று ஆய், வாம சமயத்தாய் எனக் கொள்ளலாம். அகத்தைப் பெற்று ஆய் = (பெரியோர் மனத்தைக் கொண்டு சருதத் தக்க)

வாம சமயம்—சத்தி மதம்.

---

1. சதாவதானம் சுப்பிரமணிய ஐயரியற்றிய பல பாடற் றிரட்டு பா. 188

## 19. நடுவெழுத்தலங்காரம்

ஒரு பாடலிலுள்ள சொற்கள் ஒவ்வொன்றுக்கும் மூன்றெழுத்தாகவே பொருள் வருவித்து, உரையில் நின்ற நடு எழுத்தெல்லாம் ஒரு செய்யுளாக வருவது.

(எ-டு) (கட்டளைக் கலித்துறை)

பாலுமை மால்பொறி கீழ்துவர் பார்நிறை பாக்கலையே
காலகா லன்றலை சங்குபூக் கோபம்பாக் காயுடனே
மேலவர் பெண்ணீர் அகலங் அகலங் குடைமணி
வேள்மனையே
சூலிநட்_புத்தார் அரும்பு திவிபொன்னி சொற்கிளியே[1]

இப்பாடலில் நடுவெழுத்தலங்காரமாகப் பாட்டுடைத் தலைவன் பெயர் அமைவதைப் பின்வரும் குறள் வெண்பா விளக்குகிறது.

(குறள் வெண்பா)

'சொற்குரை மூன்றெழுத்தாம் தூய நடுவெழுத்து
நற்பாட் டுடைத்தலைவ னாம்'

அது வருமாறு:

| | |
|---|---|
| பால்-அமுது | பார்-சகம் |
| உமை-சத்தி | நிறைதுலாம் |
| மால்-புதன் | பா - கவிதை |
| பொறி-பூமின் | கலை-வித்தை |
| கீழ்-தாழ்வு | காலகாலன்-சிவன் |
| துவர்-பாக்கு | தலை - சிரம் |

1. பி. வி. அப்துல் கபூர். சித்திரகவி மாலை. பா. 25.

| | |
|---|---|
| சங்கு-நத்து | வேள்-மதன் |
| பூ-மேதினி | மனை-அகம் |
| கோபம் சினம் | சூலி-கன்னி |
| பாக்கு-கமுகு | நட்பு-நேசம் |
| ஆய்-அன்னை | தார்-கண்ணி |
| மேலவர்பெண்-விபுதி | அரும்பு:பூமுகை |
| நீர்-பயம் | திவி-பகல் |
| அகலம்-மார்பு | |
| குடை-கவிகை | பொன்னி-காவேரி |
| மணி-முத்து | கிளி-கிள்ளை |

இதில் நடுநின்ற எழுத்தெல்லாம் மேலிருந்து வாசித்தால்

'முத்தமிழ்க்க லாவித்வ ரத்தின முன்புயர்
வித்தகன் சண்முக வேள்'

என்ற குறள் வெண்பா வரும்.

# 20. விசித்திர அகவல்

ஒரு குறள் வெண்பாவிலுள்ள ஒவ்வோர் எழுத்தையும் ஒவ்வோரடியினீற்றில் அமையுமாறு பாடும்அகவற்பா விசித்திர அகவல் ஆகும்.

(எ-டு) (குறள் வெண்பா)

'தரும புரவீச சைவரிசை யைய
வருக வருணல்க மா.[1]

இக்குறள் வெண்பாவிலுள்ள ஒவ்வோரெழுத்தையும் கீழ்க் கண்ட விசித்திரவகவலின் ஒவ்வோரடியினீற்றில் அமைந்துள்ளதைக் காணலாம்.

'வருக வருக தருமபுர வரத
பண்டார சந்நி தானமாப் பலரு
மேத்து மிறைவ வருக விம்ம
ணல்ல லுறவிழை யசுரர்சேர் திரிபு
ரந்தனை யெரித்தவ ரன்றன் சிர
தமர்ந்த சைவ சமய மவனிவி
ரியமுற வொளிரவி ரியைய வருகச
ராசரத் துளசைவ ராசிகட் குரையிசை
தேசிக வருக சீவர் களுக்கிவ
ணவல மொழித்துநல் லமுத மருள்புரி
ஞானசம் பந்த வருக நனிநசை
கொண்டினி துலகங் கொளத்தமிழ்க் கல்வியை

---

1. சிந்துபூந்துறை. பி. பி. நாராயணசாமி நாயுடு. தோத்திரப் பாடற்றிரட்டு. பா. 422-423

யன்புடன் விருத்தி யமையச்செய் யாரிய
வின்புடன் வருக வியைந்தவிச் சைவ
மடத்திலோர் தம்பிரான் வைக்க வருடரு
மத்தவருக வகில மிசை மிக்க
புகழ்கொடே சிகர்தமிற் பெருமை வாய்புங்கவ
மகிழ்ந்திவண் வருக கல்வி வாயொரு
மன்றளி மாதவ வருகநல் லருண்மண
மடியேன் பாலுநின் னடிமலர் சொல்லால்
வாழ்த்து மன்பர் பாலுமகிழ் மிக
வாய்ந்து தந்து காத்தனின் மாண்பமா
மேற்சொல் லடிகளில் விளங்கிய வீற்றி
லுளவக் கரங்களை வுவப்பட னிசைக்கில்
தருமபுர வீச சைவரிசை யைய
வருக வருணல்க மாவென வேயொரு
குறள்வெண் பாவருங் குலவிய
மனதி னேற்று மகிழ்வு கொள்கவே

## குறிப்பு

இப்பாடல் விசித்திர அகவலாய் அமைவதை இப்பாடலின் இறுதி ஆறு அடிகளும் விளக்கக் காணலாம்.

## மாலை மாற்று லிங்க பந்தம்



# இணைந்த வடிவங்கள்

சித்திரக்கவிகளுள் சில, இரண்டு பாடல்களும் இரண்டு வடிவமும் எனச் சேர்ந்த நிலையிலும், ஒரே பாடலில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வடிவங்களைக் கொண்டும், ஒரே பாடல் பல சித்திரக் கவி வகைகளாக மாறியும் அமைக்கப்படு கின்றன. இத்தகைய இணைந்த வடிவங்களை அமைப்பது மிகவும் குறிப்பிடத்தக்கது.

எடுத்துக் காட்டாக. லிங்கபந்தம், மாலை மாற்று என இரு வகையான சித்திரக்கவிகள் ஒருவர் மீதே பாடும் பொழுது அவை இரண்டும் இணைந்து ஒரே சித்திரத்தில் அமைக்கப்படுகின்றன. அவை வருமாறு:

## 1. மாலை மாற்று லிங்கபந்தம்
## ஸ்ரீ சற்குரு லிங்கபந்தம்

(நேரிசை வெண்பா)

1. சீர்த்தகமே னிப்பரமன் செய்யகழல் காணவெல்லாங்
 கார்த்தகலிங் கவ்வமய்ந்தென் காப்பவராய் - பேர்ப்பனுவல்
 அல்லலக லச்சொல்லு மண்ணல் குருநாதச்
 செல்லப்ப தெய்வலிங்க மே[1]

ஸ்ரீ சற்குரு மாலை மாற்று
(நேரிசை வெண்பா)

2. காசிதே வாந்தபய காதா மனோகமல
 வாசா மனோனிலய மாவேசா - ஈசாவே
 மாயலனி னோமசா வாலமக னோமதா
 காயபதந் வாதேசி கா.[2]

---

1. 2. ஸ்ரீ சிவானந்த சுவாமிகள், சப்த ரசமஞ்சரி பக். 3-4.

சித்திரத்தில், லிங்கத்தைச் சுற்றி மாலை அமையுமாறு இப் பாடல்கள் அமைக்கப் பெறும்.

(இ-ள்) பாடல்-1

ஏ மனமே,

சீர்த்தக மேனிப் பரமன் - சிறப்பும் பெருமையும் வாய்ந்த திருமேனியை யுடைய பரம சிவத்தினது.

செய்ய கழல் காண - செவ்விதாகிய திருவடிகளைச் (சிடர்கள்) தரிசிக்க வேண்டி

இங்கு - இவ்விடத்தில்

அய்ந்தென் - ஐந்து என்று கூறும்படியாக.

அகல் - விரிந்திருக்கின்றதும் ஆகிய,

அவ்வம் (அவம்) - குற்றம் - பஞ்சமா பாதகங்கள்,

எல்லாம் - அனைத்தையும்,

கார்த்து - நீக்கும்படி செய்து, காப்பவராய்

பேர்ப்பனுவல் - பெருமை பொருத்திய ஞான சாத்திரங்களை'

அல்லல் - துன்பம்,

அண்ணல் - பெருமையிற் சிறந்த,

## கருத்துரை

பெருமை பொருந்திய குருநாதராகிய செல்லப்பர் என்பார் தெய்வீகத் தன்மை வாய்ந்த சிவலிங்கமே யாகும்.

பாடல்-2:

சி - சிவமாகிய, தேவ - கடவுளே,

மனோகமல வாசா-இருதய தாமரையின்கண் வீற்றிருப்பவரே

ஈசாவே - தலைவரே.

மாசா - மகதைஸ்வர்யம் உடையவரே.

தேசிகா - சற்குரு மூர்த்தியே, கா - காப்பாற்றும்

மாயல் - மரணமாகிய, அளி - பெட்டியில் அகப்பட்டு,

நோ - நோகுதல் வடிவ துன்பத்தால்.

அசா - தளர்ச்சியடைந்து,

வால மகன் - பாலகனாகிய அடியேன்,

நோமதா - வருந்துதல் தக்கதோ,

காய பதன் - காய சித்தியும்

மனோ நிலயமாவ - மனமானது பிரம சொரூபத்தில் நிலை பெறுமாறு செய்து,

அந்த பயன் - முடிவான முத்தி ரூப நலனையும்

தாகா - தந்து காப்பாயாக,

**கருத்துரை**

சிவமே! என் மரண பயம் நீங்கவும் சித்தி பெறவும், முடிவான முத்தியின்பத்தை அடையவும் என்னைக் காத்தருள் வீராக.

# 2. நெட்டெழுத்துச் செய்யுளும் மாலை மாற்றும் திரிபங்கியும் துவித நாகபந்தமும்

முழுதும் நெட்டெழுத்தாலேயே இயன்ற பின்வரும் பாடலில் 1, 2 ஆம் அடிகள் தம்மின் மாலை மாற்றாம் நான்கடிகளையும் முறையே யிரண்டிரண்டு சீராகப் பிரித்துப் படிக்கும்போது பாம்புக்கொரு பாட்டாகப் பொருளொடு முடிகின்ற, மோனை பிழையா விரண்டு வஞ்சித் துறைகளாகும். எனவே, இவ்விருத்தம் சிறப்புடைய நெட்டெழுத்துச் செய்யுளும், மாலை மாற்றும், திரிபங்கியும், துவித நாக பந்தமும் ஆகும்.

(கலிவிருத்தம்)

1. சேயா சேயாதே தேயா சேயாசே
மாயா மாயாவா வாயா மாயாமா
வாயா மாவாயா மாயா சேமாசே
யோயா நேயாவோ யாயே தேயாளே.

(வஞ்சித்துறை)

2. சேயா சேயாதே
தேயா சேயாசே
மாயா மாயாவா
வாயா மாயாமா

(வஞ்சித்துறை)

3. வாயா மாவாயா
மாயா சேமாசே
யோயா நேயாவோ
யாயே தேயாளே

(இ-ள்) சேயாசேயா - சேயவனே சேயவனே
தே - கடவுளே.
தேய் ஆசு - (எனது) சிறுமையைக் கெடு.
ஆசு ஏமா - சிறுமைக்கு நமனாயுள்ளானே

---

1, 2, 3 பாடல்கள் [illegible] பா 15.6

யாமாயா—(சத்திரூபமாகச் சுருங்கியிருந்து) வியக்திரூபமாக விரியும் மாய மாயைக் கதிபதியே,
வா—வந்தருள்வாயாக,
வாயா மாயாமா—(உயிர்களோடத்து வித மா யி ரு ந் து மவைகட்குக்) கிட்டாத மகா சிவ ர.ாத்திரியத்தனே.
வாயா—உண்மைப்பாடுடையானே,
மாவாயா – சிறந்த வாக்குடையானே,
மாயா—மாய வித்தைகளுடையானே
சேமா—சேமமுடையானே.
சேய்—இளநலமுடையானே.
ஓயாநேயா—(அன்பர் மாட்டு) ஒழியா நேயமுடையானே.
ஓயாய் ஏது—(என் கண்ணதாய) ஏதெனுங் குற்றத்தையொழித்தருள்,
ஆள்—ஆண்டருள்.

## கருத்துரை

சிறுமையை நீக்கும்சேயவனே! என் கண்ணுள்ள குற்றங்களைக் களைந்து என்னை ஆண்டருள் வாயாக.

இவ்வாறு சித்திரக்கவிகள் பல இணைந்த வடிங்களை இலக்கியங்களில் காணலாம். குறிப்பாக மாலைமாற்று மாலை என்னும் ஒரு நூலில் பல்வேறு வகைகள் இணைந்து அமைந்துள்ளதைப் பின்வருமாறு அறியலாம்.

# 3. மாலை மாற்று மாலை

காப்பு

யமகம்

(கலி விருத்தம்)

மாலை மாற்றுறு மாழை யுடைத்துழாய்
மாலை மாற்றுவர் வாயனை யாள்குகன்
மாலை மாற்று வரகவிக் காந்துணை
மாலை மாற்று வரத கணேசனே.

(இ-ள்) மாலை—இந்திரனையும்,
மாற்று உறு—மாற்று (ஒளி) மிக்க,
மாழை உடை—பீதாம்பரத்தை உடுத்த,
துழாய் மாலை மால்—துளவமாலை புனைந்த திருமாலாகிய,
துவர்வாயனை—பவளம் போன்ற வாயினையுடைய விட்டுணுவையும்,
ஆள்குசன்—ஆண்டருளிய குமாரக் கடவுளது.
மாலை மாற்று வரகவிக்கு—மாலைமாற்றென்னும் மேலாகிய கவிமாலையைப் பாடுதற்கு,
ஆம்துணை—துணை ஆவான்
மாலை மாற்று—(அடியாரது) மயக்கத்தை நீக்குகின்ற.
வரதகணேசன்—வரதனாகிய விநாயகக் கடவுள்.
ஏ—அசை.

## கருத்துரை

இந்திரன், பிரமன், திருமால் முதலியோரை ஆண்டருளிய முருகன்மீது மாலை மாற்று என்னும் கவி பாடுவதற்கு விநாயகனே துணை ஆவான்.

இதுவுமது

### மாலை மாற்று

(கட்டளைக் கலித்துறை)

'வேறல மேலவ வாமன மாவய வேதறுவீ
நாறு சமாகய நாடுர வேள்கவி பாடுறமா
மாறடு பாவிகள் வேரடு நாயக மாசறுநா
வீறுத வேயவ மானம வாவல மேலறவே'

(இ-ள்) வேறு அலம் (அல்லம்)—(யாம் நின்னடிமையேயன்றி) வேறல்லேம்.
மேல அவாம் மனம் ஆ—மேலானவற்றையே விரும்புகின்ற மனமாகிய,
வயவு ஏது அறுவீ—ஆசையாகிய பிறப்பின் காரணமற்ற மலரின்கண்,
நாறுசமா—தோன்றுகின்ற நடுவு நிலைமையுடையானே,
கய—யானை முகத்தானே,

நாடு உர வேள் கவி பாடுற—விரும்புகின்ற இன்மை
யுடைய செவ்வேளது மாலை மாற்றுக் கவி
மாலை பாடுதற்கு,
மாமாறு—பெருமை நீங்கிய,
அடுபாவிகள்—கொலை பாதகர்களை,
வேர் அடு நாயக—முதலோடு அழிக்கின்ற நாயகனே,
மாசு அறு நா வீறு உதவு—குற்றமற்ற நாவன்மையை
அருளுக,
ஏய் அவம் என்னிடத்துள்ள பயனில் செயல்களும்,
மானம்—செருக்கும்,
அவா—ஆசையும்,
அலம்—துன்பமும் (ஆகிய இவைகள்)
மேல் அற—இனிமேல் ஒழியுமாறு
ஏ—அசை

## கருத்துரை

யானை முகத்தானே! நடு நாயகனே, செவ்வேளின் மாலை மாற்றினைப் பாட என் துன்பங்களை ஒழித்து நாவன்மையை அருளுக.

## நூல்

(வெண்பா)

1. வாலகன மானீயா மாவல வேனீத
நீலன நேசாயா நீயல—மாலய
வீயாசா னேநல னீதனீ வேலவ
மாயாநீ மானகல வா.

(இ-ள்) வால் அகன்—தூயமனத்தின் கண் விளங்கும்
அம்மான் நீ ஐயன் நீயே,
மாவல—சிறப்புற்ற வல்லவனே,
ஏல் நீத—பொருந்திய நீதியையுடையவனே,
நீல் அன்னம் நேசா—நீல நிறமுற்ற அன்னம் போன்ற
வள்ளியம்மையிடத்து நேசமுடையவனே,
யா நீ அல (நீ அலயா)—நீ அல்லாதன யாவை?
மால் அயன் நீ—விட்டுணுவும் பிரமனும் நீயே,
ஆசானே—குருவே!
நலன் ஈதனீ—நன்மையாகிய வீடுபேற்றை அருளுகின்ற
அப்பற்றவனே,

வேலவ—வேலவனே,
மாயா நீமான—மாயை நீங்கிய பெருமையையுடையவனே
கல வா—(என்னுள்) கலத்தற்கு வருக.

## கருத்துரை

நீதியும் வல்லமையும் பொருந்தியவனே! வீடுபேறளிக்கும் வேலவனே! எல்லாமாயிருப்பவனே! என்னுட் கலத்தற்கு வருவாயாக.

## குறிப்பு

இச்செய்யுள் காதை கரப்பாகவும், கரந்துறையாகவும் பல சித்திரக்கவிகள் அமையப் பெற்ற இரட்டை நாகபந்த மாலை மாற்று ஆகும்.

மேலும், இவ்வெண்பாவின்கண் 'நீலன' என்பதொழிந்த ஏனையிடத்துள்ள, னகரங்களை நகரமாகக் கொள்ளப் பிறிதொரு பாடம் ஆகும். அது வருமாறு,

வாலகந மாநியா மாவல வேநீத
நீலன நேசாயா நீயல—மாலய
நீயாசா நேநல நீதநீ வேலவ
மாயாநீ மாநகல வா

(இ-ள்) வால—தூயனே.
கந—கண்ணியமுடையானே,
மாநீயா மாவல—பெருமைநீங்காத மகாவலியுடையானே
ஏம் நீத—இன்பந்தரும் நீதனே,
நீல் அன்னம் நேசா யா நீ அல—இவை முன்போலவே பொருள் தரும்
மால் அ்ய—பெரிய ஆட்டுவாகனமுடையானே.
நீ ஆசு ஆம்—நீயே (எமது விருப்பிற்கு) இலக்காம்,
நே நலம் நீதம் நீ—(எம்) அன்பும் நன்மையும் நீதியும் நீயே,
வேலவ—வேலோனே,
மாயா நீமா—அழியாத ஒளியையுடைய சூரியனே.
நகு அலவா—விளங்குகின்ற சந்திரனே.

## கருத்துரை

எல்லாப் பொருளுமானவனே! நீயே எமது விருப்பிற்கு இலக்காம்.

## குறிப்பு

இனி, இவ்வெண்பாவின்கண் 'வாலகன' என்னும் முதற் சீர்க்கட் காதை கரப்பாக ஒரு பாட்டுள்ளது. அது பின்வருமாறு அமைகிறது.

ஈண்டு வாலகன' என்னும் முதற்சீர்க்கண் லகர உயிர்மெய் ஒழிந்த ஏனை மூன்றெழுத்தின்கணுள்ள வகர ககர னகரமென்னும் மூன்று மெய்யும், அகர ஆகாரமென்னும் இரண்டுயிருங் கூடிப் பிறந்த, வா, கா, ன, வ, என்னும் நான்கு உயிர்மெய் யெழுத்தையும், நேராகவும் மாறியும் நான்கு முறை மடக்கி வாசிக்க இப்பாட்டு வரும். இதனால் இது காதை கரப்பாயிற்று. இது ஏகபாதமாகவும், மாலைமாற்றாகவும், நான்காரைச் சக்கர மாகவும் அமைந்திருக்கின்றது.

(வஞ்சி விருத்தம்)

வாகா னவவன காவா
வாகா னவவன காவா
வாகா னவவன காவா
வாகா னவவன காவா

இது, காதை கரப்பாக வந்த நான்காரைச் சக்கரமாகிய ஏகபாத மாலை மாற்று.

பதப்பிரிவு: வா கானவ வல் நகா வா
வாகு ஆன அவன் அகா ஆ
ஆ கா நவ வன கா ஆ
வாகு ஆனவ அனகா வா.

(இ-ள்) வா, கானவ—(கானவ வா) வேடவுருக் கொண்டோனே வருக
வல் நகா—வலிய மலைகளையுடையானே,
வாவாகு—வாவுகின்ற அழகிய,
ஆன—இடபவாகனத்தையுடைய,
அவன் அகா—அச்சிவபிரானது மனத்தில் விளங்குபவனே
ஆ ஆ கா—ஆவா (என்னையிப் பொழுதே) காத்தருள்க.
நவ வன—புதுமையான அழகுடையானே.
கா ஆ வாகு ஆனவ—(வாகு கா ஆ ஆனவ) கை கற்பக மாக ஆனவனே
அனகா வா—மலரகிதனே வருக.

## கருத்துரை

அழகனே! மலையில் தங்கும் வேடனே! சிவபிரானின் மனத்தில் விளங்குபவனே! என்னை இப்பொழுதே காத்தருள்க.

## குறிப்பு

இச்செய்யுள் நான்காரைச் சக்கரத்திலும் பொருந்துமாறு பாடப்பட்டுள்ளது. அது நடுவே 'வா' என்பது நின்று நான்காரினும், கா என்பது நின்று சூட்டின்மேற் பன்னிரண்டெழுத்து நின்று முற்றுப் பெறக் காணலாம்.

இனி, இவ்வெண்பாவின் நான்கடியிலும் சில எழுத்துக்களைப் பொறுக்கி வாசிக்கப் பிறிதொரு காதை கரப்பாக ஒரு சருப்பதோபத்திரச் செய்யுளும் வரும். அது வருமாறு -

(கலி விருத்தம்)

வாமா னீயா யாநீ மாவா
மாநீ யானே னேயா னீமா
நீயா சானே நேசா யாநீ
யானே நேவா வானே நேயா.

(இ-ள்) வா - வருக,
மால் நீ - என் மயக்கத்தை நீக்குக
யாய் ஆம் நீ - நீயே எனக்குத் தாயாகின்றாய்,
மா வாமா - பெருமை பொருந்திய அழகனே
நீ ஆனேன் ஏ யான் - யான் நீயே ஆனேன்
நீமா - ஒளிப்பொருளே
நீ ஆசானே - நீயே எனக்குக் குருவுமாகின்றாய்
நே சாயா - (இனி) அன்பு என்னை விட்டு நீங்காது
நீயானே - என்னைவிட்டு நீங்காதிருப்போனே
நே வாவானே - அன்பைவிட்டுத் தாண்டிச்செல்லாத இயல்புடையானே
நேயா - நேயனே

## கருத்துரை

என் தாய்போன்ற அன்பனே! அழகும் ஒளியும் பொருந்திய நீயே யான் ஆனேன், என்னை விட்டு நீங்காது இருக்கின்ற குருவே, என் மயக்கத்தை நீக்க வருக.

இச்செய்யுள் அமைந்த விதம்

வாலகன, மானியா என்னும் இவ்வெண்பாவின் இருசீர்க் கண்ணுமுள்ள, வா-மா-நீ-யா என்னும் நான்கு நெடிலையும் நேராகவும் மாறியும் படிக்க, 'வாமா னீயா யானீ மாவா' எனச் சருப்பதோ பத்திரத்தின் முதலடி வரும்.

இரண்டாவது அடியில், நேசாயா நீயலமா என்பதன் ஈறு முதலாகவுள்ள மா, நீ, யா, னே என்னும் நான்கு நெடிலை மட்டும் நேராகவும் மாறியும் படிக்க, 'மாநீ யானே னேயா நீமா' என அச் செய்யுளின் இரண்டாவதடி வரும்.

மூன்றாவதடியில், 'நீயா சானே' என்பதன்கணுள்ள நான்கு நெடிலையும் நேராகவும் மாறியும் படிக்க, 'நீயா சானே நேசா யானீ' என அச்செய்யுளின் இரண்டாவதடி வரும்.

நான்காவதடியில் 'மாயாநீ மான கலவா' என்பதன் கணுள்ள யா, வா என்னும் இரண்டு நெடிலை மட்டும் கொண்டு அவற்றுக் கிடையே இரண்டாவதடியிலும் மூன்றாவதடியிலுமுள்ள, னே, நே என்னும் இரண்டு நெடிலையுந் சேர்த்து நேராகவும் மாறியும் படிக்க 'யானே நேவா வானே நேயா' என அதன் நான்காவதடி வரும்.

## இரட்டை நாக பந்தம்

இனி, இவ்வெண்பாவானது இரட்டை நாகபந்தத்திலும் அமையும்.

இந்நாகங்களின் உடலுக்குள் நான்கிடத்தில் இரண்டிடம் வலமாகவும், இரண்டிடம் இடமாகவும், 'தேவ' என்னு மெழுத்துத் தொடங்கி வாசிக்க 'வேலய நீமா நலனீ' என்னும் வாசகமமையும். வேல் அய நீமா - வேலாயுதத் தையும் ஆட்டு வாகனத்தையுமுடைய ஒளி வடிவானவனே, நலன் ஈ—நன் மையையருளுக என்பது இதன் பொருள்.

## ஐந்து ஏகபாதங்கள்

இவ் இரட்டை நாகங்களின் புறத்தே 'வா' முதலிய ஐந்தெழுத்துள்ள பத்திடங்களில் யாதேனுமொன்றை முதலாகக் கொண்டு வலமாக வேனும் இடமாக வேனும் வாசிக்க ஐந்து ஏகபாதங்கள் வரும். இவை சரந்துறை எனப்படும். இவை பிற சித்திரக்கவிகளாகவும் அமையும். இவை அமையுமாறு:

வலப்புறத்து நாகத்தின் தலையின்கணுள்ள 'வா' முதலாகக் கொண்டு வலமாக இருமுறை சுற்றி வாசிக்க, 'வாத மாதவா' என்னும் முதல் செய்யுள் வரும்.

அவ் 'வா' என்பதே முதலாகக் கொண்டு இடமாக இருமுறை சுற்றி வாசிக்க 'வாவாதமாத' என்னும் இரண்டாவது செய்யுள் வரும்.

அவ் 'வா' என்பதனையடுத்து வலப்புறமாக மூலைவளைவின் கணுள்ள தகரத்தை முதலாகக் கொண்டு வலமாக முன்போல் வாசிக்க 'தமாதவாவா' என்னும் மூன்றாவது செய்யுள் வரும்.

அதனை முன்போல இடமாக வாசிக்க 'தவாவாதமா' என்னும் நான்காவது செய்யுள் வரும்.

அதனையடுத்து வலத்தே நடுவளைவின் கணுள்ள 'மா' என்பது முதலாகக் கொண்டு வலமாக வேனும் இடமாகவேனும் முன்போல வாசிக்க 'மாதவாவாத' என்னும் ஐந்தாவது செய்யுள் வரும்.

ஏனையேழிடத்தும் இவ்வாறு வாசிக்க அது இவ்வைந்து செய்யுளுளொன்றாகவே முடியும்.

இவ்வைந்து செய்யுளும் பஞ்சபங்கியாகவும் ஒருவகைச் சருப்பதோ பத்திரமாகவும் அமையும்.

## குறிப்பு

இனி ஒரு நிரை ஐந்தாக இருபத்தைந்து அறை கீறி, இவ்வைந்து செய்யுளையும் எழுதி மேனின்று கிழிழியவும், கீழ் நின்று மேலேறவும் முதற்றொடங்கி இறுதியாகவும், இறுதி தொடங்கி முதலாகவும் நான்கு முகத்தினும் வாசித்தாலும் யாதானுமோரடி வரும். அதனை நான்காக மடக்க அது இவ்வைந்து செய்யுளுள் ஒன்றாக முடியும். அதனால் இது சருப்பதோபத்திரத்தின் இனமாயிற்று. இது ஒருவகைச் சுழிகுளமுமாம்.

## முதலாவது ஏகபாதம்

(வஞ்சித் துறை)

'வாத மாதவா
வாத மாதவா
வாத மாதவா
வாத மாதவா'

இது மாலை மாற்றும், ஒருவகை நான்காரைச் சக்கரமுமாகும். நான்காரைச் சக்கரம் நடுவே 'வா' என்பது நின்று சூட்டில் எட்டெழுத்து நின்று முடிதலை வரைந்து காணலாம்.

(இ-ள்) வா - வருக
தமா - தமோகுண வடிவனே
தவா - தவ வடிவனே
ஆத - குருவே
மாது அவா - பெண்ணாசையும்
வாது - மித்தியாவாதங்களும்
அம்மா தவாவா - (நீவரின்) அம்மா என்னை விட்டு நீங்காவோ (நீங்கும்)
தம் ஆதவா - அஞ்ஞான இருளுக்குச் சூரியனே

## கருத்துரை

தவ வடிவனே! குருவே! அஞ்ஞான இருள் என்னைவிட்டு நீங்க வந்தருள்வாயாக.

## இரண்டாவது ஏகபாதம்

(வஞ்சித்துறை)

'வாவாத மாத
வாவாத மாத
வாவாத மாத
வாவாத மாத

(இ-ள்) வாவாது - (யாம் நினது நெறியைக்) கடவாது நின்று
அம்மா - அசை
தவா - தவவடிவனே
வாதம் மாது அவாவாது - வாதங்களும் பெண் ஆசையுமாகிய இருளை விரும்பாதிருக்குமாறு,
அம் ஆதவா - அழகிய சூரியனே
வா - வருக
தம் ஆத - அன்பர் தமக்குக் குருவானவனே

## குறிப்பு

இப்பாடலை ஈறு முதலாக வாசிக்க மூன்றாவது ஏகபாதம் வரும். எனவே இதுவும் ஒருவகைக் கரந்துறையாயிற்று.

## மூன்றாவது ஏகபாதம்

(வஞ்சித்துறை)

'தமாத வாவா
தமாத வாவா
தமாத வாவா
தமாத வாவா'

பதப்பிரிவு:- தமா, தவா, ஆத, மாது, அவா, வாது, அம்மா, தவாவா, தம, ஆதவா, வா.

## குறிப்பு

இதனை ஈறு முதலாக வாசிக்கக் கரந்துறையாக இரண்டாவது ஏகபாதம் வரும்.

## நான்காவது ஏகபாதம்

(வஞ்சித்துறை)

'தவாவா தமா
தவாவா தமா
தவாவா தமா
தவாவா தமா'

பதப்பிரிவு:- தவா, ஆத, மாது, அவா, வாது, அம்மா, தம, ஆதவா, வா, தமா

## குறிப்பு

இதனை ஈறு முதலாக வாசிக்கக் கரந்துறையாக ஐந்தாவது ஏகபாதம் வரும்.

## ஐந்தாவது ஏகபாதம்

(வஞ்சித்துறை)

'மாதவா வாத
மாதவா வாத
மாதவா வாத
மாதவா வாத'

பதப்பிரிவு :- மாது, அவா, வாது, அம்மா, தவாவா, தம, ஆதவா, வா, தமா, தவா, ஆத.

## குறிப்பு

இதனை ஈறுமுதலாக வாசிக்கக் கரந்துறையாக நான்காவது ஏகபாதம் வரும்.

மூன்று, நான்கு, ஐந்தாவது செய்யுள்களுக்கு முன்போலவே பொருள் கொள்ளலாம்.

2. (வஞ்சி விருத்தம்)

'கோதா றேவா தாகா
வேதா மோதீ தாநா
நாதா தீமோ தாவே
காதா வாறே தாகோ'

(இ-ள்) கோது ஆறு ஏவாது (ஆறு கோது ஏவாது) - காமாதி அறுவகைக் குற்றத்தின் கண் என்னை ஏவாமல்,
ஆகா வேதா மோதீ - இணங்காத பிரமனைக் கையால் மோதிய கடவுளே
தா நா நாதா - (சொல்) வலி பொருந்திய நாவையுடைய நாதனே
தீ மோதா - தீமைகள் என்னை மோதாமல்
காதா ஆறே - யாதோருயிரையுங் கொல்லாத நெறியையே
தா - எனக்குத் தருக
கோ - கோவே

## கருத்துரை

பிரமனை அடக்கிய வலியுடையோனே! கொல்லாமை நெறியை எனக்குத் தந்தருள்வாயாக.

## குறிப்பு

இம்மாலை மாற்று ஒருவகைத் துவிபங்கி மாலை மாற்றுமாம். அவை வருமாறு ·

(வஞ்சித்துறை)

'கோ தா றே
வா தா கா
கா தா வா
றே தா கோ'

(இ-ள்) கோது ஆறே - ஒருவற்குக் குற்றமாவன காமாதியாறே
வாது ஆகா - இவற்றோடு வீண்வாதங்களுமெனக்கு ளவாகாமல்
காதா ஆறே தா - கொல்லா நெறியையே தருக
கோ - கோவே

**கருத்துரை**

காமாதி குற்றங்களும் வீண் வாதங்களும் உயிர்க்கொலை செய்தலும் தவிர்த்து என்னைக் காப்பாயாக.

(வஞ்சித் துறை)

வேதா மோ
தீதா நா
நாதா தீ
மோ தாவே'

(இ-ள்) வேதா மோதீ - வேதனைக் குட்டிய கந்தனே,
தா நா - நாவின் செல்வத்தைத் தருக.
நாதா - நாதனே,
தீமோதா - தீமை என்னை வருத்தா திருக்குமாறு.

**கருத்துரை**

தீமை என்னை வருத்தாது சொற்செல்வம் அருளுவாயாக.

(வஞ்சி விருத்தம்)

3. 'மேக வேழ வாகமா
நாக பாச மேகவா
வாக மேச பாகனா
மாக வாழ வேகமே'

(இ-ள்) மேக வேழ வாக - மேகம் போன்ற யானை வாகனமுடையானே,
மா நாக - பெரிய மலைகளையுடையானே,
பாசம் ஏக வா - (எனது) பாசம் நீங்குமாறு வருக,
ஆகம ஈச - ஆகமங்களையருளிய ஈசனே,
பாகு அன்னா-(அன்பருக்குப்)பாகு போலும் இனியவனே,
மாக - வானத்துக்குத் தலைவனே,
வாழ - (நீ) வாழ்க
ஏகமே - தனி முதற் பொருளே.

**கருத்துரை**

முதற் பொருளே, யானை வாகனமும், பெரிய மலைகளையு முடைய இனியவனே எனது பாசம் நீங்குமாறு வருவாயாக.

**குறிப்பு**

இச்செய்யுள் முதல் ஆறு செய்யுள் முதலடியும் நான்காவதடியும் கோமூத்திரியாகவும், இரண்டாவதடியும் மூன்றாவதடியும் கோமூத்திரியாகவும் அமையும்.

## கோமூத்திரி

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | மே | க | வே | ழ | வா | க | மா |
| | X | X | X | X | X | X | |
| 4 | மா | க | வா | ழ | வே | க | மே |
| 2 | நா | க | பா | ச | மே | க | வா |
| | X | X | X | X | X | X | |
| 3 | வா | க | மே | ச | பா | க | னா |

(வஞ்சி விருத்தம்)

4 'நேச மீய காசவா
நாச பானு ராசனே
நேச ரானு பாசனா
வாச காய மீசனே'

(இ-ள்) நேசம் ஈய - (அடியேனுக்கு) அன்பு அருளுக,

காசு அவா நாச பானு ராசனே - குற்றமான ஆசையென்னும் இருளைக் கெடுக்கின்ற ஞான சூரியனான தலைவனே.

நேசர் ஆனு பாசனா - அன்பர்கட்கு நிலைத்த சுற்றமானவனே,

வா சகாயம் ஈசனே - (ஈசனே சகாயம் வா) ஈசனே சகாயமாக வந்தருள்க.

**கருத்துரை**

அன்பர்க்கு ஆசையென்னும் இருளைப் போக்கும் ஞான ஒளியே! அடியேனுக்கு உன் அன்பை அருளுவாயாக.

## கோமூத்திரி

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நே | ச | மீ | ய | கா | ச | வா |
| X | X | X | X | X | X | |
| வா | ச | கா | ய | மீ | ச | னே |
| நா | ச | பா | னு | ரா | ச | னே |
| X | X | X | X | X | X | |
| நே | ச | ரா | னு | பா | ச | னா |

(வஞ்சி விருத்தம்)

5 வாத மீன மோதவே
மோத னீக நாதனா
னாத னாக னீதமோ
வேத மோன மீதவா

(இ-ள்) வாதம் ஈனம் மோதவே - (புறச்சமய) வாதங்களும் ஈன மான குணங்களும் (என்னை) மோதாமல்,
மோது அனீக நாத - (பகைவரைத்) தாக்கும் தேவ சேனாபதியே,
நான் ஆதன் ஆகல் நீதமோ - அடியேன் அறிவில்லாத வனாகுதல் நீதியோ,
வேத மோனம் மீது அவா - வேதப் பொருளுணர்ந்து மௌனத்திலிருப்பதன்கண் என் ஆசை (செல் கின்றது அதனையருளுக)

## கருத்துரை

நாதனே! மோனமென்னும் ஞான வரம்பினை அடைய விழை கின்றேன். அதனையருள்வாயாக.

### கோமூத்திரி

வா த மீ ன மோ த வே
X X X X X X
வே த மோ ன மீ த வா

மோ த னீ க நா த னா
X X X X X X
னா த னா க னீ த மோ

(வஞ்சி விருத்தம்)

6
நேம தாணு நாமகா
தாம பால வேமநீ
நீம வேல பாமதா
காம னாணு தாமனே

(இ-ள்) நேம தாணு நாம கா - நியமமுடையாய் தாணுவே புகழுற்றவனே (அடியேனைக்) காத்தருள்க.
தாம பால - மாலையை அணிந்தவனே, இரட்சிப்பவனே
ஏமம் நீ - இருளை நீக்குகின்ற,
நீம வேல - ஒளி பொருந்திய வேலவனே.
பா மதா - செய்யுள் வலிமையுற்றவனே,
காமன் நாணு தாமனே - மன்மதனும் நாணுகின்ற அழகனே.

## கருத்துரை

அழகனே! இருளை நீக்கும் வேலவனே! நீயே எனக்கு ஏமம். காத்தருள்வாயாக.

## கோமூத்திரி

நே ம தா ணு நா ம கா
X X X X X X
கா ம னா ணு தா ம னே

நீ ம வே ல பா ம தா
X X X X X X
தா ம பா ல வே ம நீ

(வஞ்சி விருத்தம்)

7. நேய மாயு மீயதோ
மாய வேத நாயகா
காய நாத வேயமா
தோய மீயு மாயனே

(இ-ள்) நேயம் ஆயும் மீயது - அன்பே (ஒருவன்) ஆராய்ந்து அடைதற்குரிய மேலான பொருளாவது,
ஓம் ஆய வேத நாயகா - பிரணவப் பொருளான வேத நாதனே,
காய நாத - ஆகாய உலகுக்கு (தேவருலகிற்கு) அதிபனே,
ஏய - (அந்த அன்பே என் மனத்துப்) பொருந்தல் வேண்டும்,
மா தோயம் ஈயும் மாயனே - மகிமையுற்ற கங்காதேவி பெற்ற அழகனே.

**கருத்துரை**

கங்கை மைந்தனே! வேத முதல்வனே! தேவ நாதனே! மேலான அன்பை அருளுவாயாக.

## கோமூத்திரி

நே ய மா யு மீ ய தோ
X X X X X X
தோ ய மீ யு மா ய னே

மா ய வே த நா ய கா
X X X X X X
கா ய நா த வே ய மா

(வஞ்சி விருத்தம்)

8. கால பாணி வேலகோ
வால மேவு பாலதா
தால பாவு மேலவா
கோல வேணி பாலகா.

(இ-ள்) கால பாணி வேல - காலனையொத்த கை வேலுடையானே,
கோ - கோவே,
வால - தூயனே,
மேவு பால தா - (அறிவுடையார்) விரும்பும் பான்மையுடைய பொருள்களைத் தந்தருளுக.
தால பாவும் ஏலவா - நாவினிடத்தனவாய பாக்களும் (எளியோனிடத்துப்) பொருந்த வருக,
கோல வேணி பாலகா - அழகிய சடையையுடைய சிவபிரானீன்ற புத்திரனே.

## கருத்துரை

சிவன் மைந்தனே! கொடிய வேலுடைய கோவே! அறிவுப் பொருளும் நாவன்மையும் தந்தருள்வாயாக.

## கோமூத்திரி

கா ல பா ணி வே ல கோ
X X X X X X
கோ ல வே ணி பா ல கா

வா ல மே வு பா ல தா
X X X X X X
தா ல பா வு மே ல வா

(வஞ்சிவிருத்தம்)

9. தாணு வாய சேணவா
பாண மாரி நாணவே
வேண நாரி மாணபா
வாண சேய வாணு தா

(இ-ள்) தாணுஆய சேணவா—நிலை பெற்றவனாகிய உயர்ச்சியுடையானே,
பாணம்—அம்புகளை,
மாரி நாண—மேகமும் வெள்கும்படி
ஏவு ஏண—(பகைவர்மேல்)ஏவுகின்ற வலிமையுடையானே
நாரி மாண பாவாண—உமாதேவியால் மாட்சியுற்ற பாவாணனாகிய சம்பந்தமூர்த்தியே,
சேய—வாக்கு மனா தீத கோசரமாயுள்ளவனே,
ஆணு தா—அன்பைத் தந்தருளுக,
ஆணு—நேயம்.

**கருத்துரை**

நிலைத்த பெருமையும், வலிமையும் பெற்ற ஞானசம்பந்தப் பெருமானே! எனக்கு அன்பைத் தந்தருள்வாயாக.

**குறிப்பு**

இப்பாடலில் இரண்டாவதடியும் மூன்றாவதடியும் கோமூத்திரியாக அமைகிறது.

**கோமூத்திரி**

| பா | ண | மா | ரி | நா | ண | வே |
|---|---|---|---|---|---|---|
| | X | X | X | X | X | X |
| வே | ண | நா | ரி | மா | ண | பா |

(வஞ்சி விருத்தம்)

10. மேரு சாப வீரமா
னாரி மாகு மாரவா
வார மாகு மாரினா
மார னீப சாருமே

(இ-ள்) மேரு சாபன் —மேருவில்லையுடைய சிவபிரானுக்கும்,
நீரம்—கங்கா தேவிக்கும்,
மால் நாரி—கருநிறமுள்ள உமாதேவிக்கும்,
மாகுமார—பெருமை தரும் குமாரனே,
வா—வந்தருள்க (வரின்),
வாரம் ஆகுமார்—அன்பு (தானே) உளதாகும்,
இனா(இன்னா) மாரன்—துன்பத்துக்குக் காரணமாகிய மன்மதன்,
சாருமே—(என்பால்) வருவானோ (வாரான்),
நீப—கடப்ப மாலையணிந்தவனே,

**கருத்துரை**

மாதொரு பாகன் மைந்தனே! மன்மதன் துன்பத்திற்காளாகாமல் என்னைக் காத்தருள்க,

(வஞ்சி விருத்தம்)

11. மாவா கனவிற வாமே
தேவா கவியளி வாயா
யாவா ளியவிக வாதே
மேவா றவிநக வாமா

(இ-ள்) மா வாகன—யானை வாகனமுடையானே,
இறவாமே—(யான்) மரண வேதனையடையாதிருக்க,
தேவா கவி அளி—தேவனே (நின்மீது) கவிபாடும் வன்மையையருள் செய்க,
வாயா யா—(நீயருள் செய்தால்) எய்தாத நன்மைகள் யாவை (எல்லா நலமுமெய்துமென்றபடி)
ஆளிய—(என்னையிங்ஙனம்) ஆண்டருளுக
இகவாதேமேவு—(என்பால்) நீங்காமல் மேவியிருக்கின்ற,
ஆறு அவி—காமாதியாறனையும் கெடுத்தருளுக.
நக வாமா—மலைகளையுடைய குழகனே,

## கருத்துரை

யானை வாகனமுடையவனே! என்னை மரண வேதனையி னின்றும் தடுத்து அருளி கவிபாடும் வன்மையைத் தருக.

(வஞ்சி விருத்தம்)

12. வேதா விசனம தாகா
நீதா விகலவி தாமா
மாதா விலகவி தாநீ
காதா மனசவி தாவே,

(இ-ள்) வேதா—வேதியனே,
விசனமது ஆகா நீதா—துன்பமில்லாத நீதியையுடையவனே,
இகல் அவி தாமா—பகையையழித்த வாகைமாலையுடையவனே,
மாதா இல கவிதா—பெருமை பொருந்திய குற்றம் இலவாகிய கவிபாடும் ஆற்றலைத் தந்தருளுக.
நீ கா—(இங்ஙனம்) நீ காத்தருளுக.
தாம் மன (மன்ன)—பாசஞான பசுஞானங்களைக்கடந்து நின்ற தலைவனே,
சவிதாவே—சூரியனே.

## கருத்துரை

வேத முதல்வனே! எல்லாவற்றையும் கடந்தவனே! குற்றமில் பாடலைப் பாட அருளுவாயாக,

(கலிவிருத்தம்)

13. மேகவாக னரபதி சோகமா
வேக மாதடி நீபத மேகதா
தாக மேதப நீடித மாகவே
மாக சோதி பரநக வாகமே

(இ-ள்) மேகவாகன்—மேகவாகனனாகிய இந்திரனுக்கும்,
நரபதி—முசுகுந்தனுக்கும்,
சோகம் ஏக—துன்பம் நீங்குமாறு,
மாதடி ஏக—மாமரமாகிய சூரனைத் தொலைத்த தனி முதலே,
மாகசோதி—ஞானாகாயத்து விளங்குஞ் சோதியே,
பரநக—திருப்பரங்குன்றுடையானே,
கமே (கம்மே)—(ஈகையில்) மேகமே,
நீ வா—நீ என்முன் வருக,
தாகம் தப—பிறவி வெப்பம் நீங்கவும்,
நீடு இதம் ஆக—அழியாத முத்தியின்பமடையவும்,
பதம் தா—திருவடி நிழலைத் தருக.

## கருத்துரை

சூரனை வதைத்த சோதியே! அழியாத முத்தியின்பத்தைத் தந்தருளுவாயாக.

## குறிப்பு

இப்பாட்டின்கண் இரண்டாவதடியும் மூன்றாவதடியும் கோமூத்திரியாக அமையும். மேலும் இப்பாடலில் ஈற்றெழுத்தாதி யாகவேனும், முதலெழுத்து ஆதியாகவேனும் ஒன்றிடையிட்டு வாசிக்கக் கரந்துறையாகத் தனியே மாலை மாற்றுச் செய்யுள் ஒன்று வரும்.

### கோமூத்திரி

வே க மா த டி நீ ப த மே க தா
X X X X X X X X X X
த ாக மே த ப நீ டி த மா க வே

### இப்பாடலுட் போந்த கரந்துறை மாலை மாற்று

(வஞ்சித் துறை)

மேவா நப சோமா
வேமா டிப மேதா
தாமே படி மாவே
மாசோ பன வாமே,

(இ-ள்) மேவா நப சோமா—யாவரானு மேவுதற்கரிய ஞான காயத்து விளங்குங் கலைநிறைந்த சந்திரனே.

ஏம் ஆடு இப—இன்பத்தைச் செய்யும் வெற்றிபொருந்திய யானைவாகனமுடையானே,

மா சோபன—மகத்தாகிய சோபனமுடையானே,

மே—என்னை மேவுக (மேவின்)

தா—குற்றத்தைச் செய்யும் ஐந்தாசையும்,

தாமே படிமாவே ஆம்—(யானடக்குதற்குமுயலாமலே) தாமே படிக்கின்ற யானைகளாகி விடும்.

## கருத்துரை

ஐம்புலன் ஆசைகளை நீக்கியருளி என்னைக் காத்தருள்க.

(கலிவிருத்தம்)

14. நேய வாலை தருகரி காயவா
வாய னாமய ராக சகாயமா
மாய காசக ராயம னாயவா
வாய காரி கருதலை வாயனே

(இ-ள்) நேய வாலை தருகரி—அன்பு மிக்க உமாதேவியீன்று அருளிய யாவற்றுக்குஞ் சாட்சியாக விளங்குகின்றவனே,

காய் அவா (அவா காய்)-ஆசையை நீக்கியருள்க,

வாய் அநாமய—மெய்யான அநாமயனே,

ராக சகாய—ஆன்மாக்களின் போக இச்சைக்குச் சகாயமாக இருக்கின்ற,

மாமாய—மகா மாயத்தையுடைய.

காச கரா யமனாய—குற்றத்தையுடைய முதலைக்குக் கூற்றுவனான,

ஆ ஆய—(சிவபிரானைத் தாங்கும்) இடபமாகிய,

காரி—கருநிறத்தையுடைய திருமால்,

கருது அலைவாயனே—(மனத்திற்கொண்டு) சிந்திக்கின்ற திருச்சீரலைவாயையுடையானே

## இரண்டாவதுரை

ராக சகாய—ஆன்மாக்களின் போக மோட்ச இச்சைக்குச் சகாயமாயிருக்கின்றவனே,

மாமாய—மகா மாயத்தையுடையவனே,

கா—காத்தருள்க,
சகராய—சகத்துக்குத் தலைவனே!
மனாயவா—(மன்னா-யவா)--அரசனானவனே,
ஆய்—தாய் போல்வானே,
அகாரி—பாவத்தை அரித்தவனே,
கருது—யாவரானுங் கருதப்பட்ட,
அலைவாயனே—சீரலை வாயுடையானே,

**கருத்துரை**

திருச்சீரலை வாயையுடைய சிலனே! மாயா மலங்களாகிய ஆசைகளை நீக்கியருளுவாயாக.

**குறிப்பு**

இப்பாடலின் ஈற்றெழுத்தாதியாகவேனும், முதலெழுத்தாதி யாகவேனும், ஒன்றிடையிட்டு வாசிக்கக் கரந்துறையாகத் தனியே ஒரு மாலை மாற்றுச் செய்யுள் வரும். அது வருமாறு.

(வஞ்சித்துறை)

நேவா தக காவா
வானா யக காமா
மாகா கய நாவா
வாகா கத வானே

(இ-ள்) நே வாத ககா—அன்பு பொருந்திய காற்றின் வேகத்தை யுடைய மயிற்பறவையையுடையானே,
வா—வருக.
வால் நாயக—தூய்மையுடைய நாயகனே,
காமா—ஆன்மாக்களை யுய்விக்கும் விருப்பமுடையானே,
மாகா—வானுலகமுடையானே,
கய—யானை வாகனமுடையானே,
நா ஆ வாகு ஆக - நாவால் உளதாகும் அழகு எனக்கு உளதாகுக.
தவானே - என்று மழியாத கடவுளே,

**கருத்துரை**

என்றுமழியாத கடவுளே! ஆன்மாக்களை உய்விப்பவனே! என் நா வன்மை பெற வந்தருளுவாயாக,

(வஞ்சி விருத்தம்)

15. தீரா மனதக ராதீ
தீரா கநனவி ராதீ
தீரா வினனக ராதீ
தீரா கனனம ராதீ

(இ-ள்) தீரா மன்ன - என்னை விட்டு நீங்காத நிலைபேறுடையானே,
தகரா - ஆட்டுவாகனமுடையானே,
தீதீ ராகம் (ராகம் தீதீ) - எமது ஆசையைச் சுடுக சுடுக,
நல்தவிரா - நல்ல மலைகளையுடையானே.
தீது ஈர் ஆவினன் நகர் ஆதீ - தீமையை ஈர்க்கின்ற, திருவாவினன் குடியில் வீற்றிருக்கும் ஆதியே,
தீரா கதன் அமராது ஈ - நீங்காதன வாகிய கோபங்களை யாம் பொருந்தாதிருக்குமாறு கருணை செய்க.

**கருத்துரை**

திருவாவினன் குடியில் அமர்ந்த ஆதியே! ஆசை, கோபம் போன்றவற்றினின்றும் என்னைக் காத்தருள்வாயாக.

**குறிப்பு**

இப்பாடலின்கண் முதலடியோடு மூன்றாவதடியும், இரண்டாவதடியோடு நான்காவதடியும், கோமூத்திரியாக வருவதில், நான்காவதடி முதலெழுத்து முதலாக வாசித்தால் மூன்றாவதடியும், மூன்றாவதடி முதலெழுத்து முதலாக வாசித்தால் நான்காவதடியும், ஏனைய முன் போலவும் வரும்.

**கோமூத்திரி**

1 தீ ரா ம ன த க ரா தீ
X X X X X X X
3 தீ ரா வி ன ன க ரா தீ

2 தீ ரா க ந ன வி ரா தீ
X X X X X X X
4 தீ ரா க த ன ம ரா தீ

**நான்காரைச் சக்கரம்**

நடுவே தீ என்னுமெழுத்து நின்று, நான்கு ஆர் மேலும், ரா என்னு மெழுத்து நின்று, சூட்டின் மேற் பன்னிரண்டெழுத்து நின்று, முற்றுப்பெறுதலை வரைந்து காணலாம்.

பிறிதொரு பாடம்

(வஞ்சி விருத்தம்)

தீரா வினனக ராதீ
தீரா கனனவி ராதீ
தீரா வினனக ராதீ
தீரா கனனவி ராதீ

இ-ள்) தீரா இனன் - நீங்காத ஞான சூரியனே,
அகர - அகரம் போல்வானே,
தீதீ ராகம் - எமது ஆசையைச் சுடுக சுடுக.
நல்நவிரா - நல்ல மலைகளையுடையானே,
தீது ஈர் ஆவினன் நகரா - தீமையை ஈர்க்கின்ற திருவா வினன் குடியில் வீற்றிருக்கும் ஆதியே,
தீதீரா - இயல்பாகவே தீமையினின்று நீங்கி,
கனன் அவிர்ஆதீ - மேன்மையோடு விளங்கும் முதல்வனே

## கருத்துரை

முதல்வனே! ஞான சூரியனே! எமது ஆசையைச் சுடுவாயாக

## குறிப்பு

இப்பாடல் அடிமடக்காகவும், நான்காரைச் சக்கரமாகவும் வந்த மாலை மாற்று.

மடக்கு முதலாவதடியும், மூன்றாவதடியும், இரண்டாவதடி யும், நான்காவதடியும் வந்தது நான்காரைச் சக்கரமாதலை முன்னது போலக் கொள்க.

பிறிதொரு பாடம்

(வஞ்சி விருத்தம்)

தேரா வலினக ராநே
சீரா வினனக ராவீ
வீரா கனனவி ராசீ
நேரா கநலிவ ராதே

(இ-ள்) தேரா அல் - தெளிதற்கரிய ஆணவ இருளுக்கு,
இனகரா - ஒளிமிக்க சூரியனே,
நேசீர் - அன்பாகிய சிறந்த குணத்தை,
ஆவினனகரா ஈ - திருவாவினன்குடியையுடையானே தந்தருள்க,

வீரா - வீரனே,
கனநவிர - மேகஞ் சூழ்ந்த மலைகளையுடையானே.
நேர் ஆகநலி - நேரும் பிறவித் துன்பத்தை
வராதே சீ - வராதபடி சீத்துவிடுக.

## கருத்துரை

திருவாவினன் குடியையுடையானே! என் பிறவித் துன்பத்தை நீக்கி; அன்பாகிய சிறந்த குணத்தை எனக்கருளுவாயாக.

(கலி விருத்தம்)

16. வேத மோதறி வாகழு வாதவா
நாத சேகர வேகவ தீதநீ
நீத தீவக வேரக சேதநா
வாத வாழுக வாறித மோதவே.

(இ-ள்) வேதம் ஓது அறிவா - வேதப்பொருளை யோதிய ஞான சொரூபியே,
கழுவாதவா - பிறராற் கழுவப்படாது தானே வினை யினீங்கிய கடவுளே
நாத சேகர - நாத தத்துவத்தின் முடிவில் விளங்குகின்ற வனே,
ஏக அதீத - ஏகனே அதீதனே.
நீத தீவக - நீதியை விளக்கும் தீபம் போல்வானே,
ஏரக சேதநா - திருவேரகத்தி லெழுந் தருளிய சேதனனே
ஆத - குருவே
இதம் ஆறு ஓத - பேரின்பம் பயக்கும் நினது சடாட் சரத்தை அடியேன் உச்சரிக்குமாறு
நீ வாழுக - நீ வாழ்க.

## கருத்துரை

திருவேரகத்தி லெழுந்தருளிய ஞானசொரூபியே, நினது சடாட்சரத்தை உச்சரிக்கும் பேற்றை அருளுவாயாக.

(கலி விருத்தம்)

17. நேட மாறு தொலைமதி மோடரா
சூட வேத னுதவின வாடவா
வாட வான விதனுத வேடசூ
ராட மோதி மலைதொறு மாடனே.

(இ-ள்) நேட மாறு தொலை - (நின்னைத்) தேடுதற்குப் பகையாயவற்றை யொழித்தருள்க,
மதிமோடு அரா - சந்திரனையும் பெரிய அரவையும் அணிந்த
சூடவேதன் - சடையையுடைய வேதமுதலாகிய பரம சிவன்,
உதவின ஆடவா - ஈன்ற ஆண்மையுடையானே,
ஆட - வெற்றியையுடையானே,
வான இதன் உதவு - மேன்மை பொருந்திய நலமான வீடுபோற்றையருளுக.
ஏடசூர் - போர்க்குரிய மாலையை அணிந்த சூரனை,
ஆடமோதி - நடுங்கும்படி மோதிய வீரனே,
மலைதொறும் ஆடு அன்னே - குன்றுதோறாடிய தாய் போல்வானே.

## கருத்துரை

குன்றுதோறாடிய குமரனே! சூரனை வென்ற வீரனே! எனக்கு வீடுபேற்றை யருளுவாயாக.

(கலி விருத்தம்)

18. நேம வாறு முகநலை சோமகா
நீம நாக குலபதி நாமவா
வாம நாதி பலகுக நாமனீ
காம சோலை நகமுறு வாமனே

(இ-ள்) நேம - நியமமுடையானே.
ஆறுமுக - சண்முகனே
நல்ஐ - நல்ல கடவுளே
சோ மகா நீம - அரண் சூழ்ந்த பெரிய ஒளியையுடைய,
நாக குலபதி - விண்ணுலகத்திலுள்ள தேவர் குலபதியே,
நாம - கீர்த்தியுடையானே
நீ வாவா மனாதி - (மனாதி வாவா) நீ(என்)மனவாக்குக் காயங்களிடமாக வருக வருக
பல குக நாம - பலமுடைய குகனென்னுந் திருநாமமுடையானே
காம - விருப்ப முடையானே
சோலை நகம் உறுவாமனே - பழமுதிர் சோலை மலையில் எழுந்தருளிய அழகனே.

**கருத்துரை**

பழமுதிர்ச்சோலை அழகனே தேவர்குல பதியே! என் மன வாக்குக் காயங்களிடமாக வந்தருளுக!

(கலிவிருத்தம்)

19. நேச ரேம குகாவர னேசவீ
வாச தாம நடுவக நேசதே
தேச நேக வடுநம தாசவா
வீச நேர வகாகும ரேசனே

(இ-ள்) நேசர் ஏம - அன்பருக்கு இன்பஞ் செய்பவனே,
குகா வரனே சவீ - குகனே வரனே சோதியே
வாச தாம - மணமுற்ற மாலையை யணிந்தவனே
நடு அக நேச - நடுவு நிலையுற்ற மனத்துக்கு அன்பனே
தே - தேவனே,
தேசு அநேக - அளவற்ற ஒளியுடையானே.
அடு நமது ஆசு அவா - எமது குற்றமாகிய ஆசையைக கெடுத்தருள்க,
ஈச - ஈசனே,
நேரவ - நேர்மையையுடையானே,
காகுமரேசனே - குமரேசனே காத்தருள்க.

**கருத்துரை**

அன்பனே! என் ஆசையைக் கெடுத்து என்னைக் காத்தருளு வாயாக.

(கலி விருத்தம்)

20. நேச வாலச காணித வீசவா
காச வாசவ னேவறு மாசுகா
காசு மாறுவ னோவச வாசகா
வாச வீதணி காசல வாசனே.

(இ-ள்) நேச - (அடியாரிடத்து) அன்புற்றவனே
வால் அச - தூய ஆட்டு வாகனமுடையவனே
காண் இத ஈச - காண்டற்கினிய ஈசனே
ஆகாச வாசவன் நோ அறும் ஆசுகா - வானுலகத்தை யாளும் இந்திரனுற்ற துன்பம் நீங்கற்குக் கருவி யாகிய பாணத்தையுடையவனே.

காசு மாறு வனோ - (யான்)குற்றம் நீங்கப்பெறுவேனோ
வச வாசகா - யாவரையும் தன் வசமாக்கும் வாசகத்தை யுடையானே
வா - வந்தருள்க
சவீ - ஒளிப்பிழம்பானவனே
தணிகாசல வாசனே - திருத்தணிகை மலையின்கண் வசித்தருளுபவனே.

## கருத்துரை

திருத்தணிகைமலை வாசனே! ஒளிப்பிழம்பே! யான் குற்றம் நீங்கப் பெற அருளுவாயாக,

(கலிவிருத்தம்)

21. வேட பாரா பலமன வேடுனா
ரோட நாக நிலவவை யாடவா
வாட யாவை வலனிக நா டரோ
நாடு வேன மலபர பாடவே

(இ-ள்) வேட - வேடவுருக் கொண்டவனே
பார பல மன(மன்ன) - மிக்க வலிமையுடைய தலைவனே
வேள் - வேளே
துனார் (துன்னார்) ஓட - பகைவர் (அசுரர்) தோற்றோடவும்
நாகம் நிலவ - தேவருலகம் விளக்கமுறவும்
வை ஆடவா - (கருணை) வைத்தருளிய ஆண்மை யுடையவனே
ஆள் தயா வை - (எளியேனை) ஆட்கொள்ளும் தயவு வைத்தருள்க
வல் அநிக - வலிய தேவசேனாபதியே
நாடு - (எளியேனை) நாடுக
நாடுவேன் அமல பர பாடவே - (அமர பர பாடவே நாடுவேன்) மலரகிதனே பரமனே நின்னைப் பாடுதற்கே விரும்புவேன்.

## கருத்துரை

தேவசேனாபதியே! வேடனே! நின்னையே பாடவிரும்புகின்றேன். என் மேல் கருணை கொண்டு ஆட்கொள்ளும் தயவு வைத்தருள்க.

(கலிவிருத்தம்)

22. மேய சிகரு தாளிய னேயசே
வேய தேவைய தீவக வாயவா
வாய வாகவ தீயவை தேயவே
சேய னேயளி தாருக சியமே

(இ-ள்) மேய சி கருது ஆளியன் - பொருந்திய இலக்குமி கருது கின்ற நரசிங்க மூர்த்தியாகிய
நேய சே தேவு ஐய - அன்பினையுடைய இடப வாகனத் தின்கட் பொருந்திய சிவபிரானுக்குக் குருவே
தீவக - தீவகம் (போல் வானே)
ஆயவா - திரிபதார்த்தங்களினுண்மையை யாராயும் வண்ணங் குருமூர்த்தமாக வருக
வாய ஆகவ - மெய்யான போர்த் தொழிலுடையானே
தீயவை தேயவே - (என்) வினைகள் தேயும்படி
சேயனே அளி - (மனவாக்குக் கெட்டாத) சேய்மையுடை யானே அருள்புரிக
தாருக சியமே - தாருகாசுர யானைக்குச் சிங்கமானவனே

**கருத்துரை**

குருவே! என் வினைகள் தேயவும், மன வாக்குக் காயங்களி னுண்மையை யாராயும் வண்ணமும் அருள்புரிவாயாக.

(கலி விருத்தம்)

23. வேல சாகச வாறவ மேலதா
கோல சீபதி வாகநர் பாலவா
வால பார்நக வாதிப சீலகோ
தால மேவற வாசக சாலவே

(இ-ள்) வேல சாகச - வேலோனே போர்வல்லோனே
வால் தவம் - தூயதவத்தை
மேல தா - மேலோனே (எளியேனுக்குத்) தருக
கோல சீபதி - வராகவுருக் கொண்ட திருமாலாகிய
வாகநர் பால - இடப வாகனத்தையுடைய சிவபிரானுக் குப் புத்திரனே
வா - வந்தருள்க
வால பார் - தூயனே கிருபா நோக்கஞ் செய்க,

நக் ஆதிப சில கோ - மலைகளுக்கதிபனே சிவனே கோவே
தாலம் மேவு அற வாசக - உலகு விரும்பும் தரும வாசக முடையானே
சாலவே - (எளியேன் அறிவால்) நிறையுமாறு

**கருத்துரை**

வேலவனே! ஈசன் மகனே! எளியேன் அறிவால் நிறையுமாறு அருளுக.

(கலி விருத்தம்)

24. தேவ மாலன பாகர வாவுமே
தாவி தாரக யோதன மாவவே
வேவ மானத யோகர தாவிதா
மேவு வாரக பாநல மாவதே.

(இ-ள்) தேவ மால் அன்னபாகர் அவாவும் மேதாவி - தேவரும் திருமாலும் அன்னவாகனத்தை நடத்தும் பிரமனும் அன்னம் போலும் உமா தேவியைப் பாகத்தி லுடைய சிவபெருமானும் விரும்புகின்ற புலவனே.
தாரக - பிரணவப் பொருளே
யோதன மாவ - போர்க்குரிய யானைவாகன முடையவனே
ஏவு ஏவ - (பகைவர் மேல்) ஏவுகின்ற பாணங்களை யுடையவனே
மானத யோகரது ஆவி - அறிவானமைந்த யோகிகளது உயிர் போல்வானே
தா - தந்தருளுக
மேவுவார் அக-விரும்பும் அடியார் மனத்தில் வசிப்பவனே
பா நலம் ஆவதே (நலம் பா ஆவதே) – நன்மை தரும் பாடல்கள் (எளிதிற்றாமே) யுளவாகுஞ் செயலையே

**கருத்துரை**

அடியார் மனத்தில் வசிக்கும் ஆனந்தனே! நன்மை தரும் பாடல்களைத் தாமே எளிதில் உளவாகும் செயலை எனக்குத் தந்தருளுக.

(கலி விருத்தம்)

25. வேழ வாதி மதாசல தோழகா
யாழ வாக மதுவித வேழவா
வாழ வேத விதுமக வாழயா
காழ தோல சதாமதி வாழவே

இ-ள்) வேழ ஆதி மதாசல தோழ - யானையும் ஆதியும் மத. மலையுமான விநாயகனுக்குத் தோழனே.
கா - காத்தருளுக
ஆகமம் - ஆகமங்களும்
துவித ஏழ் - பதினான்காகிய உலகங்கள்
அவாவு - விரும்புகின்ற
ஆழ வேதம் - பொருளாழமுடைய வேதங்களுமான கலைகணிரம்பிய
விது - சந்திரனே
மக வாழ் அயா (ஐயா) - (என்றும்) பாலப்பருவத்தில் வாழ்கின்ற ஐயனே
காழ தோல் அச - வலிபொருந்திய யானைவாகனமும் ஆட்டு வாகனமுமுடையவனே
தா மதி வாழவே (வாழ மதி தா) - (எளியேன்) வாழும் படி நன்மதியைத் தந்தருள்க

## கருத்துரை

உலகங்கள் யாவும் விரும்புகின்ற பாலனே! எளியேன் வாழும் படி நன்மதியைத் தந்து காத்தருள்வாயாக.

(கலி விருத்தம்)

26. வேள வாகத வாவர தாளவா
கோள கேகய நாவிற லாளநீ
நீள லாறவி நாயக கேளகோ
வாள தாரவ வாதவ வாளவே

(இ-ள்) வேள வாக - மன்மதனது அழகுடையவனே
தவா வர - அழியாத வரனே
தாள் அவா - (நினது) திருவடிக்கண் (அடியேனது) ஆசை
கோள கேகய - வலியமயில் வாகனனே
நா விறல் ஆள - நாவின் வெற்றியையுடையானே
நீளல் ஆற - நீடுதலுற்ற ஒழுக்கமுடையவனே

விநாயக கேள - கணேசனுக்கு உறவானவனே
கோ - கோவே
வாள தாரவ - வாட்படையேந்திய தேவசேனையை யுடையவனே
வா தக ஆளவே (தக ஆளவே வா) - தக்கவாறு (எளியேனை) ஆளுதற்கே வந்தருளுக

**கருத்துரை**

அழகும் அழியாத வரமும் பெற்றவனே! ஆடும் மயில் முருகா! தேவசேனாபதியே! எளியேனை ஆள வந்தருளுக.

(கட்டளைக் கலித்துறை)

27. சேரன வாரவ னாடிதமாற திவாகரமா
காரண வாசவ னேயவை வாநம காவரதா
தாரவ காமன வாவைய னேவ சவாணரகா
மாரக வாதிற மாதடி னாவர வானரசே

(இ-ள்) சேரன் ஆ அரவன் - சேரனும் அந்த ஆத்திமாலையை யணிந்த சோழனும்
நாடு இத மாற - விரும்புகின்ற நன்மையைச் செய்கின்ற உக்கிர குமார பாண்டியனே
திவாகர - (ஞான) பானுவே
மாகாரண - பரம காரணனே
வாசவன் நேய ஐ - இந்திரனுக்கு அன்புற்ற ஐயனே
வா - வருக
நம் மகா வரதா - நமது மகாவரதனே
தாரவ - மாலையையுடையவனே
காமன் அவாவு ஐயனே - மன்மதனும் விரும்பும் அழகனே
வச - தன் வசத்தனானவனே
நரகு ஆம் மாரக வாது இற - நரகத்துக் கேதுவாகிய மரணத்தைத் தரும் வாதங்கள் கெடவும்
மாது அடி நா வர - கலைமகள் திருவடி (எனது) நாவின் கண் வரவும்
ஆள் - (என்னை) ஆண்டருள்க
வான் அரசே - வானுலகுக் கரசனே.

**கருத்துரை**

உக்கிர குமார பாண்டியனாக அவதரித்த மன்மத அரசனே! மரணத்தைத் தவிர்த்துக் கலைமகள் திருவடி என் நாவின்கண் வர அருளுவாயாக.

(கட்டளைக் கலித்துறை)

28. தேரித யாதன மானய மாவர சியரையா
காரவி மாசல மாது குமார கலாகரவா
வார கலாகர மாகுது மாலச மாவிரகா
யாரைய சிரவ மாயந மானத யாதரிதே.

(இ-ள்) தேர் இதய ஆதன—தேர்ந்த இருதய ஆசனத்தில் வீற்றிருப்பவனே.

மால் நய மா அரசு ஈ அரையா—இந்திரனுக்கு நலமான பெரிய அரசாட்சியைத்தந்தருளிய அரசனே.

கார இமாசல மாது குமார—பொன்னிறத்தையுடைய இமயமலை பெற்ற உமா தேவிக்குப் புத்திரனே,

கல் ஆகர—மலைகளை உறைவிடமாகக் கொண்டவனே,

வா—வந்தருள்க.

வார—அன்புடையானே, (நீவரின்)

கலா ஆகரம் ஆகுதும்—யாம் கலைகளுக்கெல்லாம் இருப்பிடமாவேம்,

மால் அச—பெரிய ஆட்டு வாகனமுடையவனே,

மா விரகு ஆயார்—பெரிய அறிவினால் (பேரறிவினால் நின்னை) ஆராயாதவரது,

ஐய சீர் அவம்—அழகிய ஏனைச் சிறப்பெல்லாம் பயனற்றனவே,

ஆய—(நின்னை) ஆராய்வார்களாயின்,

நம் மானத—நமது பெருமையுடையானே,

யாது அரிதே—(அவர்கட்கு)அரிய பொருள் யாது(எல்லாம் எளிது என்றபடி)

## கருத்துரை

மாதுமைபாகன் பெற்ற மைந்தனே! பேரறிவே! அரும் பொருளே! அன்புடையானே! யாம் கலைகளுக்கெல்லாம் இருப்பிடமாகும்படி வந்தருளுவாயாக.

(கட்டளைக் கலித்துறை)

29. வேலக மாவய நீடிய வீர விதீகலவா
மேலந நாரவ தாயக மானவ வேணலனா
நாலண வேவன மாகய தாவர நாநலமே
வாலக தீவிர வீடிய நீயவ மாகலவே.

(இ-ள்) வேல் அகம் ஆ—வேலினிடமாக,
வயம் நீடிய வீர—வெற்றி நிலை பெற்ற வீரனே,
விதீ(விதி) கலவா மேல—விதியொடு மருவாதமேலோனே
நம் நாரவ—நமது அன்புக் குரியானே,
தாயகம் ஆனவ—ஆதாரம் ஆகியவனே,
வேள் —வேளே,
நல் அனா (அன்னா)—நல்ல தாயே,
நால் அணவே (அண்ணவே)—(உறுதிப் பொருள்)நான்கும் (எம்மை) அடையுமாறு,
வன மா கய—அழகிய பெரிய யானைவாகனனே,
தா வரம் நா நலமே (வரம் நா நலமே தா) எல்லா நலத்துக்கு மேலான நாவின் செல்வத்தையே தந்தருள்க.
வால கதீ விரவு—தூய கதியானவனே, எம்மைக் கலந்தருளுக,
ஈ அடி நீ (நீ அடி ஈ)—நீ நின் திருவடிகளை ஈக.
அவம் ஆகல—(பின்) பிறவித் துன்பங்களுளவாகா

## கருத்துரை

வேளே! அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கும் அடையுமாறு எம்மைக் காத்துக் கலந்தருளுவாயாக.

(கட்டளைக் கலித்துறை)

30. மேனக மாவல மேவய சேருவ மீதினவா
கானவ மேதைய தூகர வேலவ காவனமீ
மீனவ காவல வேரக தூயதை மேவனகா
வானதி மீவரு சேயவ மேலவ மாகனமே.

(இ-ள்) மேல் நகம் ஆவல—மேலாகிய மலைகளினிடத்து விருப்பமுற்றிருப்பவனே,
மேவு அய—பொருந்திய ஆட்டுவாகனமுடையானே,
சேருவம்—(யாம் நின்னை) இடைவிடாது சிந்திப்போம்,
ஈது இன் அவா—இதுவே (எமது) இனிய விருப்பம்,
கானவ—வேடவுருக் கொண்டவனே,
மேதைய—முற்றறிவுடையானே.
தூ கர வேலவ—தூவுகின்ற கிரணங்களையுடைய வேலோனே.

கா—காத்தருளுக.
வனம் மீ மீனவ காவல—நீரின் மேலுலாவுகின்ற மச்சக் கொடியையுடையவனாகிய உக்கிரகுமார பாண்டியராசனே,
ஏரக—திருவேரக மலையுடையானே,
தூயதை மேவு அனகா—சுத்தமான குணத்தைப் பொருந்திய அனகனே,
வான் நதி மீவரு சேயவ—கங்கை நதியின்கட் பிறந்த சேயே,
மேலவ—மேலோனே,
மா கனமே—(ஈகையில்) சிறந்த மேகம் போல்வானே.

## கருத்துரை

திருவேரக மடையுடை வேலனே! நின்னை இடைவிடாது சிந்திப்பதே என் இனிய விருப்பம். எனவே என்னைக் காத்தருளுவாயாக.

மாலை மாற்று மாலை முற்றுப் பெற்றது.

கருமாலை மாற்றின் பவவேலை
நீந்து கலமாகி யெய்த வடியேன்
ஒருமாலை மாற்று மொழிமாலை யன்பி
னுயர்தேவர் போகி யயனார்
திருமாலை மாற்ற லரைவென்று காத்த
சிகிமேவு 'மெந்தை முருகன்
குருமாலை மாற்ற ருமவேலை யேந்து
குகன்பாத முய்ப்பல் கொளவே.

முருகன் திருவடிகளே சரணம்.

## பங்கிகள்

ஒரு பாடலையே இரண்டு அல்லது பல பாடல்களாக மாற்றி யமைப்பது பங்கிகள் ஆகும். இவை ஒரே பாவினம் அல்லது வெவ் வேறு பாவினங்களாகவும் அமையும். இவற்றுள், : துவிதபங்கி, பஞ்சபங்கி, சத்தபங்கி, நவபங்கி, தசபங்கி, பஞ்சவிம்சதியதிக சதபங்கி என்பன குறிப்பிடத்தக்கன. அவை வருமாறு.

## 4. பிறிதுபடு துவித பங்கி

நேரிசை வெண்பா ஒன்றினையே சீர்களை மாற்றியமைக்க வேறொரு நேரிசை வெண்பாவாக வருவது பிறிதுபடு துவித பங்கி யாகும். துவிதம்-இரண்டு. பங்கி-பங்கமுடையது,

(எ-டு) (நேரிசை வெண்பா)

கட்டங்கா வென்றுதிகொள் காதாகைத் தண்டாமா
மட்டங்கால் சாதமலர் வண்டாளா—வட்டப்பூண்
மாதுமையாண் மைந்தாவை வாரயிலா விட்டந்தா
வேதுதுமி யேகண்டா டீ[1]

இதிலுள்ள சீர்களை மாற்றியமைக்க வேறொரு வெண்பா வருமாறு.

(நேரிசை வெண்பா)

கண்டாடீ கட்டங்கா வென்றுதிகொள் காதாகைத்
தண்டாமா மட்டங்கால் சாதமலர்—வண்டாளா
வட்டம்பூண் மாதுமையாண் மைந்தாவை வாரயிலா
விட்டந்தா வேதுதுமி யே.

---

1. குமரகுருதாச சுவாமிகள். பத்துப் பிரபந்தம்.

# 5. பஞ்ச பங்கி

ஒரு பாடலையே சீர்களை மாற்றியமைக்க வேறு நான்கு பாடல்களாக வருவது பஞ்ச பங்கியாகும். பஞ்சம்-ஐந்து. பங்கி-பங்கமுடையது,

பஞ்சபங்கியாக அமையும் பின்வரும் பாடல் ஒற்றில்லாமலும் இருநூறெழுத்திலும் அமைகின்றது.

(பதினைந்து சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

பூமக டொழுதிரு நாயகி திரிபுரை
பொறையுடை மலையிறை காதலி நிருமலி
புடவிய ரானா வமுதுண வீடீ புகழுடை யீசுரி பூமா
நாமக டுதிபுரி பூரணி சிவையுமை
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
மாமக ளருடரு நீறணி பரைநல
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
கோமக ளுழைமக ணாயக னெனவரு
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகாதுடிநட நாதா குகவெனை யேகொள வாவே![1]

---

1. திருவலங்கற்றிரட்டு 2. 260.

(பதினொருசீர் ஆசிரிய விருத்தம்)

பொறையுடை மலையிறை காதலி நிருமலி
புடவிய ரானா வமுதுண வீடீ புகழுடை யீசுரி பூமா
நறையளி யுழுகுழ லாரணி யரவணி
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
மறைதரு கவுரிவ ராகிய மரிதிரி
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குறைவிலி யறிவது நாடொரு பருமணி
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

2. புடவிய ரானா வமுதுண வீடீ புகழுடை யீசுரி பூமா
நடவிறை பீடா ரிடமுறை தேவீ நகைமலி நாரணி வீயா
வடிவென வேவீ சொளிவிழி மாதா மகனென வானவ ரேசா
குடிலைவி சாகா துடிநட நாதா குகவெனை யேகொள வாவே

(வஞ்சி விருத்தம்)

3. புகழுடை யீசுரி பூமா
நகைமலி நாரணி வீயா
மகனென வானவ ரேசா
குகவெனை யேகொள வாவே.

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

4. பூமக டொழுதிரு நாயகி திரிபுரை புகழுடை யீசுரி பூமா
நாமக டுதிபுரி பூரணி சிவையுமை நகைமலி நாரணி வீயா
மாமக ளருடரு நீறணி பரைநல மகனென வானவ ரேசா
கோமக ளுழைமக ணாயக னெனவரு குகவெனை யேகொள
வாவே.

## 6. சத்த பங்கி

ஒரு பாடலை ஏழு வகையாகப் பிரித்து ஏழு பாடல்களாகக் கொள்ளுமாறு பாடும் பாடல் சத்தபங்கி ஆகும். சத்தம் - ஏழு. பங்கி - பங்கமுடையது.

(எ.டு)

(எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

''திமிரமறாத புலாதிகளேதரு தேடரிதாய் மாறுஞ்
சௌனமகர்மால் வசமேமதமுறு சிறுமையின் மதியாலே
குமரசிகாமணி யேகனிவாயருள் கூடெனவே கூறுங்
குருபரகோலா கலனேவிதியொடு குறுகிய மிடிதிராய்
நமதுவிநாயக தேவசகோதர நாடொறுமே தேறும்
நவிமகள்சேர்வே டுவனே புதுமண நறுமலர் புனைமார்பா
அமராபிரானருள் குஞ்சரிதோள் புணரா டவனே மீறும்
அரகரவேலா யுதனேமுதுமறை யறுமுக முருகோனே''[1]

இப்பாடலை மேலும் 6 வகையாகப் பிரித்து அமைத்தல்.

(கட்டளைக் கலித்துறை)

'திமிர மறாத புலாதிக ளேதரு தேடரிதாய்
குமர சிகாமணி யேகனி வாயருள் கூடெனவே
நமது விநாயக தேவச கோதர நாடொறுமே
அமரர் பிரானருள் குஞ்சரி தோள்புண ராடவனே'

---

1. இராமச்சந்திரக் கவிராயர். தனிப்பாடற்றிரட்டு. பா. எண். 868.

(கொச்சகம்)

தேடரிதாய் மாறுஞ் செனனமகா மால்வசமே
கூடெனவே கூறுங் குருபர கோலாகலனே
நாடொறுமே தேறும் நவிமகள்சேர் வேடுவனே
ஆடவனே மீறும் அரகரவே லாயுதனே.

(கலிவிருத்தம்)

மாறுஞ் செனன மகாமால் வசமே
கூறுங் குருபர கோலா கலனே
தேறும் நவிமகள் சேர்வே டுவனே
மீறும் அரகர வேலா யுதனே.

(சிந்தடி வஞ்சி விருத்தம்)

'மதமுறு சிறுமையின் மதியாலே
விதியொடு குறுகிய மிடிதீராய்
புதுமண நறுமலர் புனைமார்பா
முதுமுறை யறுமுக முருகோனே.

(குறளடி வஞ்சி விருத்தம்)

சிறுமையின் மதியாலே
குறுகிய மிடிதீராய்
நறுமலர் புனைமார்பா
அறுமுக முருகோனே.

(நேரிசை வெண்பா)

தேடரிதாய் மாறுஞ் செனனமகா மால்வசமே
நாடொறுமே தேறு நவிமகள்சேர்—வேடுவனே
ஆடவனே மீறு மரகரவே லாயுதனே
கூடெனவே கூறுங் குரு.

# 7. நவ பங்கி

ஒரு பாடலை ஒன்பது வகையாகப் பிரித்து ஒன்பது பாடல்களாகக் கொள்ளுமாறு பாடும் பாடல் நவபங்கி ஆகும். நவம் - ஒன்பது; பங்கி - பங்கமுடையது.

(எ.டு.)

(பன்னிருசீர் கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

'அரிமரு காகரு ணாலய னேதிட வாரணனே போதன்
அரியிமை யோர்சூழ் புனிதா புலவட ரயிலமர் பொற்கரனே
கரிமுக னேயசகோ தரனே படிகா ரணனே நாதங்
கதியுற வேவா னவனே நலமிகு கயிலை யனற்குருவே
குரவலர் நீபம ணிப்புயனே வடிகூ ரமுதே யோதுங்
குருமணி சேர்மார் பினனே யுலகருள் குயிலுத வுத்தமனே
மரகத மாமயில் வாகனனே கொடிவா ரணனே கோதின்
மதியக மேவாழ் குமரா குலவிய மயிலைம லைக்குகனே'[1]

இதையே ஒன்பது செய்யுள்களாகப் பிரித்தல்

(சிந்தடி வஞ்சி விருத்தம்)

1. அரிமருகா கருணா லயனே
கரிமுகனே யசகோ தரனே
குரவலர்நீ பமணிப் புயனே
மரகதமா மயில்வா கனனே.

(கலிவிருத்தம்)

2. புலவ டரயில மர்பொற் கரனே
நலமி குகயி லைநற் குருவே
உலக ருள்குயி லுதவுத் தமனே
குலவி யமயி லைமலைக் குகனே.

---

1. இராமச்சந்திரக் கவிராயர் : தனிப்பாடற்றிரட்டு, பா. எண். 869.

(கட்டளைக் கலித்துறை)

3. அரிமரு காகரு ணாலய னேதிட வாரணனே
கரிமுக னேயச கோதர னேபடி காரணனே
குரவலர் நீபம ணிப்புய னேவடி கூரமுதே
மரகத மாமயில் வாகன னேகொடி வாரணனே.

(கொச்சகம்)

4. ஆரணனே போத னரியிமையோர் சூழ்புனிதா
காரணனே நாதங் கதியுறவே வானவனே
கூரமுதே யோதுங் குருமணிசேர் மார்பினனே
வாரணனே கோதின் மதியகமே வாழ்குமரா.

(சந்த விருத்தம்)

5. போதன்அரி யிமையோர்சூழ் புனிதா
புலவட ரயிலமர் பொற்கரனே
நாதங்கதி யுறவே வானவனே
நலமிகு கயிலைய னற்குருவே
ஓதுங்குரு மணிசேர் மார்பினனே
யுலகருள் குயிலுத வுத்தமனே
கோதின்மதி யகமே வாழ்குமரா
குலவிய மயிலைம லைக்குகனே.

(கலி விருத்தம்)

6. போதன் அரியிமை யோர்சூழ் புனிதா
நாதங் கதியுற வேவா னவனே
ஓதுங் குருமணி சேர்மார் பினனே
கோதின் மதியக மேவாழ் குமரா.

(குறளடி வஞ்சி விருத்தம்)

7. அயிலமர் பொற்கரனே
கயிலைய னற்குருவே
குயிலுத வுத்தமனே
மயிலமலைக் குகனே.

8. திடவா ரணனே
படிகா ரணனே
வடிகூ ரமுதே
கொடிவா ரணனே.

(நேரிசை வெண்பா)

9. ஆரணனே போதன் அரியிமையோர் சூழ்புனிதா
கூரமுதே யோதுங் குருமணிசேர்—மார்பினனே
வாரணனே கோதின் மதியகமே வாழ்குமரா
காரணனே நாதங் கதி.

# 8. தசபங்கி

ஒரு பாடலிலுள்ள சீர்களையே மாற்றியமைக்கப் பத்து வெவ்வேறு பாடல்களாக வருவது தசபங்கியாகும். தசம் - பத்து· பங்கி - பங்கமுடையது.

(பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

தனதன தானன தானன தானன தானன தானநந்
தனதன தானா நனனா தனதன தனதன தத்தனனா

1\. உலகமெ லாம்வனை யோமுரு காவயி லோகைய னேகாவிண்
ணுலகர வாமா கரனே கறுவலி லுருவளர் கட்டழகா
நலமலி கேதன நாமுதல் வாதிரு நாகைய னேகூவின்
னறவணி பூண்மா குரவா குறுகலி னரநிமிர் கொக்கரியே
யிலகும காமயி லீசுர னேகன வீகைய னேமாவிண்
ணிறைமகள் கான்மா தரையா மறுவறு மெரிவரை மற்குகனே
மலமிலர் காணிச மாசுர னேயடல் வாகைய னேதேவொண்
மதியொலி யானாடிருவேசிறுமையில்வரமருள் சிற்பரனே[1]

அடியெதுகைத் தொடை (வஞ்சி விருத்தம்)

2\. உலகமெ லாம்வனை யோமுருகா
நலமலி கேதன நாமுதல்வா
இலகும காமயி லீசுரனே
மலமிலர் காணிச மாசுரனே

---

1\. பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் பாடல். 6ப். எரிவரைக் குகன் தசபங்கி.

3. கறுவலி லுருவளர் கட்டழகா
குறுகலி னரநிமிர் கொக்கரியே
மறுவறு மெரிவரை மற்குகனே
சிறுமையில் வரமருள் சிற்பரனே.

**குறிப்பு:**

நாகையன் என்பதில் - நாகு - இளமை.

கூவாகிய இப்பூமியையும், வில்லாகிய ஒளிப் பொருள் களையும் மணத்தோடுங் கூடிய திருவணியாகப் பூண்டருள் முன்னவனே யெனும் பொருளைக் ''கூவின்னறவணி பூண்மா குரவா'' எனுஞ் சொற்கள் பயத்தல் காண்க.

நாரம் - 'நரம்' எனக் குறுகிற்று. நாரம் - நீர்; கடலுக்கிலக்கணை.

## இரண்டடியெதுகை யடியியைபுத் தொடை

(வஞ்சி விருத்தம்)

4. ஓமுரு காவயி லோகையனே
நாமுதல் வாதிரு நாயகனே
ஈசுர னேகன வீகையனே
மாசுர னேயடல் வாகையனே.

(கட்டளைக் கலித்துறை)

5. உலகமெ லாம்வனை யோமுரு காவயி லோகையனே
நலமலி கேதன நாமுதல் வாதிரு நாகையனே
யிலகும காமயி லீசுர னேகன வீகையனே
மலமிலர் காணிச மாசுர னேயடல் வாகையனே.

(தரவு கொச்சகக் கலிப்பா)

6. ஓகையனே காவின் னுலகரவா மாகரனே
நாகையனே கூவின் னறவணிபூண் மாகுரவா
வீகையனே மாவின் னிறைமகள்கான் மாதரையா
வாகையனே தேவொண் மதியொலியா னாடிருவே.

(கலி விருத்தம்)

7. காவின் னுலக ரவாமா கரனே
கூவின் னறவணி பூண்மா குரவா
மாவின் னிறைமகள் கான்மா தரையா
தேவொண் மதியொலி யானா டிருவே.

(ஒரு விகற்ப நேரிசை வெண்பா)

8. ஓகையனே காவிண் ணுலகரவா மாகரனே
நாகையனே கூவின் னறவணிபூண்-மாகுரவா
வீகையனே மாவிண் ணிறைமகள்கான் மாதரையா
வாகையனே தேவொண் மதி.

(எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

9. காவிண் ணுலக ரவாமா கரனே
கறுவலி லுருவளர் கட்டழகா
கூவின் னறவணி பூண்மா குரவா
குறுகலி னரநிமிர் கொக்கரியே
மாவிண் ணிறைமகள் கான்மா தரையா
மறுவறு மெரிவரை மற்குகனே
தேவொண் மதியொலி யானா டிருவே
சிறுமையில் வரமருள் சிற்பரனே.

வருக்க வெதுகை (வஞ்சித்துறை)

10. உருவளர் கட்டழகா
நரநிமிர் கொக்கரியே
எரிவரை மற்குகனே
வரமருள் சிற்பரனே.

# 9. பஞ்சவிம்சதியதிக சதபங்கி

ஏரிவரைக்குகன் தசபங்கி எனும் பாட்டை இந்நூலாசிரியர் பாடித் தமக்கு முன்பாக விருக்கின்ற ஒரு நண்பரிடம் காட்ட, சென்னை வாசியாய அவர், நூறு செய்யுளை யுள்ளடக்கிய சத பங்கியை இரண்டு மாதத்திற்கதிகமான காலங்காறும் மிகவும் வருந்தி பண்டிதர் வேலாயுத முதலியார் செய்தார். அதனை யான் காணக் கிடைக்கவில்லை யென்று கூறினதைக் கேட்ட ஆசிரியர், அவ்வியப்புக்கருதி இறைவனைச் சிந்தித்திருந்து 125 வண்ணச் செய்யுள்களை யடக்கியுள்ள பின்வரும் மகா விசித்திர விசேட கவியை இரண்டரைக் கடிகையுட் பாடியருளினார். (கடிகை நாழிகை-விநாடி அறுபது கொண்டது) பஞ்சம்-ஐந்து. விம்சதி-இருபது. சதம்-நூறு.பங்கி-பங்கமுடையது.

அறுபத்துநான்கு சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தத்தாலான ஒரே பாடல் வெவ்வேறு பாவடிவங்களைக் கொண்டு, எதுகை மோனை போன்றவை தவறாது, பாட்டுடைத் தலைவன் பெயர் வருமாறு, யாப்புப் பிழையாமல் நூற்று இருபத்துநான்கு பாடல் களாக அமைகின்றது. இவற்றுள்.

வஞ்சி விருத்தம்-21
வஞ்சித் துறை-24
வெண்டளையான் வந்த
தரவு கொச்சகக்கலிப்பா-3
கலி விருத்தம்-14
கலிநிலைத்துறை-14
கட்டளைக் கலித்துறை-3

நேரிசை வெண்பா-1
இன்னிசை வெண்பா-3
நிலை மண்டில ஆசிரியப்பா-1
அறுசீர் விருத்தம்-22
எழுசீர் விருத்தம்-12
எண்சீர் விருத்தம்-4
ஒன்பதின்சீர் விருத்தம்-2

என மொத்தம் 125 பாக்களாய் விரிந்து பொருள் பயப்பது பெரு வியப்பைத் தருகின்றது. அவை வருமாறு.

(கலைச் சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

தனதன தானன தானன தானன
தானன தானன தானன தானாதந்
தனதன தானா தனனா தனனா தனனா
தனதன தனதன தானதனா

1. திருமலி தாரணி சீர்முரு காவடர்
சேனைய னேயொளிர் சேயவ னேமாவெண்
டெருளர தீதா வரதா திருவே பரிவே
திடமுடை மயில்வரு சேவகனே
திகழ்மறை பாடிடு தேமுத லேயதி
தீரமு ளோயறு தேசுரு வாவேதன்
செயல்புரி தேவா விமலா செனியா தவனே
சிறுமையில் பிரதம சேகரனே
சிதலையின் மாசுரர் சேதன னேசுக
தீபக மேயறு சீலமு ளோய்காலஞ்
செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சிவகண பதியிளை யோய்திணியா
சிலைவலர் சீய[1]ம தீவிர வேண்[2]மணி
சேரணி யோ[3]யுயர் தேகமு ளோய்போர்வெஞ்
சிலைவகிர் சேடா பொருநா திரிசூலதரா
சிகிவரை யொலிமுனி தேசிகனே

---

பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் பாடல். 74-திருவுருமலைக் கோமகன் பஞ்சவிம்சதியதிக சதபங்கி

1. அதிதீவிரவேள் எனற்பாலது 'அதீவிரவேள்' எனப் பொருந்திற்று.
2. மணி சேரணி - திருக்கண் மணிமாலை.
3. உயர்தேகம் - மகாவிசுவ ரூப வடிவு.

தருமமெ யாரணர் சார்முனி யேகிளர்
தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தடநில வயவறு தாரகனே
சகவுயிர் நாடக சாமிச தாசிவ
தாரணி வோய்தொழு தாசர ணா[1]நீதந்
தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
தறுகணர் கருதலர் சார்பிலனே
சதமுனை வாசவர் சாதப தீயொரு
தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ்
சடுவரி வாழ்வே சதுரா [2]தழன்மா மகனே
சவனர்கண் முதியர்கள் சார்புளனே
சலமறு தூயவ சாவிலி யேமிகு
சாரிய னேகுண சாகர மேசார்திண்
டலைமையர் மீளீ சனதா சருவா பரணா
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்

செருமலி யாரயில் சேர்கர னேநிறை
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றெரிய[3]ல தீசா பரமா திருமான் மருகா
[4]திடகுக செயிரறு சீடர்கணா
சிகலறு பாடகர் சேமமு தாலுயர்
தேரமர் வோய்பல தேசம னாகாதுஞ்
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
சிறுகறு மருமறை தேடிறையே
சிதடுறு பாசகர் தீதடு கோபர
சீபதி யேபுகழ் சீலர ணாலாலுஞ்
செடிநகை பாளி திதியோய்[5]செழியோ னிறைவா
சிவைசுத நதிசுத தேமமுதே

---

கலை அறுபத்து நான்காதலின் கலைச்சீரென்பது; அறுபத்து நான்கு சீருடையதாமாறு காண்க. தரர்-கிண்கிணிமாலை.

1. நீதம் - விளையாடல்; வடசொல்
2. தழல் - கார்த்திகை.
3. அதீசன் - தனக்கோரீசனில்லாத் தலைவன்
4. திடம் -உண்மை.
5. செழியோன்-பாண்டியன்

சிலதர்க ணாயக சிவனி யேதுதி
தேரது லாவறு சேகர னேசிர்வண்
டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
திகில்வெலும் வலியருள் சிறடிதா

குருமலி நாரருள் கூர்மதி யோயொரு
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா
குடமுனி வியனிலை கூறரசே
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங்
குயினிச போதா குழையோய் குனி[1]சா னகனே
குறமகள் சுரமகள் கூடருளோய்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர்
கோபதி யேயெணில் கோலமு ளோய்சிலங்
கொடுகொடு சிர்வா குதியே குழகா புலவா
குவிபகை மதியினர் கோளரியே
குலமிலி மாயமில் கோவண னேயிழி
கோரமி லோ[2]யொரு கோகருள் கோ[3]னார்வங்
குலைமருள்[4] கோலா வனகா குரவார் புயனே
குகையுரு மலைவளர் கோமகனே

உ. வஞ்சி விருத்தம்

2. தனதன தானன தானதனா

(2)

திருமலி தாரணி சிர்முருகா
தருமமெ யாரணர் சார்முனியே
செருமலி யாரயில் சேர்கரனே
குருமலி நாரருள் கூர்மதியோய்.

---

1. சானகன்-வில்லுடையோன்; சாரசனனெனும் வடமொழி விகாரம்
2. ஒருகோகருள்கோன்-ஒரு கழுதைக்கு நல்லருள் பாலித்த பெருமான்.
3. மருள் ஆர்வம்-மயக்கமுடை ஆசையை
4. கோலா-தண்டாயுதபாணியே, கோல்-தண்டம்.

(3)

திகழ்மறை பாடிடு தேமுதலே
சகவுயிர் நாடக சாமிசதா
சிகலறு பர்டகர் சேமமுதால்
குகைதொறு மாடிடு கோமுருகே.

(4)

சிதலையின் மாசுரர் சேதனனே
சதமுனை வாசவர் சாதபதீ
சிதடுறு பாசகர் தீதடுகோ
குதலையென் மாசுகொல் கோதிலியே.

(5)

சிலைவலர் சியம தீவிரவேள்
சலமறு தூயவ சாவிலியே
சிலதர்க ணாயக சிவனியே
குலமிலி மாயமில் கோவணனே.

3. தனதன தனதன தானதனா

(6)

திடமுடை மயில்வரு சேவகனே
தடநில வயவறு தாரகனே
திடகுக செயிரறு சீடர்கணா
குடமுனி வியனிலை கூறரசே.

(7)

சிறுமையில் பிரதம சேகரனே
தறுகணர் கருதலர் சார்பிலனே
சிறுகறு மருமறை தேடிறையே
குறமகள் சுரமகள் கூடருளோய்

(8)

சிவகண பதியிளை யோய்திணியா
சவணர்கண் முதியர்கள் சார்புளனே
சிவைசுத நதிசுத தேமுதே
குவிபுளை மதியினர் கோளரியே

(9)

சிகிவரை யொலிமுனி தேசிகனே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திகில்வெலும் வலியருள் சீறடிதா
குகையுரு மலைவளர் கோமகனே.

4. தானன தானன தானதனா

(10)

சேனைய னேயொளிர் சேயவனே
தானைய னேநல தாயனையாய்
தேனைய னேகமழ் தேயமுளோய்
கோனைய னேபல கோயிலுளோய்.

(11)

தீரமு ளோயறு தேசுருவா
தாரணி வோய்தொழு தாசரணா
தேரயர் வோய்பல தேசமனா
சூரமி லோய்சுடர் கோசிகனே

(12)

தீபக மேயறு சீலமுளோய்
தாபமி லோய்விரி சாலமுளோய்
சீபதி யேபுகழ் சீலரணால்
கோபதி யேயெணில் கோலமுளோய்.

(13)

சேரணி யோயுயர் தேகமுளோய்
சாரிய னேகுண சாகரமே
தேரது லாவறு சேகரனே
கோரமி லோயொரு கோகருள்கோன்.

(14)

சீர்முரு காவடர் சேனையனே
சார்முனி யேகிளர் தானையனே
சேர்கர னேநிறை தேனையனே
கூர்மதி யோயொரு கோனையனே.

(15)

தேமுத லேயதி தீரமுளோய்
சாமிச தாசிவ தாரணிவோய்
சேமமு தாலுயர் தேரமர்வோய்
கோமுரு கேயிடர் கூரமிலோய்

(16)

சேதன னேசுக தீபகமே
சாதப தீயொரு தாபமிலோய்
தீதடு கோபர சீபதியே
கோதிலி யேநிமிர் கோபதியே

(17)

தீவிர வேண்மணி சேரணியோய்
சாவிலி யேமிகு சாரியனே
சீவனி யேதுதி தேரதுலா
கோவண னேயிழி கோரமிலோய்.

5. தனனா தனனா தானதனா

(18)

திருவே பரிவே சேவகனே
சருவே சுரனே தாரகனே
திருமான் மருகா சீடர்கணா
குருசூழ் குமரா கூறரசே.

6. தனதன தானா தனனா

(19)

தெருளர தீதா வரதா
சருவரர் தாழ்தாய் துணையே
தெரியல தீசா பரமா
குருகில கோர்மா துகிலோய்.

(20)

செயல்புரி தேவா விமலா
தயவுளர் தாதா நிபுணா
செயமுனி சேயே கழலோய்
குயினிச போதா குழையோய்.

(21)

செடிதபு காலா சிவனே
சடுவரி வாழ்வே சதுரா
செடிநகை யாளீ திதியோய்
கொடுகொடு சீர்வா குதியே.

(22)

சிலைவகிர் சேடா பொருநா
தலைமையர் மீளீ சனதா
திலகவு லாசா திமிசோய்
குலைமருள் கோலா வனகா

3. வஞ்சித் துறை

7. தானதனா தானதனா

(23)

சேனையனே சேயவனே
தானையனே தாயனையாய்
தேனையனே தேயமுளோய்
கோனையனே கோயிலுளோய்

(24)

தீரமுளோய் தேசுருவா
தாரணிவோய் தாசரணா
தேரமர்வோய் தேசமனா
கூரமிலோய் கோசிகனே.

(25)

தீபகமே சீலமுளோய்
தாபமிலோய் சாலமுளோய்
சீபதியே சீலரணால்
கோபதியே கோலமுளோய்.

(26)

சேரணியோய் தேகமுளோய்
சாரியனே சாகரமே
தேரதுலா சேகரனே
கோரமிலோய் கோகருள்கோன்.

8. தானதனானா தனனா

(27)

சீர்முருகாசே னையனே
சார்முனியேதா னையனே
சேர்கரனேதே னையனே
கூர்மதியோய்கோ னையனே.

(28)

தேமுதலேதீ ரமுளோய்
சாமிசதாதா ரணிவோய்
சேமமுதால்தே ரமர்வோய்
கோமுருகேகூ ரமிலோய்

(29)

சேதனனேதீ பகமே
சாதபதீதா பமிலோய்
தீதடுகோசீ பதியே
கோதிலியேகோ பதியே

(30)

தீவிரவேள்சே ரணியோய்
சாவிலியேசா ரியனே
சீவனியேதே ரதுலா
கோவணனேகோ ரமிலோய்.

9. தானன தானதனா

(31)

தாரணி சீர்முருகா
ஆரணர் சார்முனியே
ஆரயில் சேர்கரனே
நாரருள் கூர்மதியோய்.

(32)

பாடிடு தேமுதலே
நாடக சாமிசதா
பாடகர் சேமமுதால்
ஆடிடு கோமுருகே.

10. தானதனா தனனா

(33)

மாசுரர்சே தனனே
வாசவர்சா தபதீ
பாசகர்தீ தடுகோ
மாசுகொல்கோ திலியே.

(34)

சியமதி விரவேள்
தூயவசா விலியே
நாயகசீ வனியே
மாயமில்கோ வணனே'

11. தனனதனா தனனா.

(35)

மயில்வருசே வகனே
வயவறுதா ரகனே
செயிரறுசீ டர்கணா
வியனிலைகூ றரசே.

(36)

பிரதமசே கரனே
கருதலர்சார் பிலனே
அருமறைதே டிறையே
சுரமகள்கூ டருளோய்.

12. தனதன தானதனா

(37)

பதியிளை யோய்திணியா
முதியர்கள் சார்புளனே
நதிசுத தேமழுதே
மதியினர் கோளரியே

(38)

ஒலிமுனி தேசிகனே
புலிமுனி தாழ்பெரியோய்
வலியருள் சீறடிதா
மலைவளர் கோமகனே.

13. தனதன தானா

(39)

தெருளர தீதா
சருவரர் தாழ்தாய்
தெரியல தீசா
[illegible]

(40)

செயல்புரி தேவா
தயவுளர் தாதா
செயமுனி சேயே
குயினிச போதா.

(41)

செடிதபு காலா
சடுவரி வாழ்வே
செடிநகை யாளீ
கொடுகொடு சீர்வா

(42)

சிலைவகிர் சேடா
தலைமையர் மீளீ
திலகவு லாசா
குலைமருள் கோலா.

14. தனனா தனனா

(43)

திருவே பரிவே
சருவே சுரனே
திருமான் மருகா
குருசூழ் குமரா.

(44)

செனியா தவனே
தனிவா னவனே
தினைமா வுணியே
குனிசா னகனே.

(45)

செழுமா மணியே
தழன்மா மகனே
செழியோ னிறைவா
குழகா புலவா.

(46)

திரிசூ லதரா
சருவா பரணா
திருநீ றணிவோய்
குரவார் புயனே

## 4. வெண்டளையான் வந்த தரவு கொச்சகக் கலிப்பா

15. தானதனா தானந் தனனதனா தானதனா

(47)

சேயவனே மாவொண் டெருளரதீ தாவரதா
தாயனையாய் தூவின் சருவரர்தாழ் தாய்துணையே
தேயமுளோய் பாவின் றெரியலதீ சாபரமா
கோயிலுளோய் கூவுங் குருகிலகோர் மாதுகிலோய்

(48)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசரணா நீதந் தயவுளர்தா தாநிபுணா
தேசமனா காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதல் குயினிசபோ தாகுழையோய்.

(49)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சடுவரிவாழ் வேசதுரா
சீலரணா லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடுகொடுசீர் வாகுதியே

## 5. கலிவிருத்தம்

16. தானந் தனதன தானா தனனா

(50)

மாவொண் டெருளா தீதா வரதா
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே
பாவின் றெரியல திசா பரமா
கூவுங் குருகில கோர்மா துகிலோய்.

(51)

வேதன் செயல்புரி தேவா விமலா
நீதந் தயவுளர் தாதா நிபுணா
காதுஞ் சேயமுனி சேயே கழலோய்
போதங் குயினிச போதா குழையோய்

(52)

காலஞ் செடிதபு காலா சிவனே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய்
சீலங் கொடுகொடு சீர்வா குதியே.

(53)

போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா
சார்திண் டலைமையர் மீளி சனதா
சீர்வண் டிலகவு லாசா திமிசோய்
ஆர்வங் குலைமருள் கோலா வனகா

17. தனதன தனதன தானதனா தானதனா

(54)

திடமுடை மயில்வரு சேவகனே தேமுநலே
தடநில வயவறு தாரகனே சாமிசதா
திடகுக செயிரறு சிடர்கணா சேமமுதால்
குடமுனி வியனிலை கூறரசே கோமுருகே

(55)

சிறுமையில் பிரதம சேகரனே சேதனனே
தறுகணர் கருதலர் சார்பிலனே சாதபதி
சிறுகறு மருமறை தேடிறையே தீதடுகோ
குறமகள் சுரமகள் கூடருளோய் கோதிலியே.

18. தனதன தனதன தானதனானா தனனா

(56)

சிவகண பதியிளை யோய்திணியாதீ விரவேள்
சவணர்கண் முதியர்கள் சார்புளனேசா விலியே
சிவைசுத நதிசுத தேமமுதேசீ வனியே
குவிபகை மதியினர் கோளரியேகோ வலனே.

(57)

சிகிவரை யொலிமுனி தேசிகனேசார் முனியே
தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்சேர் [illegible]
திகில்வெலும் வலியருள் சீறடிதாகார் [illegible]
குகையுரு மலைவளர் கோமகனேசீர் முருகா

19. தானதனா தானந் தனதன தானா.

(58)

சேயவனே மாவொண் [illegible] [illegible]
தாயனையாய் தூவின் சருவரர் [illegible]
தேயமுளோய் பாவின் தெரியல [illegible]
[illegible]

(59)

தேசுருவா வேதன் செயல்புரி தேவா
தாசரணா நீதந் தயவுளர் தாதா
தேசமனா காதுஞ் செயமுனி சேயே
கோசிகனே போதங் குயினிச போதா

(60)

சீலமுளோய் காலஞ் செடிதபு காலா
சாலமுளோய் வாலஞ் சடுவரி வாழ்வே
சீலரணா லாலுஞ் செடிநகை யாளீ
கோலமுளோய் சீலங் கொடுகொடு சீர்வா

(61)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர் சேடா
சாகரமே சார்திண் டலைமையர் மீளீ
சேகரனே சீர்வண டிலகவு லாசா
கோகருள்கோ னார்வங் குலைமருள் கோலா

20. தனனா தனனா தனனா தனனா

(62)

திருவே பரிவே செனியா தவனே
சருவே சுரனே தனிவா னவனே
திருமான் மருகா தினைமா வுணியே
குருசூழ் குமரா குனிசா னகனே.

(63)

செழுமா மணியே திரிசூ லதரா
தழன்மா மகனே சருவா பரணா
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குழகா புலவா குரவார் புயனே.

6. கலிநிலைத்துறை

21. தனனா தனனா தனதன தனதன தானதனா

(64)

திருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
திருமான் மருகா திடகுக செயிரறு சீடர்கணா
குருசூழ் குமரா குடமுனி வியனிலை கூறரனே.

(65)

செனியா தவனே சிறுமையில் பிரதம சேகரனே
தனிவா னவனே தறுகணர் கருதலர் சார்பிலனே
தினைமா வுணியே சிறுகறு மருமறை தேடிறையே
குனிசா னகனே குறமகள் சுரமகள் கூடருளோய்,

(66)

செழுமா மணியே சிவகண பதியிளை யோய்திணியா
தழன்மா மகனே சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செழியோ னிறைவா சிவைசுத நதிசுத தேமமுதே
குழகா புலவா குவிபகை மதியினர் கோளரியே

(67)

திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
சருவா பரணா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சிறடிதா
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

22. தனதன தானா தனனா தனனா தனனா

(68)

தெருளர தீதா வரதா திருவே பரிவே
சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
தெரியல தீசா பரமா திருமான் மருகா
குருகில கோர்மா துகிலோய் குருசூழ் குமரா.

(69)

செயல்புரி தேவா விமலா செனியா தவனே
தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(70)

செடிதபு காலா சிவனே செழுமா மணியே
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
செடிநசை யாளீ திதியோய் செழியோ னிறைவா
கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(71)

சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
தலைமையர் மீளீ சனதா சருவா பரணா
திலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
குலைமருள் கோலா வனகா குரவார் புயனே.

22. தானன தானா தந்தன தனனா தானதனா

(72)

தேகமு ளோய்போர் வெஞ்சிலை வகிர்சே டாபொருநா
சாகர மேசார் திண்டலை மையர்மீ ளீசனதா
சேகர னேசீர் வண்டில கவுலா சாதிமிசோய்
கோகருள் கோனார் வங்குலை மருள்கோ லாவனகா.

24. தனதன தானன தானன தானன தானதனா

(73)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி தீரமுளோய்
சகவுயிர் நாடக சாமிச தாசிவ தாரணிவோய்
சிகலறு பாடகர் சேமமு தாலுயர் தேரமர்வோய்
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர் கூரமிலோய்.

(74)

சிலைவலர் சீபம தீவிர வேண்மணி சேரணியோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு சாரியனே
சிலதர்க ணாயக சீவனி யேதுதி தேரதுலா
குலமிலி மாயமில் கோவண னேயிழி கோரமிலோய்.

25. தானன தானன தானன தானன தானதனா

(75)

சீர்முரு காவடர் சேனைய னேயொளிர் சேயவனே
சார்முனி யேகிளர் தானைய னேநல தாயனையாய்
சேர்கர னேநிறை தேனைய னேகமழ் தேயமுளோய்
கூர்மதி யோயொரு கோனைய னேபல கோயிலுளோய்

(76)

சேதன னேசுக தீபக மேயறு சீலமுளோய்
சாதப தீயொரு தாபமி லோய்விரி சாலமுளோய்
தீதடு கோபர சீபதி யேபுகழ் சீலரணால்
கோதிலி யேநிமிர் கோபதி யேயெணில் கோலமுளோய்

26. தான தனாதன தான தனாதன தானதனா

(77)

தீவி ரவேண்மணி சேர ணியோயுயர் தேகமுளோய்
சாவி லியேமிகு சாரிய னேகுண சாகரமே
சீவ னியேதுதி தேர துவாவறு சேகரனே
கோவ ணனேயிழி கோர மிலோயொரு கோகருள்கோன்.

## 7. கட்டளைக் கலித்துறை

27. தனதன தானன தான தனாதன தானதனா

(78)

திருமலி தாரணி சிர்மு ருகாவடர் சேனையனே
தருமமெ யாரணர் சார்மு னியேகிளர் தானையனே
செருமலி யாரயில் சேர்க ரனேநிறை தேனையனே
குருமலி நாரருள் கூர்ம தியோயொரு கோனையனே

(79)

சிதலையின் மாசுரர் சேத னனேசுக தீபகமே
சதமுனை வாசவர் சாத பதீயொரு தாபமிலோய்
சிதடுறு பாசகர் தீத டுகோபர சிபதியே
குதலையென் மாசுகொல் கோதி லியேநிமிர் கோபதியே.

28. தான தனாதன தானன தானன தானதனா

(80)

தேமு தலேயதி தீரமு ளோயறு தேசுருவா
சாமி சதாசிவ தாரணி வோய்தொழு தாசரணா
சேம முதாலுயர் தேரமர் வோய்பல தேசமனா
கோமு ருகேயிடர் கூரமி லோய்சுடர் கோசிகனே.

## 8. நேரிசை வெண்பா

29. தானதனா தானந் தனனதனா தானதனா
தானதனா தானந் தனனதனா தானதனா
தானதனா தானந் தன.

(81)

சேயவனே மாவொண் டெருளரதீ தாவரதா
தாயனையாய் தூவின் சருவரர்தாழ்-தாய்துணையே
தேயமுளோய் பாவின் றெரியலதீ சாபரமா
[illegible] குரு.

## 9. இன்னிசை வெண்பா

30. தானதனா தானந் தனனதனா தானதனா
தானதான தானந் தன.

(82)

தேசுருவா வேதன் செயல்புரிதே வாவிமலா
தாசரணா நீதந் தயவுளர்தா தாநிபுணா
தேசமனா காதுஞ் செயமுனிசே யேகழலோய்
கோசிகனே போதங் குயில்.

(83)

சீலமுளோய் காலஞ் செடிதபுகா லாசிவனே
சாலமுளோய் வாலஞ் சடுவரிவாழ் வேசதுரா
சீலரணா லாலுஞ் செடிநகையா ளீதிதியோய்
கோலமுளோய் சீலங் கொடு,

(84)

தேகமுளோய் போர்வெஞ் சிலைவகிர்சே டாபொருநா
சாகரமே சார்திண் டலைமையர்மீ ளீசனதா
சேகரனே சீர்வண் டிலகவுலா சாதிமிசோய்
கோகருள்கோ னார்வங் குலை.

## 10. நிலைமண்டில வாசிரியப்பா

31. தனனா தனனா தனனா தனனா

(85)

திருவே பரிவே செனியா தவனே
செழுமா மணியே திரிசூ லதரா
சருவே சுரனே தனிவா னவனே
தழன்மா மகனே சருவா பரணா
திருமான் மருகா தினைமா வுணியே
செழியோ னிறைவா திருநீ றணிவோய்
குருசூழ் குமரா குளிசா னகனே
தழகா புலவா குரவார் புயனே,

11-அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

32. தனதன தானன தானதனா தானன தானன தானதனா

(86)

திருமலி தாரணி சீர்முருகா சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனியே தானைய னேநல தாயனையாய்
செருமலி யாரயில் சேர்கரனே தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாரருள் கூர்மதியோய் கோனைய னேபல கோயிலுளோய்

(87)

திகழ்மறை பாடிடு தேமுதலே தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிசதா தாரணி வோய்தொழு தாசரணா
சிகலறு பாடகர் சேமமுதால் தேரமர் வோய்பல தேசமனா
குகைதொறு மாடிடு கோமுருகே கூரமி லோய்சுடர் கோசிகனே.

(88)

சிதலையின் மாசுரர் சேதனனே தீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதபதீ தாபமி லோய்விரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடுகோ சீபதி யேபுகழ் சீலரணால்
குதலையென் மாசுகொல் கோதிலியே கோபதி யேயெணில்
கோலமுளோய்.

(89)

சிலைவலர் சீயம தீவிரவேள் சேரணி யோயுயர் தேகமுளோய்
சலமறு தூயவ சாவிலியே சாரிய னேகுண சாகரமே
சுலதர்க ணாயக சிவனியே தேரது லாவறு சேகரனே
குலமிலி மாயமில் கோவணனே கோரமி லோயொரு
கோகருள்கோன்.

33. தனதன தானா தனனா தனதன தனதன தானதனா

(90)

தெருளர தீதா வரதா திடமுடை மயில்வரு சேவகனே
சருவரர் தாழ்தாய் துணையே தடநில வயவறு தாரகனே
தெரியல தீசா பரமா திடகுக செயிரறு சீடர்கணா
குருகில கோர்மா துகிலோய் குடமுனி வியனிலை கூறரசே.

(91)

செயல்புரி தேவா விமலா சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுணா தறுகணர் கருதலர் சார்பிலனே
செயமுனி தேயே கழலோய் சிறுகறு மருமறை தேடுமறையே
குபினிச போதா குழையோய் குறமகள் சுரமகள் கூடருளோய்

(92)

செடிதபு காலா சிவனே சிவகண பதியிளை யோய்திணியா
சடுவரி வாழ்வே சதுரா சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செடிநகை யாளீ திதியோய் சிவைசுத நதிசுத தேமமுதே
கொடுகொடு சீவா குதியே குவிபகை மதியினர் கோளரியே

(93)

சிலைவகிர் சேடா பொருநா சிகிவரை யொலிமுனி தேசிகனே
தலைமையர் மீளீ சனதா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திலகவு லாசா திமிசோய் திகில் வெலும் வலியருள் சீறடிதா
குலைமருள் கோலா வனகா குகையுரு மலைவளர் கோமகனே.

34. தனதன தானா தனனா தனதன தானா தனனா

(94)

தெருளர தீதா வரதா செயல்புரி தேவா விமலா
சருவரர் தாழ்தாய் துணையே தயவுளர் தாதாநிபுணா
தெரியல தீசா பரமா செயமுனி சேயே கழலோய்
குருகில கோர்மா துகிலோய் குயினிச போதா குழையோய்.

(95)

செயல்புரி தேவா விமலா செடிதபு காலா சிவனே
தயவுளர் தாதா நிபுணா சடுவரி வாழ்வே சதுரா
செயமுனி சேயே கழலோய் செடிநகை யாளீ திதியோய்
குயினிச போதா குழையோய் கொடுகொடு சீர்வா குதியே.

(96)

செடிதபு காலா சிவனே சிலைவகிர் சேடா பொருநா
சடுவரி வாழ்வா சதுரா தலைமையர் மீளீ சனதா
செடிநகை யாளீ திதியோய் திலகவு லாசா திமிசோய்
கொடுகொடு சீர்வா குதியே குலைமருள் கோலா வனகா

35. தானன தானன தானதனா தனதன தானா தனனா

(97)

சேனைய னேயொளிர் சேயவனே தெருளர தீதா வரதா
தானைய னேநல தாயனையாய் சருவரர் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமுளோய் தெரியல தீசா பரமா
கோனைய னேயல கோயமுளோய் குருகில கோர்மா துகிலோய்

(98)

தீரமு ளோயறு தேசுருவா செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசரணா தயவுளர் தாதா நிபுணா
தேரமர் வோய்பல தேசமனா செயமுனி சேயே கழலோய்
கூரமி லோய்சுடர் கோசிகனே குயினிச பேதா குழையோய்'

(99)

தீபக மேயறு சீலமுளோய் செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சாலமுளோய் சடுவரி வாழ்வே சதுரா
சீபதி யேபுகழ் சீலரணால் செடிநகை யாளீ திதியோய்
கோபதி யேயெணில் கோலமுளோய் கொடுகொடு சீர்வாகுதியே

(100)

சேரணி யோயுயர் தேகமுளோய் சிலைவகிர் சேடா பொருநா
காரிய னேகுண சாகரமே தலைமையர் மீளீ சனதா
தேரது லாவறு சேகரனே திலகவு லாசா திமிசோய்
கோரமி லோயொரு கோகருள்கோ குலைமருள் கோலா வனகா.

36. தானந் தனதன தானா தனனா தனனா தனனா

(101)

மாவொண் டெருளர தீதா வரதா திருவே பரிவே
தூவின் சருவரர் தாழ்தாய் துணையே சருவே சுரனே
பாவின் றெரியல தீசா பரமா திருமான் மருகா
கூவுங் குருகிய கோர்மா துகிலோய் குருசூழ் குமரா

(102)

வேதன் செயல்புரி தேவா விமலா செனியா தவனே
நீதந் தயவுளர் தாதா நிபுணா தனிவா னவனே
காதுஞ் செயமுனி சேயே கழலோய் தினைமா வுணியே
போதங் குயினிச போதா குழையோய் குனிசா னகனே.

(103)

காலஞ் செடிதபு காலா சிவனே செழுமா மணியே
வாலஞ் சடுவரி வாழ்வே சதுரா தழன்மா மகனே
ஆலுஞ் செடிநகை யாளீ திதியோய் செழியோ னிறைவா
சீலங் கொடுகொடு சீர்வா குதியே குழகா புலவா.

(104)

போர்வெஞ் சிலைவகிர் சேடா பொருநா திரிசூ லதரா
சார்திண் டலைமையர் மீளீ சனதா சருவா பரணா
சேர்வண் டிலகவு லாசா திமிசோய் திருநீ றணிவோய்
ஆர்வெங் குலைமருள் கோலா வனகா [illegible] புயனே.

37. தனதன தானன தானதனா தனதன தானன தானதனா

(105)

திருமலி தாரணி சீர்முருகா திகழ்மறை பாடிடு தேமுதலே
தருமமெ யாரணர் சார்முனியே சகவுயிர் நாடக சாமிசதா
செருமலீ யாரயில் சேர்கரனே சிகலறு பாடகர் சேமமுதால்
குருமலி நாரருள் கூர்மதியோய் குகைதொறு மாடிடு
கோமுருகே

(106)

திகழ்மறை பாடிடு தேமுதலே சிதலையின் மாசுரர் சேதனனே
சகவுயிர் நாடக சாமிசதா சதமுனை வாசவர் சாதபதீ
சிகலறு பாடகர் சேமமுதால் சிதடுறு பாசகர் தீதடுகோ
குகைதொறு மாடிடு கோமுருகே குதலையென் மாசுகொல்
கோதிலியே.

(107)

சிதலையின் மாசுரர் சேதனனே சிலைவலர் சீயம தீவிரவேள்
சதமுனை வாசவர் சாதபதீ சலமறு தூயவ சாவிலியே
சிதடுறு பாசகர் தீதடுகோ சிலதர்க ணாயக சீவனியே
குதலையென் மாசுகொள் கோதிலியே குலமிலி மாயமில்
கோவணனே.

12. எழுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

38. தனதன தானன தானன தானன தானன தானன தானதனா

(108)

திருமலி தாரணி சீர்முரு காவடர்
சேனைய னேயொளிர் சேயவனே
தருமமெ யாரணர் சார்முனி யேகிளர்
தானைய னேநல தாயனையாய்
செருமலி யாரயில் சேர்கர னேநிறை
தேனைய னேகமழ் தேயமுளோய்
குருமலி நாரருள் கூர்மதி யோயொரு
கோனைய னேபல கோயிலுளோய்

(109)

திகழ்மறை பாடிடு தேமுத லேயதி
தீரமு ளோயறு தேசுருவா
சகவுயிர் நாடக சாமிச தாசிவ
தாரணி வோய்தொழு தாசரணா

சிகலறு பாடகர் சேமமு தாலுயர்
தேரமர் வோய்பல தேசமனா
குகைதொறு மாடிடு கோமுரு கேயிடர்
கூரமி லோய்சுடர் கோசிகனே.

(110)

சிதலையின் மாசுரர் சேதன னேசுக
தீபக மேயறு சீலமுளோய்
சதமுனை வாசவர் சாதப தீயொரு
தாபமி லோய்விரி சாலமுளோய்
சிதடுறு பாசகர் தீதடு கோபர
சீபதி யேபுகழ் சீலரணால்
குதலையென் மாசுகொல் கோதிலி யேநிமிர்
கோபதி யேயெணில் கோலமுளோய்

(111)

சிலைவலர் சீயம தீவிர வேண்மணி
சேரணி யோயுயர் தேகமுளோய்
சலமறு தூயவ சாவிலி யேமிகு
சாரிய னேகுண சாகரமே
சிலதர்க ணாயக சீவனி யேதுதி
தேரது லாவறு சேகரனே
குலமிலி மாயமில் கோவண னேயிழி
கோரமி லோயொரு கோகருள்கோன்.

39. தானன தானன தானன தானாதந் தனதன தானா தனனா

(112)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டெருளர தீதா வரதா
தானைய னேநல தாயனை யாய்தூவின்
சருவரர் தாழ்தாய் துணையே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றெரியல தீசா பரமா
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருகில தோர்மா துகிலோய்

(113)

திரமு ளோயறு தேசுரு வாவேதன்
செயல்புரி தேவா விமலா
தாரணி வோய்தொழு தாசர ணாநீதந்
தயவுளர் தாதா நிபுணா
தேரமர் வோய்பல தேசம ளாகாதுஞ்
செயமுனி சேயே கழலோய்
கூரமி லோய்சுடர் கோசிக னேபோதங்
குயினிச போதா குழையோய்

(114)

திபக மேயறு சிலமு ளோய்காலஞ்
செடிதபு காலா சிவனே
தாபமி லோய்விரி சாலமு ளோய்வாலஞ்
சடுவரி வாழ்வே சதுரா
சிபதி யேபுகழ் சிலர ணாலாலுஞ்
செடிநகை யாளீ திதியோய்
கோபதி யேயெணில் கோலமு ளோய்சிலங்
கொடுகொடு சீர்வா குதியே.

(115)

சேரணி யோயுயர் தேகமு ளோய் போர்வெஞ்
சிலைவகிர் சேடா பொருநா
சாரிய னேகுண சாகர மேசார்திண்
டலைமையர் மீளீ சனதா
தேரது லாவறு சேகர னேசீர்வண்
டிலகவு லாசா திமிசோய்
கோரமி லோயொரு கோகருள் கோனர்வங்
குலைமருள் கோலா வனகா.

40. தானன தானாதந் தனதன தானா தனனா தனனா தனனா

(116)

சேயவ னேமாவொண் டெருளர தீதா
வரதா திருவே பரிவே
தாயனை யாய்தூவின் சருவரர் தாழ்தாய்
துணையே சருவே சுரனே
தேயமு ளோய்பாவின் றெரியல தீசா
பரமா திருமான் மருகா
தோயிலு ளோய்கூவுங் குருகில கோர்மா
துகிலோய் குருசூழ் குமரா

(117)

தேசுரு வாவே தன் செயல்புரி தேவா
விமலா செனியா தவனே
தாசர ணாநீதந் தயவுளர் தாதா
நிபுணா தனிவா னவனே
தேசம னாகாதுஞ் செய்முனி சேயே
கழலோய் தினைமா வுணியே
கோசிக னேபோதங் குயினிச போதா
குழையோய் குனிசா னகனே.

(118)

சீலமு ளோய்காலஞ் செடிதபு காலா
சிவனே செழுமா மணியே
சாலமு ளோய்வாலஞ் சடுவரி வாழ்வே
சதுரா தழன்மா மகனே
சீலர ணாலாலுஞ் செடிநகை யாளீ
திதியோய் செழியோ னிறைவா
கோலமு ளோய்சிலங் கொடுகொடு சீர்வா
குதியே குழகா புலவா

(119)

தேகமு ளோய் போர்வெஞ் சிலைவகிர் சேடா
பொருநா திரிசூ லதரா
சாகர மேசார்திண் டலைமையர் மீளீ
சனதா சருவா பரணா
சேகர னேசீர்வண் டிலகவு லாசா
திமிசோய் திருநீ றணிவோய்
கோகருள் கோவனார்வங் குலைமருள்
கோலா வனகா குரவார் புயனே.

13. எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

41. தனதன தானா தனனா தனனா தனனா தனதன தனதன தானதனா

(120)

தெருளர தீதா வரதா திருவே
பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
சருவரர் தாழ்தாய் துணையே சருவே
சுரனே தடநில வுபவரு தாரகனே

தெரியல தீசா பரமா திருமான்
மருகா திடகுக செயிரறு சீடர்கணா
குருகில கோர்மா துகிலோய் குருசூழ்
குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(121)

செயல்புரி தேவா விமலா செனியா
தவனே சிறுமையில் பிரதம சேகரனே
தயவுளர் தாதா நிபுணா தனிவா
னவனே தறுகணர் கருதலர் சார்பிலனே
செயமுனி சேயே கழலோய் தினைமா
வுணியே சிறுகறு மருமறை தேடிறையே
குயினிசு போதா குழையோய் குனிசா
னகனே குறமகள் சுரமகள் கூடருளோய்.

(122)

செடிதபு காலா சிவனே செழுமா
மணியே சிவகண பதியிளை யோய்திணியா
சடுவரி வாழ்வே சதுரா தழன்மா
மகனே சவணர்கண் முதியர்கள் சார்புளனே
செடிநகை யாளீ திதியோய் செழியோ
னிறைவா சிவைசுத நதிசுத தேமமுதே
கொடுகொடு சீர்வா குதியே குழகா
புலவா குவிபகை மதியினர் கோளரியே.

(123)

சிலைவகிர் சேடா பொருநா திரிசூ
லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
தலைமையர் மீளீ சனதா சருவா
பரணா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
திலகவு லாசா திமிசோய் திருநீ
றணிவோய் திகில்வெலும் வலியருள் சிறடிதா
குலைமருள் கோலா வனகா குரவார்
[illegible] கோமகனே;

14. ஒன்பதின் சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்
தானன தானன தானன தானாதந்
தனனா தனனா தனதன தனதன தானதனா

(124)

சேனைய னேயொளிர் சேயவ னேமாவொண்
டிருவே பரிவே திடமுடை மயில்வரு சேவகனே
தானைய னேநல தாயனைய யாய்தூவின்
சருவே சுரனே தடநில வயவறு தாரகனே
தேனைய னேகமழ் தேயமு ளோய்பாவின்
றிருமான் மருகா திடகுக செயிரறு சீடர்கணா
கோனைய னேபல கோயிலு ளோய்கூவுங்
குருசூழ் குமரா குடமுனி வியனிலை கூறரசே.

(125)

சேரணி யோயுயர் தேகமு ளோய்போர்வெந்
திரிசூ லதரா சிகிவரை யொலிமுனி தேசிகனே
சாரிய னேகுண சாகர மேசார்திண்
சருவா பரணா தகைகெழு புலிமுனி தாழ்பெரியோய்
தேரது லாவறு சேகர ளேசீர்வண்
டிருநீ றணிவோய் திகில்வெலும் வலியருள் சீறடிதா
கோரமி லோயொரு கோகருள் கோனார்வங்
குரவார் புயனே குகையுரு மலைவளர் கோமகனே.

## குறிப்பு

முதல் பாடலில் முதல் அடியில் உள்ள 64 சீர்களுள் எத்தனை யாவது சீர் எடுக்கப்படுகிறதோ அதே சீர் 2, 3, 4, ஆகிய அடிகளிலிருந்தும் எடுக்கப்பட்டு மேற்கண்ட 124 பாடல்களும் அமைவது குறிப்பிடத்தக்கது. இப்பாடல்கள் ஒவ்வொன்றும் எதுமை, மோனை தவறாது, இறைவன் திருப்பெயர்களைத் தாங்கி, யாப்பு முறை வழுவாமல் பாடியுள்ளமையும் அறியத் தக்கது.

# 10. அந்தாதித் தொடைக் கமல பந்தம், பலபங்கி

இது ஐம்பத்தாறு எழுத்துக்களைக் கொண்ட ஒரு கலிவிருத்தம்.கமல பந்தத்தில் அமையுமாறும் அதுவே பல பாக்களாய் மாறி அமைப்பதாகும்.கமலம் - தாமரை.இப்பாடலிலுள்ள 56 எழுத்துக்களும் சித்திரத்தில் 25 எழுத்துக்களாக அமையும்[1]

இப்பாடலே கலிவிருத்தம்—3; வஞ்சிவிருத்தம் 6; வஞ்சித்துறை 9 எனப் பிரிந்து பிறிதுபடுபாட்டாகும்.

மேலும், மாலை மாற்று, ஏகபாத மாலை மாற்று, கோமூத்திரி, காதை கரப்பு போன்ற சித்திரக்கவி வகைகளும் இப்பாடலில் அமைந்துள்ளன. அவை வருமாறு.

கலிவிருத்தம்

தனதன தனன தனதன தனன

வரவிதி திருவ வருதிபொ னரவ
வரனது கருவ வருகணை குரவ
வரகுக மருவ வருமறை பரவ
வரபத மருவ வருமதி விரவ.

வருதிபொ னரவ வரனது கருவ
வருகணை குரவ வரகுக மருவ
வருமறை பரவ வரபத மருவ
வருமதி விரவ வரவிதி திருவ.

---

1. குமரகுருதாச சுவாமிகள்-பத்துப்பிரபந்தம்.

## கமல பங்கி



திருவ வருதிபொ னரவ வரனது
கருவ வருகணை குரவ வரகுக
மருவ வருமறை பரவ வரபத
மருவ வருமதி விரவ வரவிதி

அரவ வரனது கருவ வருகணை
குரவ வரகுக மருவ வருமறை
பரவ வரபத மருவ வருமதி
விரவ வரவிதி திருவ வருதிபொன்.

இவை - தம்மிற் பிறிதுபடு பாட்டுக்களாம். இவற்றுட் பின்னுள்ள இரண்டு கலிவிருத்தமும், மோனை நயமுள்ள வஞ்சிவிருத்தமுமாம். அவை வருமாறு.

வஞ்சிவிருத்தம்

[திருவவரு திபொனரவ வரனது
கருவவரு கணைகுரவ வரகுக
மருவவரு மறைபரவ வரபத
மருவவரு மதிவிரவ வரவிதி.

அரவவர னதுகருவ வருகணை
குரவவர குகமருவ வருமறை
பரவவர பதமருவ வருமதி
விரவவர விதிதிருவ வருதிபொன்]

வஞ்சி விருத்தம்

வரவிதி திருவ வருதிபொன்
அரனது கருவ வருகணை
வரகுக மருவ வருமறை
வரபத மருவ வருமதி

வருதிபொ னரவ வரனது
வருகணை குரவ வரகுக
வருமறை பரவ வரபத
வருமதி விரவ வரவிதி

திருவ வருதிபொ னரவ
கருவ வருகணை குரவ
மருவ வருமறை பரவ
மருவ வருமதி விரவ

அரவ வரனது கருவ
குரவ வரகுக மருவ
பரவ வரபத மருவ
விரவ வரவிதி திருவ

இவற்றுள் பின்னுள்ள இரண்டு விருத்தமும் மோனை நயமுள்ள வஞ்சித்துறையாம். வருமாறு.

வஞ்சித் துறை

[திருவவரு திபொனரவ
கருவவரு கணைகுரவ
மருவவரு மறைபரவ
மருவவரு மதிவிரவ.

அரவவர னதுகருவ
குரவவர குகமருவ
பரவவர பதமருவ
விரவவர விதிதிருவ]

வஞ்சித்துறை

| | |
|---|---|
| வரவிதி திருவ | திருவ வருதிபொன் |
| வரனது கருவ | கருவ வருகணை |
| வரகுக மருவ | மருவ வருமறை |
| வரபத மருவ | மருவ வருமதி |
| வருதிபொ னரவ | அரவ வரனது |
| வருகணை குரவ | குரவ வரகுக |
| வருமறை பரவ | பரவ வரபத |
| வருமதி விரவ | விரவ வரவிதி. |

## மாலை மாற்று

வஞ்சித்துறை

திருவ வருதி
கருவ வருக
மரும வரும
மருவ வரும

சொற்பிரிவு:- திருவ, வருதி, கருவ, அருகு, அமர், உ, அ, அரு, ம, மருவ, வரும.

(இ-ள்) திருவ - செல்வமுள்ளவனே

வரும-(சூரபதுமனை நசித்துத் தேவர்களைக் காத்தருளு மாறு பெரான்) கவசந்தரித்தவனே.

உ - உகாரமும், அ - அகாரமும்
அரு – அருமையான, ம - மகாரமும்,
மருவ - வடிவாசப் பொருந்த.
வருதி - என்முன் வந்தருள்க.
கருவ – (அனைத்துக்குங்) காரணமாயுள்ளவனே.
அருகு அமர் - என்னை நீங்காதிருப்பாயாக.

குறிப்பு:- (வவ-ஃ) கர்வம்=விசேடம். (கவ-ஃ) கர்வம் - அன்பு என்று பொருளாமாற்றானே, கருவ என்பதற்கு விசேடமுள்ளவனே, அன்புள்ளவனே என்றலுமாம். வர்மம் - கவசம். வர்மம் வருமென்றதாலும், கர்வம் கருவமென்றதாலுந் தென்மொழி வழக்கு. வியட்டிப் பிரணவமான அகார உகார மகாரங்க ளொன்றாய் நிற்கு நிலையே சமட்டிப் பிரணவமெனும் ஓங்காரமாம். இப்பிரணவப் பொருள் முருகப் பெருமா னென்பது ஸுப்ரஹ்மண்யோம் ஸுப்ரஹ்மண்யோம் ஸுப்ரஹ்மண்யோம் எனுஞ் சுருதியானும் பெறுதும்.

இம்மாலை மாற்றுச் செய்யுளின் ஈற்றடியை நான்கு முறை வாசிக்க அடியிலுள்ள ஏகபாத மாலை மாற்றுச் செய்யுளாகும்.

## ஏகபாத மாலை மாற்று

### வஞ்சித்துறை

மருவ வரும
மருவ வரும
மருவ வரும
மருவ வரும

இ-ள்) மருவ - மலைகளையுடையவனே.
வரும - கவசந் தரித்தவனே.
மருவ - நல்ல வாசனை கமழவுள்ளவனே
வரும் மமர் (மம்மர்)உ - என்னிடத்துண்டாகும் மயக்க மனத்தை
வவு (வவ்வு) - கவர்ந்து கொள்.
அரும் - காண்டற்கரிய.
ம - அக்கினி மேனியாய் விளங்கியவனே
மருவ - (என்னைக்) கலந்து கொள்ள
வரும்அ - வரத்தக்க அகாரப் பொருளே.

இச்செய்யுளையே யிரண்டு வரியாக்கிக் கோமூத்திரஞ் செல்லுமாறு மேலுங் கீழும் ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்க கோமூத்திரி எனுஞ் சித்திர கவியாகும்.

## கோமூத்திரி

மருவ வரும மருவ வரும
மருவ வரும மருவ வரும

இக்கமல பந்தத்தின் தலைச் செய்யுள் முதலடியின் 2-ஆவது வகரத்தையும், இரண்டாம் மூன்றாம் அடிகளின் 2-ஆவது 4-ஆவது வகரங்களையும், நான்காமடியின் 2-ஆவது வகரத்தையும் அடுத்து வரும் சீர்களுக்கு ஆதியாகக்கொண்டு நான்கடிகளையும் படித்தால் நடுவிலொரு வகரமும், சூட்டின்மேல் நான்கு வகரமுஞ் சந்தியாய் நின்று முற்றுப்பெறும் நான்காரைச் சக்கரபந்தமாம் அதனை அடியிற்காண்க.

வ
ர ர ர
ப ன ப
றை து த
ம க ம
ரு ரு ரு
வ ர வி தி தி ரு வ ரு தி பொ ன ர வ
ரு ரு ரு
ம க ம
க ணை தி
கு கு வி
ர ர ர
வ

மேலைய தலைச் செய்யுளின் முதலடி ஈற்றெழுத்துத் தொடங்கி மற்றை மூன்றடிகளிலும், முதலடியிலுமுள்ள வெழுத்துக்களில் ஒவ்வோரெழுத்து இடையிட்டு வாசிக்க ஒரு காதை காப்புச் செய்யுள் வரும். அது,

### காதை கரப்பு
### (வஞ்சித்துறை) யமகம்

வரதுரு வகசு
வரகரு வமப
வரதரு வமவி
வரதிரு வதின.

சொற்பிரிவு:- வர, துருவ, கசுவர், அகருவம், அபவர், அதர், உ, வம். அவி, வர, திருவ, தின.

(இ-ள்) கசுபம் - கசுவம் - திசை.

கசுவர் - திசைகளிலுள்ள ஜீவர்களுக்கு

வர - வரமளிக்கும் வள்ளலே

துருவ - மலைகளையுடையானே

அகருவம் - அன்பில்லாமையையும்,

அபவர் அதர்- உள்ளதைப் பற்றாதவரது வழிச் செல்லும்

உ - மனத்தின்

வம் - விருப்பத்தையும்,

அவி - (என்னிடஞ் சேராத வண்ணம்) கெடுத்தருள்

வர - (என்) விருப்பத்திற்குரியவனே,

திருவ - சிறப்புடையானே

தின - அஞ்ஞான விருளை யொழிக்க ஞானப்பகலாக விளங்குவோனே.

இதனைக் கரந்துறைச் செய்யுளென்று சிலர் கூறுவர். தண்டியலங்கார எடுத்துக்காட்டின்படி இது காதை கரப்பு எனப் பட்டது.

இக் காதைகரப்புச் செய்யுள் மற்றோரது கையா னடக்கு மொரு பிறிதுபடுபாட்டுமாம். ஆயினும் எதுகை மோனையில் லாதது சித்திரகவியாகா தென்றல் இந்நூலாசிரியர் கோட்பாடா கலின், மூன்றடிகளின் மோனை யெழுத்தில்லாத இஃதங்கீகரிக்கப் படவில்லை. அது வருமாறு:—

துருவ கருவர
கருவ மபவர
தருவ மவிவர
திருவ தினவர

தலைச் செய்யுளில் "பொனரவ" (பொன் அரவ) எனப் பட்டதற்கும் பொற்சிலம் பணிந்தவனே யென்று பொருள் கொள்க. மற்றவைகளின் பொருள் வெளிப்படையாகலின் அவை மீண்டு விளக்கப்படவில்லை.

## குறிப்பு

"அரவம்" நூபுரமெனுஞ் சிலம்பென்பதை "அரவ நூபுரமும் பாம்பு மோசையுமாம் எனும் பிங்கலந்தைச் சூத்திரத் திற் காண்க. இப்பந்தத்திலிருந்து வெளிப்படுஞ் செய்யுள்களில் சிலவற்றி னடிகட்குரிய மோனையெழுத்துக்கள் அடிகளினிடையி லேனும், ஈற்றிலேனுமுள்ளவாறுணர்க, அடிகளினந்தத்தினிற்கு மெழுத்து நான்கும், ஆதியினிற்கு மெழுத்து நான்கும் ஒருவகையா யிருத்தலால் இப்பாட்டு, அந்தாதித் தொடைக் கமலபந்த மெனும் பெயர் பெற்றது. சித்திரத்தினுள்ளே பல சித்திர கவி களைத் தருதலானே இது விசித்திர கவியாம். முருகப் பெருமான், ஆன்மகோடிகளின் இருதயகமல குகையி லிருத்தலினாலே குகனெ னப்பட்டனன். இக்குகனெனுந் திருப்பெயர் மேலைத் தலைச் செய்யுள் 3ஆம் அடியில் வந்துளதாகலின் இக்கமலம் அவனது அத்தரியாமித் தத்துவத்தை விளக்கி நிற்பதுமாயிற்று.

# 11. ஐந்தந்தாதி என்னும் பகுபடு பஞ்சகம்

பாம்பன் சுவாமிகள் பாடியுள்ள பத்துப் பிரபந்தம் என்னும் நூல் 10 வகையான சித்திரக் கவிகளைக் கொண்டது. இவற்றுள், வேலாயுத பந்தம், மயில் பந்தம், அந்தாதித் தொடைக் கமல பந்தம், பலபங்கி, பிறிதுபடு துவித பங்கி, பிறிதுபடுபாட்டுப் பிரபந்தம் என்பன அந்தந்தத் தலைப்புகளில் முன்னரே விளக்கப் பட்டுள்ளன.

பிறிதுபடு பாட்டிற்கு வேறாக அமைந்த பகுபடு பஞ்சகம் (ஐந்தந்தாதி); ஒவ்வொரு அடியும் 32 சந்த பேதங்களை உடைய தாக அமைந்த சஷ்டி வகுப்பு; இருதிறப் பொருளுடைய தங்க ஆனந்தக் களிப்பு; வலஞ்சுற்றிப் பார்க்கினும் இடஞ்சுற்றிப் பார்க்கினும் ஒரு படித்தாகவே நிகழ் ஆறறையான அனவரத பாராய ணாஷ்டகம் என்னும் இவை நான்கும் சிறந்த சித்திரக்கவிகளென இந்நூலாசிரியராலேயே சுட்டப்படுகின்றன. அவை வருமாறு.

1. (கட்டளைக் கலித்துறை)

சிவகந்தன் சீர்மயின் மேற்றிகழ் செய்யுந் தினமதொன்றி
னவகண்டஞ் சூழினன் றானமின் விஞ்சொண் ணகையிதென்னெண்
கவலொன்றுங் காலவற் குட்கதி ரென்முக் கணிறையெஞ்சே
யவனங்கங் காணதென் றானரி வந்தித் தனனெழுந்தே.[1]

குறிப்பு:- சொல்லும் பொருளும் வேறுபடாமல் அடியுந் தொடையும் வேறுபட்டு வரும் பிறிதுபடுபாட்டிற்கு வேறாகச்

1. பாம்பன் சுவாமிகள், பத்துப்பிரபந்தம் பக். 16-29

சீர்களவாகப் பிரிக்கப்படுமாற்றானே சந்த பேதத்தின் வெவ்வேறு செய்யுளாகப் பகுபடுதலையே இந்நூலாசிரியர் (பாம்பன் சுவாமிகள் - பத்துப்பிரபந்தம்) பகுபடுபாட்டெனும் மிறைக்கவி யாக அமைத்துள்ளனர். ஒரு செய்யுள் 5 ஆகவும், 4 ஆகவும் பகுபடு தலிற் சிறந்த மிறைக் கவியாம்.

(அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்)

புளிமாங்காய் தேமா தேமா புளிமாங்காய் புளிமா தேமா

சிவகந்தன் சீர்ம யின்மேற் றிகழ்செய்யுந் தினமதொன்றி
னவகண்டஞ் சூழி னன்றா னமின்விஞ்சொண் ணகையி தென்னென்
கவலொன்றுங் கால வற்குட் கதிரென்முக் கணிறை யெஞ்சே
யவனங்கங் காண தென்றா னரிவந்தித் தனனெ ழுந்தே.

புளிமா தேமா புளிமா புளிமா கூவிளங்காய் தேமா

சிவகந் தன்சீர் மயின்மேற் றிகழ்செய் யுந்தினம தொன்றி
னவகண் டஞ்சூ ழினன்றா னமின்விஞ்சொண் ணகையிதென்னென்
கவலொன் றுங்கா லவற்குட் கதிரென் முக்கணிறை யெஞ்சே
யவனங் கங்கா ணதென்றா னரிவந் னரிவந் தித்தனனெ ழுந்தே.

(தரவு கொச்சகக் கலிப்பா)

புளிமாங்காய் கூவிளங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்

சிவகந்தன் சீர்மயின்மேற் றிகழ்செய்யுந் தினம தொன்றி
னவகண்டஞ் சூழினன்றா னமின்விஞ்சொண் ணகையிதென்னென்
கவலொன்றுங் காலவற்குட் கதிரென்முக் கணிறையெஞ்சே
யவனங்கங் காணதென்றா னரிவந்தித் தனனெழுந்தே.

(கலிநிலைத்துறை)—நட்டராகம்

புளிமாங்காய் கூவிளங்காய் புளிமாங்காய் புளிமா தேமா

சிவகந்தன் சீர்மயின்மேற் றிகழ்செய்யுந் தினம தொன்றி
னவகண்டஞ் சூழினன்றா னமின்விஞ்சொண் ணகையிதென்னென்
கவலொன்றுங் காலவற்குட் கதிரென்முக் கணிறை யெஞ்சே
யவனங்கங் காணதென்றா னரிவந்தித் தனனெ ழுந்தே.

(இ-ள்) மங்கல சொரூபியாகிய கந்தசுவாமியானவர், சீர்த்தி தங்கிய மயில் வாகனத்தில் ஆரோகணித்து விளக்கத்தைப் புரியும் ஒரு நாளில், நவகண்டங்களையும் வலஞ்செய்கின்ற சூரியன் - அவ் விளக்கத்தைக் கண்டு நம்மைக் காட்டினுமேம்பட்ட ஒள்ளிய ஒளி யாய் இஃதென்னென்று வுணரகில்லானாய், மனத்தின்கண் துன்பெய்துமமையத்தில், ஒளி செய்வோனாகிய அச்சூரியனுக்கு உள்ளொளியென விளங்குந் திரிநேத்திரங்களையுடைய தலைவ னாகிய சிவபெருமான் எம்முடைய குமாரனது ரூபம் அஃதாகும் காண்க என்றனன். சூரியன் எழுந்து நமஸ்கரித்தனன்.

2. (கட்டளைக் கலித்துறை)

தேனார்சுமன் முருகோன்மயி லேறச் சிகிதிகழ்தன்
வானார் குரல்கொடு மூடிட வேனிவ் வணமெனவேள்
கானார்வெயின்மரு வாவண மென்னக் கதிரயிலோ
னானார் பரன்மதி யென்றுதை யிட்டா னனிசெலவே

(கலி விருத்தம்)

தேமாங்கனி புளிமாங்கனி தேமாங்கனி புளிமா

தேனார்சுமன் முருகோன்மயி லேறச்சிகி திகழ்தன்
வானள்குரல் கொடுமூடிட வேனில்வண மெனவேள்
கானார் வெயின் மருவாவண மென்னக்கதி ரயிலோ
னானார்பரன் மதியென்றுதை யிட்டானனி செலவே

(தரவு கொச்சகக் கலிப்பா)

தேமாங்காய் கூவிளங்காய் புளிமாங்காய் கருவிளங்காய்

தேனார்சு மன்முருகோன் மயிலேறச் சிகிதிகழ்தன்.
வானார்கு ரல்கொடுமூ டிடவேனிவ் வணமெனவேள்
கானார்வெ யின்மருவா வணமென்னக் கதிரயிலோ
னானார்ப ரன்மதியென் றுதையிட்டா னனிசெலவே.

(கலிநிலைத் துறை)

தேமா கருவிளம் கூவிளங்காய் கூவிளம் புளிமா

தேனார் சுமன்முரு கோன்மயிலே றச்சிகி திகழ்தன்
வானார் குரல்கொடு மூடிடவே னிவ்வண மெனவேள்
கானார் வெயின்மரு வாவணமென் னக்கதி ரயிலோ
னானார் பரன்மதி யென்றுதையிட் டானனி செலவே.

(இ-ள்) தேன் பொருந்துதலையுடைய கடப்பமலர்மாலை யணிந்த இளைய பிள்ளையாகிய இறைவன், மயிலின் மீது ஆரோகணஞ் செய்ய அம்மயிலானது விளக்கஞ் செய்வதும் ஆகாயமளாவுவதுமாகிய தன் தோகையால் இறைவனது திருமேனியை மூடுதல் செய்ய, முருகக்கடவுள் இவ்வாறு செய்தல் யாது காரணமென வினவ, கானகமார்க்கத்திற் பொருந்தும் வெயில் வெப்பம் எய்தாத வகை என்று சொல்ல, ஒளியைச் செய்யும் வேற்படை தாங்கிய விமலன், என்னை யாரென்று கருதினை மேலானவனென மதிப்பாயாகவென்று, நன்றாகச் செல்ல உதைத்தருளினன்,

3. (கட்டளைக் கலித்துறை)

செலவுதிப் பில்கந்த வண்ணல் சிலம்பருஞ் செல்வத்தரேய்
நலவடிக் கண்மன்னு மெங்க ணலங்கொனென் றுள்விம்முமா
விலகரைக் கண்மன்ன னெய்தை யெனுங்கொலங் கண்மல்குபூ
ணலருரத் தின்மத்த கத்துள வுஞ்சொலும் மவ்வண்ணமே.

(எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)
புளிமா தேமா தேமா தேமா புளிமா தேமா கூவிளம்

செலவு திப்பில் கந்த வண்ணல் சிலம்ப ருஞ்செல் வத்தரேய்
நலவ டிக்கண் மன்னு மெங்க ணலங்கொ னென்றுள் விம்முமா
விலக ரைக்கண் மன்ன னெய்தை யெனுங்கொ லங்கண் மல்குபூ
ணலருரத்தின் மத்தகத்து ளவுஞ்சொ லும்மவ் வண்ணமே.

(தரவு கொச்சகக் கலிப்பா)

கருவிளங்காய் கூவிளங்காய் கருவிளங்காய் கூவிளம்
செலவுதிப்பில் கந்தவண்ணல் சிலம்பருஞ்செல் வத்தரேய்
நலவடிக்கண் மன்னுமெங்க ணலங்கொனென்றுள் விம்முமா
விலகரைக்கண் மன்னனெய்தை யெனுங்கொலங்கண் மல்குபூ
ணலருரத்தின் மத்தகத்து ளவுஞ்சொலும்மவ் வண்ணமே.

(கலிநிலைத் துறை)

செலவுதிப் பில்கந்த வண்ணல் சிலம்பருஞ் செல்வத்தரேய்
நலவடிக் கண்மன்னு மெங்க ணலங்கொனென் றுள்விம்முமா
விலகரைக் கண்மன்ன னெய்தை யெனுங்கொலங் கண்மல்குபூ
ணலருரத் தின்மத்த கத்து ளவுஞ்சொலும் மவ்வண்ணமே

(இ-ள்) இறத்தல் பிறத்தலில்லாத கந்தப்பெருமானது சிலம்பு முதலிய காலணிகள். அரிய செல்வர்கள் அடையத் தக்க நலத்தை புரியும் திருவடிக்கண் நிலைபெற்றிருக்கும். எங்கள் மேம்பாடு எத்தகையது என்று எண்ணுதல் செய்து ஒலிக்கும், பிரகாசிக்கின்ற திருவிடையிலே நிலைத்திருத்தல், பெருமையென்று பேசும், அவ்விடத்திற் பொருந்திய அரைப்பட்டிகை முதலிய இடையணிகள் பரந்த திருமார்பிலும் திருநெற்றியிலும் திருமுடியிலும் பொருந்திய ஆரம் பட்டம் கிரீட முதலியனவும் அவ்வகையே சொல்லா நிற்கும்.

4. (கட்டளைக் கலித்துறை)

வண்ணந் திகழுந் திருமால்வண் போதயன் வாழ்வினையா
டிண்ணங் கெழுசிங் கனையான்றின் றேனெனுஞ் சேயொளிர்கை
யண்ணம் பெறுவச் சிரம்வேலன் னோனரச் சாருயிரை
யுண்ணென் றிற்நன் றெனுமாலொண் டேவரு முட்குறவே

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

தேமா புளிமா புளிமா தேமா புளிமா புளிமா

வண்ணந் திகழுந் திருமால் வண்போ தயன்வாழ் வினையா
டிண்ணங் கெழுசிங் கனையான் றின்றே னெனுஞ்சே யொளிர்கை
யண்ணம் பெறுவச் சிரம்வே லன்னோ னரசா ருயிரை
யுண்ணென் றிறநன் றெனுமா லொண்டே வருமுட் குறவே

(கலி விருத்தம்)

தேமாங்கனி கூவிளங்காய் தேமாங்கனி கூவிளங்காய்

வண்ணந்திக ழுந்திருமால் வண்போதயன் வாழ்வினையா
டிண்ணங்கெழு சிங்கனையான் றின்றேனெனுஞ் சேயொளிர்கை
யண்ணம்பெறு வச்சிரம்வே லன்னோனர சாருயிரை
யுண்ணென்றிற நன்றெனுமா லொண்டேவரு முட்குறவே.

(கலிநிலைத்துறை)

தேமா புளிமாங்கனி தேமா கூவிளம் கூவிளங்காய்

வண்ணந் திகழுந்திரு மால்வண் போதயன் வாழ்வினையா
டிண்ணங் கெழுசிங்கனை யான்றின் றேனெனுஞ் சேயொளிர்கை
யண்ணம் பெறுவச்சிரம் வேலன் னோனர சாருயிரை
யுண்ணென் றிறநன்றெனு மாலொண் டேவரு முட்குறவே.

(இ-ள்) குமரக் கடவுளின் திருக்கரத்தில் பொருந்திய வச்சிராயுதமானது விண்ணவர்களும் நாணெய்துமாறு, திருமால் பிரமன் ஆகிய தேவர்களது வாழ்வினை ஆளுதல் புரிந்த சிங்கமுகாசுரனை யான் உயிர்பருகினேன் என்று கூறும் வேற்படையானது, அச்சிங்கமுகாசுரனது தலைவனாகிய சூரபன்மனது அரிய உயிரை உண்டனது வல்லமை சிறந்தது எனக் கூறா நிற்கும்.

5. (கட்டளைக் கலித்துறை)

குறமக டன்னகஞ் சேர்ந்தகொன் னேறு குகனயிலோன்
விறலரு ணன்கரப் பூஞ்செண்டம் மார்பு விரையணிபார்த்
தறவளை பன்னகம் போன்றதென் னென்ன வதுவெவிபோற்
சிறுகுற லென்னெனப் போகிலார்ப் புற்றசிவணியவே.

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

கருவிளம் கூவிளம் தேமா தேமா புளிமா புளிமா

குறமக டன்னகஞ் சேர்ந்த கொன்னே றுகுக னயிலோன்
விறலரு ணன்கரப் பூஞ்செண் டம்மார் புவிரை யணிபார்த்
தறவளை பன்னகம் போன்ற தென்னென் னவது வெவிபோற்
சிறுகுற லென்னெனப் போகி லார்ப்புற் றசிவ ணியவே.

(தரவு கொச்சகக் கலிப்பா)

கருவிளங்காய் புளிமாங்காய் தேமாங்காய் கருவிளங்காய்
குறமகடன் னகஞ்சேர்ந்த கொன்னேறு குகனயிலோன்
விறலருணன் கரப்பூஞ்செண் டம்மார்பு விரையணியார்த்
தறவளைபன் னகம்போன்ற தென்னென்ன வதுவெலிபோற்
சிறுகுறலென் னெனப்போகி லார்ப்புற்ற சிவணியவே.

(கலிநிலைத்துறை)

கருவிளம் தேமா தேமாங்காய் தேமாங்காய் கருவிளங்காய்
குறமக டன்ன கஞ்சேர்ந்த கொன்னேறு குகனயிலோன்
விறலரு ணன்க ரப்பூசெண் டம்மார்பு விரையணிபார்த்
தறவளை பன்ன கம்போன்ற தென்னென்ன வதுவெலிபோற்
சிறுகுற லென்னெ னப்போகி லார்ப்புற்ற சிவணியவே

(இ-ள்)

வள்ளிநாயகியாரது திருமாளிகையைச் சார்ந்த வேலாயுதனது வெற்றியை யருள்புரியும் திருக்கரத்திற் பொருந்திய மலர்ப் பந்தானது, அழகிய திருமார்பிலணியப் பெற்ற கடப்பமலர் மாலையை நோக்கி, நீ மிகுதியும் வளைந்து பாம்பினை யொத்திருத்தல் யாது காரணமென வினவ, அம்மலர்மாலை நீ எலியைப் போலக் குறுகியிருத்தல் யாது காரணமெனக் கடாவ, வள்ளிநாயகியாரது மாளிகையில் மலரும் பருவத்தனவாய்ப் பொருந்தியிருந்த அரும்புகள் நகையினைச் செய்தன (மலர்ந்தன).

அருமறையினிருதயத்துள்ளதாய் விசேட மங்கல மொழியாய் விளங்கும் 'சிவ' என்பதை முதற்கட்கொண்ட ''ஐந்தந்தாதி'' எனுமிந்நூல் - அந்தச் சிவவெனுஞ் சொல்லே யீற்றிலுற மண்டலித்து முடிக்கப்படுவதாயிற்று.

இவற்றினின்றுங் கட்டளைக் கலித்துறை வேறாகப் பகுபடுதலை யிதனோடுள்ள பிறிதுபடு பாட்டுப் பிரபந்தத்திற் காண்க.

# 12. சஷ்டி வகுப்பு

## குழிப்பு

(சந்தப் பேதம்—32)

தந்தன தனதன தானன தானன
தந்தன தனதன தானன தானன
தனதன தனதன தானனா -தன-
தனதன தனதன தானனா

தத்தத் தனதன தத்தத் தனதன
தத்தத் தனதன தத்தத் தனதன
தந்த தனதன தானனா-தன-
தந்த தனதன தானனா

தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தான தானன தானனா-தன-
தான தானன தானனா

தானன தானன தானன தானன
தானன தானன தானன தானன
தத்த தனத்தன தானனா-தன-
தத்த தனத்தன தானனா

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனந்த தானன தானனா -தன-
தனந்த தானன தானனா

---

1. பாம்பன் சுவாமிகள் பத்துப் பிரபந்தம்

தானதன தந்தனன தத்தான தானதன
தானதன தந்தனன தத்தான தானதன
தனதன தனதன தத்தனா -தன-
தனதன தனதன தத்தனா

தனனதன தனதத்த தனனந் தனத்தா
தனனதன தனதத்த தனனந் தனத்தா
தனனதனா தானதத்த தானனா -தன-
தனனதனா தானதத்த தானனா

தனனதன தத்தன தனனதன தாத்தன
தனனதன தத்தன தனனதன தாத்தன
தாந்தன தனதன தாந்தனா-தன-
தாந்தன தனதன தாந்தனா

தனன தனத்தன தாந்தன தந்தன
தனன தனத்தன தாந்தன தந்தன
தனன தனதன தந்தனா-தன-
தனன தனதன தந்தனா

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தனத்த தனதன தானனா -தன-
தனத்த தனதன தானனா

தாந்த தந்தன தாந்த தந்தன
தாந்த தந்தன தாந்த தந்தன
தனதன தனதன தந்தனா -தன-
தனதன தனதன தந்தனா

தந்தந் தந்தன தந்தந் தனதன
தந்தந் தந்தன தந்தந் தனதன
தனந்த தான தனாதனா -தன-
தனந்த தான தனாதனா

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தா தத்தா தானதனா-தன-
தத்தா தத்தா தானதனா

தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தத்ததன தந்ததன தத்ததன தந்ததன
தனதன தத்தன தாந்தனா-தன-
தனதன தத்தன தாந்தனா

தன்னன தத்தன தன்னன தத்தன
தன்னன தத்தன தன்னன தத்தன
தானனத் தானன தையனா-தன-
தானனத் தானன தையனா

தனதன தனத்ததன தனதன தனத்ததன
தனதன தனத்ததன தனதன தனத்ததன
தானன தனன தானதனா-தன-
தானன தனன தானதனா

அந்தரர் முனிவரர் நாகர்க டானவ
ரங்கெழு மநுடர்க ணாடொரு வாழ்வுள
வரனுதல் விழிவரு தூயனே-யுமை-
யவண்முலை யமுதுணும் வாயனே.

யத்தித் திருமுக நித்தற் கிளையவ
வப்புச் சுரநதி நச்சற் புதசுத
வண்டர் பதிபணி பாதனே-குண-
சந்த்ர னெனவரு நீதனே

பரத்த மலரினு நயத்த துகிரினு
மழுக்கி லழலினு மிகுத்த துவரொளி
ராக ஞானவி னோதனே-சிவ-
போக போதக நாதனே

யாசினி யாரறு மீன்மத லாய்தக
ராகிய வாகன மேறிய வானவ
வட்ட குணப்பர மேசனே-சிவ-
சித்தர் கணக்கிரு பேசனே

யளிபல குடையு மலங்க லோடெழி
லவிழ்மண முடைய கடம்பு மேபுனை
யகன்ற மார்புடை யாதியே-களி-
நிறைந்து ளோரடை சோதியே

யாடகந றும்பணிம ணிப்பூணெ லாமிளிர
வாசறுந டம்புரியி றைச்சிர றாமயிலி
னனுதின மமருமுன் மத்தனே-யர-
னொடுநவில் பிரணவ கத்தனே

யடலவுண குலமுற்று மழியும் படிக்கே
யசுரபதி வரையொத்த வுருவங் கிழித்தே
யவிரயிலார் நீடிருக்கை வீரனே-யென-
தளியகலா தூடிருக்கு நீரனே

யணிமதுகை யுற்றபல் பறவையர சாத்திரி
யதியுரமு டைக்கலு ழனைமுனிசெ மாப்புய
ராண்டலை யணைகொடி யாண்டவா-குடை-
தோன்றிட வசையொரு தாண்டவா

வகிலம் வழுத்தரு ளாஞ்சுர குஞ்சரி
யரிய கொடிச்சிய வாம்படி வந்திக
ழழக முருகர விந்தனே-குளிர்-
நயன வறுமுக கந்தனே

யாழி சங்கநி லாவுகை மாயனு
மாத ரஞ்செறி பாரதி நேயனு
மருக்க னொளியன மேனியே-யுள-
வுருத்தி ரனுநினை ஞானியே

யாம்ப ரம்பர வோஞ்சி தம்பர
வான்ற துங்கம னாம்பு யந்தனி
லமர்குக சரவண சம்புவே-சுப-
மழைதரு மருளெனு மம்புவே

யஞ்சஞ் சும்படி யுந்தும் பெரியவ
ரண்டுஞ் செந்திரு நின்றின் புதவிடு
மனந்த வேத விலாசனே-நனி
சிறந்த யோக வுலாசனே

யமுதம் விழைநல முடைய குறுமுனி
யதிக மகிழ்வுற வமுத வுரைநவி
லத்தா முப்போ தூறவியே-யுயர்
சத்தாசித்தா வீறிலியே

யற்றமறு கந்தகிரி யைக்கருது சிந்தையர
கத்துனித டிந்ததைய ளித்தருள வன்புசெயு
மகணித வற்புத சாந்தனே-பர-
சிவநிலை யைத்தரு சேந்தனே

யன்னையு மப்பனு மண்ணுக னிட்டனு
மண்ணனு மற்புறு செம்மலு மத்தனு
மாறெழுத் தானென வுள்ளியே-பல-
நூறெழுத் தார்கவி சொல்லியே

யலையுமெ னிணைப்பிலுள குருபர தமிழ்க்கலைஞ
ரவையிடை மணித்தவிசில் வதியொரு திருப்புலவ
வார்வொடு பொருநர் சூழ்பரனே-துடி
நாடக மதுசெய் மாசுரனே,

சுந்தர முறுகுற ணேரிசை காசறு
சிந்தியல் பலதொடை நாலடி கீரணை
தொகலறு சவலைக ளேகெடா-முத-
லுறுகவி யகவலி னேர்மைசேர்

சுத்தத் தொடர்புமி ரட்டைக் குறளிசை
துற்றத் தெகுள்கவி யற்றற் றமைவது
துண்டு படுகவி நாவிலே-யியை-
சந்த முளகவி நூலிலே

தொடுக்க வருதர வுகொச்ச கமடிகள்
சுருக்க மறவரு மியற்ற ரவிணைசி
லேயொர் தாழிசை தோல்களார்-பல-
வேயொர் தாழிசை மீறியே

சோர்வுமு றோர்கலி நேரிசை சேர்கலி
தூயசு வேதம தார்கலி சீறடி
துப்ப லையொத்துறு பாவரோ-நல-
கட்ட ளைபெற்றவோர் பாவரோ

தொனிமலி குறள டிவஞ்சி சீர்மிகு
தொடையடி யுளவொ ருவஞ்சி யேமரு
டொடர்ந்த பாவிரு பாதமே-யுள-
குறைந்த் தாழிசை நாதமே

தூவுடனி யங்குமொரு முத்தாள தாழிசைக
ளீரடிகொள் செந்துறைகண் முப்பாத மார்துறைக
டுரிசிறி ரிபதவி ருத்தமே-சது -
ரடியுடை யவெளிவி ருத்தமே

துறுமகவ லளவொத்து நிகழுஞ் சதுர்ச்சீர்
சிவணியிடு மொருமுப்ப தமுறுஞ் சிறப்பார்
தொடையுடையோர் தாழிசைச் சொலேறுபா-வக-
வலதிழியா நீடுறைச்சொ லார்வதே

தொடையொலி மிகுத்தெழு நெடிலடியின் மேற்படு
மகவலின் விருத்தமு மிருபதம றாத்தளை
தோன்றொரு திரிபத நான்குமா-முடி-
வாம்பத மிகுகலி சேர்ந்தசீர்

துதையு மிழிப்பிசை நான்கடி யைந்துசி
ருடைய நிலைத்துறை மேன்கணி தம்பெறு
துறைக ளளவடி நன்குமே-வுரை-
பலவு முறுகலி யந்தமே

தோன்மு ழங்கிரு சீரடி நாலினே
மூவி தங்கிள ரோர்பொருண் மீதினேர்
சுரக்கு மியல்புடை யேசிலா-நறி-
யவச்சி யிசையிரு சீரினே

தோங்க ளங்கமி னான்க ரும்பத
மோங்கு வஞ்சியை யேயந்தி டுந்துறை
துகளறு துழனிகொள் சிந்துசேர்-சது-
ரடியுடை யிறுதியு மின்சொலே

துன்றுஞ் சந்தநெ டுஞ்செங் கவிசது
ரங்கம் பொங்ககி பந்தந் திகிரிகள்
சுருங்கு பாநல வேகபா-தமு-
மிகுந்த பாவெழு கூறுசீர்

சுலவு சுழிகுள முரசி ரதகவி
சுடரு மயிலயில் வினவல் விடைபிறி
துப்பா நற்கான் மாறுதலே-கர-
வுப்பா லொற்றே மாதவுமா

சொற்சுவைகொள் பங்கிகள்ச துர்த்தமொர்த ரம்படுவி
கற்பநடை பங்கயமி னச்செயுள்கள் கொம்பிலது
சுகவித ழற்றது கூம்புபா-முர-
ணுறுபசு முத்திர நோன்பொடே

சொன்னவர் மெச்சிட மின்னுதி ருப்புகழ்
பன்னிய வற்கரு ளின்னமு தக்கட
றோன்மரைப் பூவுறை செல்வமா-மரு-
காவிருப் பாலென துள்ளுளே

தொடர்வெரு வறப்பெரிய வருள்புரி நினைப்பொடு
மறதியும்வி ளைக்குமிரு மலமத மறக்களை
சூர்தபு நினது சேணருளே-யுற-
வாகிட வருள்செ யாயினியே,

மந்திர விதிவழி பாறயிர் நீடுக
ரும்பிடை வருதெளி சாறிள நீர்நறு
மணமுள வுதகமெ லாமொரே-மன-
தொடுநல திருவபி டேகமே

மத்துப் பிரசமு மிட்டக் கனிகளு
மொட்பச் சுரபதி சிட்டிப் பவனரி
வஞ்ச மறுசிவ னாரெலா-மணி-
யொண்பொ டியெனபி டேகமே

வழுக்க ளறமிக விழைத்து ரியவுடை
யுடுத்து நவையற முறுக்கி யகனக
மார்பு நூலிட லேசெயா-விரை-
நாறு தேய்வைக ளேயிடா

மாலதி கூவிள நீபம சோகுக
லாரமி ராசிவ மாதிந றாமலர்
வைத்த புதுத்தொடை யேயிடா-வரி-
யட்ச தையிற்சில தூவியே

மருமலி புகைகளெழும்ப வேபணி
யெரிசுடர்பலவு மிலங்க வேபணி
வளர்ந்த வாழைப லாவிளா-வுதிர்-
குளஞ்சி மாதுளை கோளியே

மாவினிய முந்திரிபு ளிப்பேயி லாவதரி
யாசினிக ளின்கனிகு வித்தேயெ ளோடுபொரி
வடையுதி ரசமிடி யப்பமோ-தத-
மகவிலை யடையவல் பிட்டுமா

மதுரரச மருவுற்ற புனலின் றயிர்க்கூழ்
கடலைபல பயறுப்பொ டறுநன் சுவைச்சிர்
மலியநிலா வேறிகர்த்த பாகலே-யுப-
ரெகினமெலீ போலிருக்கு மோசையே

வரியவரை கத்தரி துவரைபுடல் பூச்சுணை
கொடிவெளரி கக்கரி யிவைகளது காய்த்திரள்
வான்படர் முனைவரும் வேண்டுமோர்-சுவை-
தேங்கிய பலமூலம் வாங்கியே

மலர நறுக்குபு மூண்டெரி யங்கியி
லுரிய குணப்பதம் வீங்கவ யர்ந்திறை
வதியி லெழுசிறு செம்புநா-லிலை-
யுளது பசளைபொ னொன்றுமோர்

வாட னந்திய கீடைகொய் கீரைசில்
கீரை தண்டுறு கீரைகள் யாவையும்
வதக்கி நயனுற மூடியே-யிலை-
யிருத்தி நறுவய லூரிலே

வாய்ந்த தண்புனல் பாய்ந்த பைம்பயி
ரீன்ற வின்சுவை யார்ந்த செஞ்சிறு
மணிமிள கிவிலையு யர்ந்தசீ-ரக-
வரிசிய டிசில்பணி யன்பிலா

வண்டன் சண்டனி டம்பன் கொலையினன்
வம்பன் றும்பின னெங்குந் திரிபவன்
மறங்கொ ளீனர்கள் காணொணா-வணம்-
வளைந்த சிரையு ளேயெலாம்

வரிசை நிரனிறை யிசையு மழகது
பெருகி யமர்வுற வடுவில் சுசியுடன்
வைத்தே நட்பா மேன்மனதோ-டுப-
டைத்தே நற்பா கேயிலையே

வட்டகையி னன்கமைய வைத்தமல கந்தமல
ரர்சனைபு ரிந்துபிர சித்தசிவ கொன்றலையில்
வகுளமு டித்தகசு ரேந்திரா-வடி-
யவர்கள்ப ழிச்சுபு ராந்தகா

வன்னியு மத்தமும் வெண்மைய ருக்கமு
மன்னுபு யச்சிவ னண்ணுமொ ருத்திகை
மாமணித் தீபகம் வல்லியே-விழி-
யாயிரக் கோபதி செல்வியே

வதுவைசெ யருட்குமர மறைபுகழ் பரப்பிரம
வெனநனி துதித்தெமிட ரிறவரு ளெனப்பணியு
மாதவர் தலைவ னேநயனே-படர்-
பாளித மணிய னாமயனே

இந்திர னலரயன் மாதவ னாதவ
னந்தக னறலிறை யீசனி சாபதி
யெரியிறை யளகையன் வாயுவீ-டுள-
நிருதிய றிவறவர் பூதரே

யிட்டக் கருடர்கள் சித்துப் புருடர்கள்
செச்சைக் கினரர ருத்தப் பணிமிலை
யிஞ்சை யுடையபி சாசர்வே-ணியர்
விஞ்சை யினரிசை பாடுவோ

ரியக்க ரிவர்பலர் விதித்த பணிசெய
வுடுக்கை திமிலைகள் பெருத்த பதலைக
ளேதி லாகுளி பேரிமா-முர-
சோடு தூரிய மாமுழா

வேணுடை யானகம் வானிடி போலீரை
யேதர வூதுபல் கோடுகள் காகள
மிக்கு மணிக்குழ லேழுகோ-லுள-
பொற்க லமெற்கிணி கோடியே

யிமிரொலி யிசைக டனந்த தானன
தனதன தனன தனந்த னாவெனு
மியம்ப லேதர வானளா-முரு-
விலங்கி யானைகள் கோடியே

யேசறுபெ ருங்கிரிக ளைத்தாவு தூசிமுது
கானதுவ ளைந்திரவ ணப்பேரு லாமிருக
மெழுசத மெழுதர மிக்கதீ-பிகை-
முழுமதி நிகர்குடை பிச்சமே

யிணைசிவிறி விரிவட்ட மெனுநெஞ் சரைத்தான்
வருகவென வசைபொற்கை புரையுங் கொடித்தே
ரிரிதலிலா வார்கஷைக்க ணேறுநீள்-கொடி-
சுழலருகா வேழிலக்க மாகவே

யிருபுறந டக்கவொர் பெரியதுச நாட்டிய
விரதமிசை யொப்பறு பவளமலை போற்படை
யேந்துபு வருபெரு வேந்தனே-கிரி-
சாய்ந்திட வயிலெறி காந்தனே

யிகலுந ருக்கெம னாந்தனி மந்திர
வினியவ ருக்கினி தாங்குண பஞ்சர
விமையர் களிகொள வென்றுளே-யெணி-
யவர்கள் புரிதரு மங்களா

வேம பந்தன பூடண சேமனே
நாகர் சிந்தையி லேயுள வீமனே
யிடுக்க ணறுதவ ராஜனே-மறை-
முடிக்கு ளுளபர தேஜனே

யேங்கெ னெஞ்சினை யாய்ந்தி டுந்தயை
சான்ற சம்ப்ரம பூஞ்ச தங்கைக
ளிலகிடு பதபர மண்டலா-பக-
லனையக னமகர குண்டலா

வெங்குந் தங்குவி சும்புஞ் சிறிதென
மிஞ்சொண் பண்பொடு நின்றெங் குநிகழு
மிரண்டி லேகவ னாதியே-கறை-
யிறந்த சாதம னாதியே

யிடரில் கலமுனி யுரிய சுகமுனி
யரைய முசுமுக னறிய பசுமுக
னிப்பார் மெச்சோர் கீரனுமே-னசை-
யுற்றோய் வற்றே சூழ்குரவா

வெட்டுமலை யுந்தகர வெற்றிமல ரங்கைகளி
லட்டகரி பந்தெனவெ டுத்தவிறல் பம்பிளைஞ
விரணிய வெற்பெனு மாண்புசால்-பொறை-
யதனைய சைத்ததி லேய்ந்தகோ

டென்னுமு கட்டினை விண்ணிலி றைத்தகை
மன்னவ வைப்பசி மன்னிடு சட்டியி
லேபுசிப் பார்திரு வுள்ளமே-யெனை-
யாதரித் தாளருள் வெள்ளமே

யெவையுமறிசித்துருவ மகுடமு டியுற்றவர்க
டொழுசடை முடித்திருவர் புரவல குணத்திரய
வேதமில் பெயர்க ளாயிரமே-யுள-
பாவகி துரியப ராபரமே

# 13. தங்க ஆனந்தக் களிப்பு

சுயமான தங்கமித் தங்கம்—சிவ
சுப்பிரமணிய மெனுந்தெய்வத் தங்கம்[1]

1. அந்தரர் வேண்டொரு தங்கம்-ஈறி
லறுசிக ரக்கிரி நின்றெழு தங்கம்
சுந்தர மாய்ச்சுடர் தங்கம்-உமை
துங்க மலர்க்கரந் தங்கொரு தங்கம் (சுயமான)

2. வேதத்தி லேயுள்ள தங்கம்-சுத்த
வித்தைசொல் லாகம நித்தியத் தங்கம்
நாதத்தின் மேலுள்ள தங்கம்-அந்த
நாதங் கடந்தபின் னாமடை தங்கம். (சுயமான)

3. பார்ப்பவர்க் கின்பு செய் தங்கம்-சிவ
பாக்கிய மெல்லாம் பகுக்கின்ற தங்கம்
சிர்ப்பர தத்துவத் தங்கம்-நிறை
சிற்பர தேஜோ மயானந்தத் தங்கம் (சுயமான)

4. நினைப்பவர்க் கின்புசெய் தங்கம்-தொண்டர்
நெஞ்செனும் பேழையி லேநிறை தங்கம்
வினைப்பவம் வெல்பசுந் தங்கம்-ஞான
விளைவற்ற பூமியிற் புதைபட்ட தங்கம் (சுயமான)

5. வாதிகட் கெட்டாத தங்கம்-அன்பு
வறண்டலை வோரறி யாவருந் தங்கம்
தீதிகற் குள்களை தங்கம்-தவச்
செல்வர்க்குச் செல்வம தாந்திருத் தங்கம் (சுயமான)

---

1. பாம்பன் சுவாமிகள். பத்துப் பிரபந்தம்

6. அஞ்சனத் தெட்டாத தங்கம்-பத்தி
யஞ்சனத் தேயெட்டு மற்புதத் தங்கம்
செஞ்சயத் தைத்தரு தங்கம்-சிவ
சித்தர்கள் யோகிகண் மெச்சிடு தங்கம் (சுயமான)

7. மாற்றி லுயர்ந்தொளிர் தங்கம்-எல்லா
மங்கும் படிக்கருள் செய்தனித் தங்கம்
ஆற்றலின் மேம்படு தங்கம்-பகி
ரண்டமெல் லாம்விலை கொண்டுயர் தங்கம் (சுயமான)

8. அளவைக் கடங்காத தங்கம்-தின
மனலிட் டுருக்கினு முருகாத தங்கம்
களவுக் கிணங்காத தங்கம்-தன்னைக்
காமுறு வார்மிடி தீர்க்கின்ற தங்கம்.(சுயமான)

9. யாதனை யைத்தெறு தங்கம்-தெய்வ
யானை விழிக்கித மாயவிர் தங்கம்
ஏதனை யாநறுந் தங்கம்-எழி
லேனலி னோர்கொடி தான்படர் தங்கம் (சுயமான)

10. ஞானவின் ணாகின்ற தங்கம்-நல
நல்குந் திருப்புக ழோன்கண்ட தங்கம்
வானவர் மாமுடித் தங்கம்
வாழ்விக்க வந்த பராபரத் தங்கம்.(சுயமான)

# 14. அனவரத பாராயணாட்டகம்

கலிவிருத்தம்-பண்-முதிர் குறிஞ்சி

1. மன்றெனும் பதியுறை மழவிப முகவனு
நன்றெனும் பிரணவ வவனிளை ஞனுமறை
தொன்றெனும் பொருளெனச் சுடர்சிவ னுமுமை
மொன்றெனும் பெரியவ ருயர்பதம் பணிவேன்.

2. அள்ளுலை யாப்படை யறுமுக வனுமனந்
துள்ளுலை வோட்டுதண் சுடரணி பரமனும்
வள்ளுலை யாக்கிரி மகளுமைங் கரனுமெ
னுள்ளுலை யாப்பொரு ளொன்றெனத் தொழுதேன்

3. ஆதித்தன் மதியன லாகுமுந் நயனனஞ்
சோதித்தண் முகவுமை தோமினலங் கரன்முரண்
காதித்தன் களிதரு கடம்பனென் றெனுநிச
மோதித்தண் ணளிமிக வுறுதுயர் களைவேன்

4. மயல்களை சிவையையு மதகரி முகனையு
மயல்களை யயிலர சனையுமொன் னலர்கடம்
மியல்களை சிவனையு மொருபொரு ளெனினிடர்ப்
புயல்களை யருளுறு மெனநனி புகழ்வேன்.

5. மாலொடு விதியறி யாதசெம் மரைமலர்க்
காலொடு நவிரமு மாரிறை களியுமை
வேலொடு வருகுக வேள்முக பமுகன்மெய்
வாலொடு மிளிரறி வினிதெ னமகிழ்வேன்

---

6. திருவருள் புரியுமைங் கிலீந்திரி புரைபரை
குருவருள் புரிசௌங் கிரீஞ்சிவை குகனிட
ரொருவருள் புரிபத விநாயக னுயர்சிவ
னருவருள் புரிபதி யாயெனைக் காக்க

7. வாணுதன் மடப்பிடி மலைப்புன மானலம்
பேணுதல் விழிச்சர வணபவப் பெருந்தகை
மாணுத னயனகங் கணபதி வளரனல்
காணுத லரனுமை யருளெனைக் காக்க

8. பாமகண் மறைபுக ழோங்கண பதியெழிற்
சீமக ணனிபுக ழோநமச் சிவாயவை
பூமகள் புகழுமை பூம்புகழ்க் கவியிறை
யேமக னவருள் காத்தருள் கெனையே.

பின்னிணைப்பு: 1

# இலக்கண நூல்கள் கூறும் சித்திரக் கவிகள்

| வரிசை எண் | பெயர் | யாப்பருங்கலம் (கி.பி. 10) | வீரசோழியம் (கி.பி. 11) | தண்டியலங்காரம் (கி.பி. 12) | மாறனலங்காரம் (கி.பி. 16) | இலக்கண விளக்கம் (கி.பி. 17) | (கி.பி. 19) | சுவாமிநாதம் (கி.பி. 19) | குவலயானந்தம் (கி.பி. 20) |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | மாலை மாற்று | x | x | x | x | x | x | x | x |
| 2. | சக்கரம் | x | x | x | x | x | ... | x | x |
| 3. | சுழிகுளம் | x | x | x | x | x | ... | x | x |
| 4. | ஏக பாதம் | x | x | ... | ... | ... | ... | ... | x |
| 5. | எழுகூற்றிருக்கை | x | ... | ... | x | ... | ... | ... | x |
| 6. | காதை கரப்பு | x | x | x | x | x | x | x | x |
| 7. | கரந்துறைப்பாட்டு | x | ... | x | x | x | x | x | x |
| 8. | தூசங்கொளல் | x | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 9. | வாவனாற்றி | x | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 10. | கூடசதுர்த்தம் | x | ... | x | x | x | ... | x | x |
| 11. | கோமூத்திரி | x | x | x | x | x | ... | x | x |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 12. ஓரினப்பாட்டு | x | x | ... | ... | ... | ... | ... | x |
| 13. ஓரெழுத்துப்பாட்டு | x | x | ... | ... | ... | ... | ... | x |
| 14. பாத மயக்கு | x | ... | ... | ... | ... | ... | ... | x |
| 15. பாவின்:புணர்ப்பு | x | ... | ... | ... | ... | ... | ... | x |
| 16. ஒற்றுப் பெயர்த்தல் | x | ... | x (உரை) | ... | x | x | x | ... |
| 17. ஒரு பொருட்பாட்டு | x | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 18. சித்திரப்பா | x | ... | ... | ... | ... | ... | ... | x |
| 19. விசித்திரப்பா | x | ... | ... | ... | ... | ... | — | ... |
| 20. விகற்பநடைய வினாவுத்தரம் | x | x | x | x | x | x | x | x |
| 21. சருப்பதோ பத்திரம் | x | ... | x | x | x | ... | x | x |
| 22. எழுத்து வருத்தனம் | x | ... | x | x | x | x | x | x |
| 23. பிந்துமதி | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 24. பிரேளிகை | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 25. அலகிருக்கைவெண்பா | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 26. முண்டப்பாட்டு | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 27. தேர்கை | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 28. கண்டகட்டு | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 29. கல்லவல் | x (உரை) | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 30. நாகபந்தம் | ... | ... | x | x | x | ... | x | ... |
| 31. வல்லினப் பாட்டு | ... | ... | ... | x | ... | ... | ... | ... |
| 32. மெல்லினப் பாட்டு | ... | ... | ... | x | ... | ... | ... | ... |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 33. | இடையினப் பாட்டு | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 34. | நிரோட்டியம் | X (உரை) | X (உரை) | X | X | X | X | X | ... |
| 35. | ஒட்டியம் | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 36. | ஒட்டிய நிரோட்டியம் | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 37. | அக்கரச் சுதகம் | X (உரை) | ... | X | X | X | X | X | ... |
| 38. | வக்கிரவுத்தி | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 39. | பதும பந்தம் | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 40. | முரச பந்தம் | ... | ... | X (உரை) | X | X | ... | X | ... |
| 41. | இரத பந்தம் | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 42. | பிரிந்தெதிர் செய்யுள் | ... | ... | ... | X | ... | ... | ... | ... |
| 43. | பிறிதுபடு பாட்டு | ... | ... | X (உரை) | X | ... | ... | ... | ... |
| 44. | திரிபங்கி | ... | ... | X (உரை) | X | X | X | X | ... |
| 45. | திரிபாகி | X (உரை) | ... | X (உரை) | ... | X | X | X | ... |
| 46. | மாத்திரைச் சுருக்கம் | X (உரை) | ... | X (உரை) | ... | X | X | X | ... |
| 47. | மாத்திரைவருத்தனம் | ... | ... | X (உரை) | ... | X | X | X | ... |
| 48. | சதுரங்கம் | ... | ... | ... | ... | ... | ... | X | ... |
| 49. | கடக பந்தம் | ... | ... | ... | ... | ... | ... | X | ... |
| 50. | தேர்க்கவி | ... | ... | ... | ... | ... | ... | X | ... |

X இக்குறி இருப்பதையும்

... இக்குறி இல்லாததையும் குறிக்கும்

பின்னிணைப்பு:2

# சித்திரக்கவி வகைகள்

## (இலக்கண நூல்கள் கூறுவன)

1. அக்கரச் சுதகம்
2. அலகிருக்கை வெண்பா
3. இடையினப்பாட்டு
4. இரத பந்தம்
5. எழுகூற்றிருக்கை
6. எழுத்து வருத்தனம்
7. ஏக பாதம்
8. ஒரு பொருட்பாட்டு
9. ஒற்றுப்பெயர்த்தல்
10. ஓட்டிய நிரோட்டியம்
11. ஓட்டியம்
12. ஓரினப்பாட்டு
13. ஓரெழுத்துப்பாட்டு
14. கடகபந்தம்
15. கண்டகட்டு
16. கரந்துறைப்பாட்டு
17. கல்லவல்
18. காதை கரப்பு
19. கூட சதுர்த்தம்
20. கோமூத்திரி
21. சக்கரம்
22. சதுரங்கம்
23. சருப்பதோ பத்திரம்
24. சித்திரப்பா
25. சுழிகுளம்
26. திரிபங்கி
27. திரிபாகி
28. தூசங்கொளல்
29. தேர்க்கவி
30. தேர்கை
31. நாகபந்தம்
32. நிரோட்டியம்
33. பதும பந்தம்
34. பாத மயக்கு
35. பாவின் புணர்ப்பு
36. பிந்துமதி
37. பிரிந்தெதிர் செய்யுள்
38. பிரேளிகை
39. பிறிதுபடுபாட்டு
40. மாத்திரைச் சுருக்கம்
41. மாத்திரை வருத்தனம்
42. மாலை மாற்று
43. மூண்டப்பாட்டு
44. முரச பந்தம்
45. மெல்லினப்பாட்டு
46. வக்கிரவுத்தி
47. வல்லினப்பாட்டு
48. வாவனாற்றி
49. விசித்திரப்பா
50. வினாவுத்தரம்

# புதியன

## (இலக்கியங்கள் கூறுவன)

1. அசுவபாத பந்தம்
2. அந்தாதித் தொடைக் கமல பந்தம், திரிபங்கி
3. அறுமீன் பந்தனம்
4. ஆனையடிச் சதுரங்க பந்தனம்
5. உபயநாக பந்தம்
6. உருத்திராக்க கண்டிகா பந்தனம்
7. எண் கூற்றிருக்கை
8. ஏக நாக பந்தம்
9. ஏகபாத மாலைமாற்று.
10. ஒருபது கூற்றிருக்கை
11. கச பந்தம்
12. கொம்பில்லா வெண்பா
13. சங்க பந்தனம்
14. சடாக்கர பந்தனம்.
15. சத்த பங்கி
16. சதுரங்க அசுவகதி பந்தம்
17. சதுரங்க கதிதுரக பந்தம்
18. சதுரங்க பந்தம்
19. சதுரநாக பந்தம்
20. சஸ்திர பந்தம்
21. சிவலிங்க பந்தம்
22. சொக்கட்டான் பந்தனம்
23. சோடச பங்கி
24. தசாங்கக் கூற்றிருக்கை
25. தமருக பந்தம் (உடுக்கை பந்தம்)
26. திருக்கைப் பந்தம்
27. திருவடிப் பந்தம்
28. துவிநாக பந்தம்
29. நடுவெழுத்தலங்காரம்
30. நவபங்கி
31. நாற்கூற்றிருக்கை
32. பஞ்சபங்கி
33. பிறிதுபடு திரிபங்கி
34. பிறிதுபடு துவிதபங்கி
35. பிறிதுபடு பாட்டுப்பிர பந்தம்
36. மத்தள பந்தம் (முரச பந்தம்)
37. மயில் வாகனப்பந்தம்
38. மயூரபந்தம் (மயில்பந்தம்)
39. மலைப்பந்தம்
40. மாணிக்க மாலைப்பந்தம்
41. மாலைமாற்று மாலை ஏகபாதம்
42. மும்மண்டல வெண்பா
43. மும்மீன் பந்தனம்
44. விசித்திர அகவல்
45. விருச்சிக பந்தம்
46. வில்வதள பந்தம்
47. விளக்குப்பந்தம்
48. வேலாயுத பந்தம்

பின்னிணைப்பு : 3

# சித்திரக்கவிகள் அடங்கிய தனி நூல்கள்

1. அக்கர வர்க்கப்பல்சந்தமாலை—கு.மீனாட்சிசுந்தரமுதலியார்
2. அசுவபாத பந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
3. அட்டநாக பந்தம்—கு மீனாட்சிசுந்தர முதலியார்
4. அம்பிகை எழுகூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
5. இரத பந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
6. உபயநாக பந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
7. எண் கூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
8. எழு கூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
9. ஏகநாக பந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
10. ஏகபாத நூற்றந்தாதி—அரசஞ் சண்முகனார்
11. ஓவியச் செய்யுள்—சங்கரமூர்த்திக் கவிராயர்
12. கசபந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
13. கடக பந்தம் கு. மீனாட்சிசுந்தர முதலியார்
14. கந்தன் சித்திர பந்தன மாலை—கோயமுத்தூர் செட்டி பாளையம் ஆர்.என். கல்யாணசுந்தரக் கவுண்டர்(1932)
15. கமலபந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
16. கொம்பில்லா வெண்பா—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
17. கோமூத்திரிகா பந்தம் கு. மீனாட்சிசுந்தர முதலியார்
18. சமரசத்தசாங்கக் கூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
19. சித்திரக்கவி—பாலகிருட்டிண கவிராயர் (1880)
20. சித்திரகவி—காஞ்சிபுரம் கு. கந்தசாமிப்பிள்ளை
21. சித்திரகவி—நா.க.உ. கல்விக்களஞ்சியப் புலவர் (1888)
22. சித்திரகவிகள்--சித்திரகவிப் புலவர் திருமலை சக்கையா கவுடர்
23. சித்திர கவிகள்—எம். முத்துசாமிப்பிள்ளை (1860)
24. சித்திரகவி பலபாடல் திரட்டு—எம்.எஸ். துரைசாமிப்பிள்ளை
25. சித்திரக்கவி முதலிய பலபாடற்றிரட்டு—அப்துல் காதிர் நாயனார் (1896)
26. சித்திரக்கவிப் புஞ்சம்—மதுரகவிப் புலவர் கபாலமூர்த்திப் பிள்ளை (1902)

27. சித்திர்கவி மாலை—அப்துல் கபூர்சாகிப் (1956)
28. சித்திரகவி மாலை—அப்துல் கபூர் சாகிப் (1969)
29. சித்திர யமகவந்தாதி—தொழுவூர் வேலாயுத முதலியார் (1832—1889)
30. சிவபெருமான் ஒன்பது கூற்றிருக்கை--தண்டபாணி சுவாமிகள்
31. சோடசபங்கியும் இரட்டைநாக பந்தமும்—திரு. காமு செட்டியார் (1888)
32. திருக்கச்சி நெறிக்காரைக்காடு நிரோட்டகம் — மோசூர் க. முனிசாமி முதலியார்
33. திருமால் எழுகூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
34. திருவாடானைச் சித்திரக் கவியலங்காரம்—இரண்டாவது சர்க்கரைப் புலவர்
35. திருவல்லிக்கேணி எழுகூற்றிருக்கை—தண்டபாணிசுவாமிகள்
36. நெல்லை நாயகி நிரோட்டக மாலை—உமையாள்புரம் உ.ரா. சாமிநாதப் பிள்ளை
37. புட்பமாலிகா பந்தம்—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
38. மயிலஞ் சுப்பிரமணியர் நிரோட்டக வெண்பா—புதுப் பாளையம் பு.அ. பெரியசாமிப் பிள்ளை
39. மாலை மாற்று—சங்கரமூர்த்திக் கவிராயர்
40. மாலை மாற்று—சித்திரகவிப் புலவர் திருமலை சக்கையா கவுடர்
41. மாலை மாற்று—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
42. மாலை மாற்று ஏகபாதம்—தண்டபாணி சுவாமிகள் (1879)
43. மாலை மாற்று மாலை—சோழவந்தான் அ. சண்முகம் பிள்ளை(1903)
44. மும்மண்டல வெண்பா—கு. மீனாட்சிசுந்தர முதலியார்
45. முருகர் சித்திர வெண்பா மாலை—காஞ்சிபுரம் கு. கந்தசாமிப் பிள்ளை
46. விநாயகர் எழுகூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்
47. விஷ்ணுபுரம் விஷ்ணு ஒருபது கூற்றிருக்கை—தண்டபாணி சுவாமிகள்

பின்னிணைப்பு: 4

# சித்திரக்கவிகள் பாடியுள்ள புலவர்கள்

1. அப்துல் கபூர்சாகிப் பி.வி. (20ஆம் நூ)
2. அப்துல் காதிர் நாயனார் (1896)
3. அப்துல் காதிர் புலவர் (1866—1918)
4. அரசஞ் சண்முகனார், சோழவந்தான், (1868—1915)
5. அருணகிரிநாதர் (15ஆம் நூ)
6. ஆறுமுகம் தி.சு. (கவிஞர் சிவதாசன்) (20ஆம் நூ)
7. இரண்டாவது சர்க்கரைப் புலவர்
8. இரகுநாதையர், சிரவணபுரம், (1932)
9. இராமச்சந்திரக் கவிராயர் (19ஆம் நூ)
10. இராமலிங்கக் கவிராயர், பொ.மீ., மதுரை (20ஆம் நூ)
11. இராமானுச தமிழ்ப் பண்டிதர், கூத்திப்பாறை (20ஆம் நூ)
12. இராமையா முதலியார், மு., திருத்தருப்பூண்டி
13. இலட்சுமண பாரதியார், தே., மடாவளகம் கொங்குநாடு (1767—1859)
14. கந்தசாமி சுவாமிகள், சிரவணபுரம் கௌமார மடாலயம் (1932)
15. கந்தசாமிப் பிள்ளை. கு (1850—1920)
16. கபாலமூர்த்திப் பிள்ளை (1902)
17. கல்விக் களஞ்சியப் புலவர், நா.க.உ. (1888)
18. கல்யாணசுந்தரக் கவுண்டர், ஆர்.என். கோயமுத்தூர் (1932)
19. பூவை கல்யாணசுந்தர முதலியார் (20ஆம் நூ)
20. காமு செட்டியார் (1888)
21. காளமேகம் (15ஆம் நூ)
22. கிருஷ்ணசாமிக் கவுண்டார், ரா. சிரவணபுரம் (1932)
23. குப்புசாமி அய்யர், எஸ். மழையூர்
24. குமரகுருதாச சுவாமிகள் (பாம்பன்) (20ஆம் நூ)
25. குலாம்காதிறு நாவலர் (1893)
26. கோதண்டராமன், மு. (பாலகவி) சென்னை (20ஆம் நூ)
27. சங்கரமூர்த்திக் கவிராயர், இராசபாளையம் (1810)
28. சண்முகப் பண்டாரம், மு.
29. சாமிநாதப் பிள்ளை உ.ரா. உமையாள்புரம் (1884—1958)
30. சிவசாமி சேர்வை, பி. இராமநாதபுரம்

31. சிவஞான முனிவர் (1785)
32. சிவானந்த சுவாமிகள், இளையான்குடி
33. சுப்பிரமணிய ஐயர். தஞ்சை (1850)
34. சுப்பையா நாயுடு, (20ஆம் நூ)
35. சூரியநாராயண சாஸ்திரி, வி.கோ. (20ம் நூ)
36. சேகனாப்புலவர் (15ஆம் நூ)
37. சையது இமாம்பாவல் (19ஆம் நூ)
38. தண்டபாணி சுவாமிகள் (1 839—1898)
39. திருஞானசம்பந்தர் (7ஆம் நூ)
40. திருமங்கையாழ்வார் (9ஆம் நூ)
41. திருமலை சக்கையாகவுடர் (1846—1917)
42. திருமலைவேற் கவிராயர், எட்டிசேரி
43. துரைசாமிப்பிள்ளை, சா.செ., கோலார் (20ஆம் நூ)
44 துரைசாமிப்பிள்ளை, டி.எம்., தஞ்சை (20ஆம் நூ)
45. துரைசாமிப் பிள்ளை எம். எஸ்., சென்னை
46. தேவி காமாட்சிதாசன் (20ஆம் நூ)
47. நக்கீரர் (பதினோராம் திருமுறை)
48. நாதமுனிப்பிள்ளை கு. செய்யாறு, (1857—1926)
49. நாராயணசாமி நாயகர் (சிங்கப்பூர்ச்சித்திரகவி நாவலர்)
50. நாராயணசாமி நாயுடு, பி.பி. சிந்துபூந்துறை
51. நாராயணசாமிப் பிள்ளை, வே.கி., இராயவேலூர் (19ம் நூ)
52. பாலகிருட்டிணக் கவிராயர் (1880)
53. பெரியசாமிப் பிள்ளை, பு.அ., புதுப்பாளையம் (1843-1920)
54. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (மகாவித்துவான்) (19ஆம் நூ)
55. மீனாட்சிசுந்தர முதலியார். கு. (19ஆம் நூ)
56. முத்துசாமிப் பிள்ளை (1904)
57. முத்துசாமிப் பிள்ளை, எம்., இராமநாதபுரம் (1860)
58. முருகேச பண்டிதர் (யாழ்ப்பாணம்)
59. முனிசாமி முதலியார், மோசூர் (1900)
60. வேலாயுத முதலியார், தொழூவூர் (1832—1889)
61. விவேகானந்தன், இராசபாளையம் (20ஆம் நூ)
62. வைத்தியநாதசர்மா. இராம.. தஞ்சை
63. வைத்தியநாதய்யர், விகடகவி, பூதூர்

# உதாரணச் செய்யுள் முதற்குறிப்பு

(எண்: பக்கஎண்)

# அருஞ்சொற்கள்

(எண்: பக்க எண்)

# பயன்பட்ட நூல்கள்


1. அபிதான சிந்தாமணி—ஆ. சிங்காரவேலு முதலியார், ஏசியன் எடுகேஷனல் சர்வீஸஸ். சி. 21/5 எஸ். டி. ஏ., புதுதில்லி 110016.
2. அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் இயற்றிய தனிப்பாடல் திரட்டு—திருவாமாத்தூர் கௌமார சபை. பதிப்பு எண்:100 1970
3. அழகுக்கலைத்திறன்—செ. வைத்தியலிங்கன், செல்லமுத்தகம் வெளியீடு—1970
4. இலக்கணத்தொகை—யாப்பு பாட்டியல்: டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், பதிப்பாசிரியர், தமிழ்ப்பதிப்பகம். சென்னை
5. இலக்கண விளக்கம்—பொருளதிகாரம். அணியியல். தஞ்சை சரசுவதிமகால் வெளியீடு-148. 1973
6. இலக்கியத்திறன் — டாக்டர். மு. வரதராசனார். பாரி நிலையம்.
7. உவமான சங்கிரகம்—அணியிலக்கண ஆராய்ச்சி. டாக்டர். இ. சுந்தரமூர்த்தி, தமிழ்ப்புத்தகாலயம். 1981
8. கந்தன் சித்திரபந்தன மாலையும், படை வீடாறுக்கும் முற்றுமோனை யமக வெண்பாவும்—ஆர். என். கல்யாண சுந்தர கவுண்டர். 1932
9. கழகத்தமிழ் அகராதி.
10. காஞ்சிப்புராணம்—சிவஞான முனிவர்.
11. காமாட்சி அம்மன் அந்தாதி—தேவி காமாட்சிதாசன். 1964.
12. குறுக்குத்துறைக் கலம்பகம்—தி. க. ஆறுமுகம் (கவிஞர் சிவதாசன்) 1973
13. குவலயானந்தம் சந்திராலோகம்—டாக்டர். ச. வே. சுப்பிர மணியன், தமிழ்ப் பதிப்பகம். சென்னை. 1979
14. கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் இயற்றிய பிரபந் தங்கள். 1932
15. சங்க இலக்கியங்கள்—இராசம் பதிப்புகள்.
16. சங்க இலக்கிய ஒப்பீடு 1, 2—டாக்டர். இராம. பெரிய கருப்பன். மீனாட்சி புத்தக நிலையம். 1979.
17. சதுரகராதி—வீரமாமுனிவர். ஆய்வுக்கழக வெளியீடு. 1979.

18. சந்திராலோகம்—செந்தமிழ்ப்பிரசுரம்-1909
19. சப்த ரச மஞ்சரி—காளையார் கோவில் மடம்.
20. சித்ர சங்கீதம்—இராஜம்மாள் விஜயராகவன். தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின் பொருள் உதவியால் வெளியிடப் பட்டது. 1970
21. சித்திரகவி மாலை—பி.வி. அப்துல்கபூர்சாகிப்.
22. சித்திரகவி மாலை—பி. வி. அப்துல்கபூர் சாகிப் ஔவையகம் வெளியீடு 1956.
23. சித்திரகவி விளக்கம்—வி. கோ சூரிய நாராயணசாஸ்திரியார். ந. பலராம ஐயர் உரையுடன் 1939
24. சித்தாந்தம்—ஜூலை 1970
25. சிலப்பதிகாரம்—உ. வே.சா. பதிப்பு, சென்னை-1978
26. சிற்றிலக்கியத்திறனாய்வு—டாக்டர் ந. வீ. செயராமன். இலக்கியப்பதிப்பகம்—1980
27. சீவகசிந்தாமணி—உ. வே. சா. நூல்நிலைய வெளியீடு.
28. சுவாமிநாதம்—அண்ணாமலைப் பல்கலைக்கழகம். 1975
29. சேந்தன் திவாகரம்
30. தண்டியலங்காரம்—சுப்பிரமணிய தேசிகர் உரையுடன். கழக வெளியீடு 1947
31. தமிழ் ஆங்கில அகராதி—தென்னிந்தியத் தமிழ்ச் சங்க வெளியீடு,
32. தமிழ் இலக்கிய அகராதி—ந. சி. கந்தையபிள்ளை 1960
33. தமிழ் இலக்கியக்கொள்கை—2. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியீடு. சென்னை 1977
34. தமிழ் இலக்கியக்கொள்கை-5-உலகத்தமிழாராய்சி நிறுவனம் வெளியீடு-சென்னை1980
35. தமிழ் இலக்கியக் கொள்கை—7—உலகத்தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு-1982.
36. தமிழ் இலக்கிய வரலாறு (10-16ஆம் நூ) மு. அருணாசலம் காந்தி வித்யாலயம்.
37. தமிழ் இலக்கிய வரலாறு—டாக்டர். மு. வரதராசனார். சாகித்ய அகடாமி. 1932
38. தமிழ் இலக்கிய வரலாறு—டாக்டர். சி. பாலசுப்பிரமணியன் பாரிநிலையம். சென்னை. 1969.

39. தமிழ்க்காப்பியங்கள் —கி. வா. ஜெகன்னாதன். அமுத நிலையம். சென்னை.
40. தமிழ்நூல் வரலாறு - பாலூர் கண்ணப்பமுதலியார். ஆசிரியர் நூற்பதிப்புக்கழகம். 1962
41. தமிழ் நூல் விவர அட்டவணை 1-2—தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு. 1961-1965
42. தமிழ்ப்புலவர் வரிசை (1-3) கழக வெளியீடு
43. தமிழ்ப்பேழை—டாக்டர் ஆறு. அழகப்பன் பதிப்பாசிரியர். தமிழ்ச்சுரங்கம், 49 தெற்கு ஆவணி மூலவீதி மதுரை-1
44. தமிழ் லெக்சிகன்.
45. தமிழ் விடுதூது—உ. வே. சாமிநாதையர் பதிப்பு. 1966.
46. தமிழர் வளர்த்த அழகுக்கலைகள்—மயிலை. சீனி. வேங்கடசாமி. பாரிநிலையம். 1699.
47. தனிப்பாடல் திரட்டு—முதற்பகுதி. பூம்புகார் பிரசுரம் சென்னை. 1977
48. தனிப்பாடற்றிரட்டு—இரண்டாம் பாகம். வித்தியாரத் நாகர அச்சுக்கூடம், சென்னை. 1921
49. திரு அம்பர்ப்புராணம்—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை. டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடு. 1965
50. திரு எழுகூற்றிருக்கை—சி. ஜெகந்நாதாசாரியார் உரையுடன் அருள்மிகு அருணாசலேச்வரர் திருக்கோயில், திருவண்ணாமலை வெளியீடு-1982
51. திருஞான சம்பந்தர் தேவாரம். காசி மடம் வெளியீடு.
52. திருக்குறள்—பரிமேலழகர் உரை, பாரதி பதிப்பகம், சென்னை-17. 1966
53. திருக்குறள் அணிநலம் — இ. சுந்தரமூர்த்தி, சென்னைப் பல்கலைக்கழகம். 1973.
54. திருப்போரூர் முருகன் சன்னிதிமுறை—சிதம்பர சுவாமிகள்.
55. திருவலங்கற்றிரட்டு—பாம்பன் குமாரசுவாமிகள். 1929.
56. தொல்காப்பியம்—கழக வெளியீடு.
57. தொன்னூல் விளக்கம் — வீரமாமுனிவர். கனம். ஜி. மெக்கன்ஜி காபன் அய்யர் பதிப்பு. சென்னை-1891
58. தோத்திரப் பாடற்றிரட்டு—கும்பகோணம் பதார்த்தவ சனீபிரஸ் 1933.

59. நவநீதப்பாட்டியல்--உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு. சென்னை 20. 1961
60. நன்னூல் விருத்தியுரை. பாரிநிலையம். சென்னை-1, 1971
61. நாகூர்ப்புராணம்—குலாம் காதிறு நாவலர். சௌத்இந்தியா டைம்ஸ்பிரஸ். 1893
62. நுண்கலைகள்—மயிலை. சீனி. வேங்கடசாமி. மணிவாசகர் நூலகம். 1922.
63. பத்துப்பிரபந்தம்--பாம்பன் குமரகுருதாச சுவாமிகள். 1907.
64. பலர்செய் கவிகள்-1868
65. பலபாடற்றிரட்டு (முதல் பாகம்)-வித்தியாவர்த்தனி அச்சுக் கூடம் 1881
66. பாரதியார் பாடல்கள் சக்தி காரியாலயம்.
67. பிரபந்தத்திரட்டு--டாக்டர் அன்னிதாமசு பதிப்பாசிரியர். உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் சென்னை. 1980
68. பிரபந்த தீபம்--டாக்டர். ச. வே. சுப்பிரமணியன். பதிப் பாசிரியர். தமிழ்பதிப்பகம். சென்னை. 1980
69. பெருங்கதை--உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு.
70. பேரகத்தியத்திரட்டு--எஸ். பி. ஸி. கே. அச்சுக்கூடம் 1912.
71. மதுரைத் தமிழ்ப்பேரகராதி--1956
72. மறைந்துபோன தமிழ் நூல்கள்--மயிலை. சீனி. வேங்கட சாமி. பாரிநிலையம். 1959.
73. மணிமேகலை. பாரி நிலையம். சென்னை.
74. மாலை மாற்று மாலை--சோழவந்தான் அரசஞ்சண்முகனார் ஸ்ரீலஸ்ரீ சிவபிரகாச சுவாமிகள் திருமடம் வெளியீடு. சோழ வந்தான். 624214-1981
75. மாறன் அலங்காரம்--செந்தமிழ்ப் பிரசுரம். 1915
76. முத்துவீரியம்--கழக வெளியீடு. 1972
77. முருகவேள் பன்னிருதிருமுறை. திருப்புகழ். தொகுதி. 5. பகுதி 1 வ. சு. செங்கல்வராயபிள்ளை உரையுடன். 1955
78. யாப்பருங்கல விருத்தி--கழக வெளியீடு 1973
79. யாழ்நூல்--கரந்தைத் தமிழ்ச்சங்கம்--தஞ்சாவூர். 1974
80. வடசொற்றமிழ் அகரவரிசை--கழக வெளியீடு-1965

81. வீரசோழியம்--பெருந்தேவனார் உரையுடன். கழகவெளியீடு. 1970

82. வெண்பாப்பாட்டியல்--சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை. 1969

83. வைஷ்ணவி சந்நிதி முறை—தொகுதி—2. சன்மார்க்க சங்கம் திருமுல்லை வாயில்-1959

84. ஸ்ரீகாமாட்சி அம்மன் அலங்காரப்பஞ்சகம்--தேவி காமாட்சி தாசன்.

85. ஸ்ரீமத்குமார சுவாமியம்--பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் பாரி அச்சகம். 1966

## ஆய்வேடுகள்

86. தமிழில் இலக்கியப் பொருள். 19ஆம் நூற்றாண்டு ச. சிவகாமி டாக்டர் பட்டத்திற்கான ஆய்வேடு. 1981

87. சொல்லணி--இரா. லலிதகுமாரி, கேரளப்பல்கலைக்கழகத் தமிழ் எம். ஏ. தேர்வுக்கான ஆய்வுக்கட்டுரை. 1965

88. Classified Catalogue of Tamil printed books by John Murdch-1968.